உ
சிவமயம்

# முப்பொருள் விளக்கம்.

அச்சுவேலி

**சிவஸ்ரீ. ச. குமாரசுவாமிக்குருக்கள்**

அவர்களால் ஆக்கப்பெற்று,

ஷை குருக்களவர்களின் பௌத்திரர்

**சிவஸ்ரீ. வை. கனகசபாபதிக்குருக்களால்**

சுன்னுகம்

கலாதேவியந்திரசாலையிற்

பதிப்பிக்கப்பெற்றது.

மூன்றும் பதிப்பு

சௌமிய ஆ ஐப்பசி மீ.

1969.



[விலை ரூபா 3-00

உ
சிவமயம்

# முப்பொருள் விளக்கம்.





அச்சுவேலி
**சிவஸ்ரீ. ச. குமாரசுவாமிக்குருக்கள்**
அவர்களால் ஆக்கப்பெற்று,

ஷை குருக்களவர்களின் பௌத்திரர்
**சிவஸ்ரீ. வை. கனகசபாபதிக்குருக்களால்**

சுன்னாகம்
**கலாதேவீயந்திரசாலையிற்**
பதிப்பிக்கப்பெற்றது.

**மூன்றும் பதிப்பு**

சௌமிய ஸு ஐப்பசி மீ.
**1969.**

 [விலை ரூபா 3-00

உ

சிவமயம்

முதலாம் பதிப்பின்

# அணிந்துரை.

---

யாழ்ப்பாணம்

திருநெல்வேலிச் சைவ ஆசிரியர் கலாசாலைப் பேராசிரியர்

பண்டிதமணி சி. கணபதிப்பிள்ளை அவர்கள்

எழுதியது.

"உலகத்துக்குக் கருத்தா யாவர்? சிவபெருமான்" என்று தொடங்குகின்றது சைவவினாவிடை. "உலகம் என்று ஒன்று உண்டு. அதற்கு ஒரு கருத்தா வேண்டும். அந்த கருத்தா சிவபெருமான்" என்று நிரூபிக்கச் சைவவினாவிடை தலைப்படவில்லை.

"முப்பொருள் விளக்கம்" என்னும் இந்நூல் நிரூபிக்கத் தலைப் பட்டுச் சைவவினாவிடைக்கு ஒரு பாஷியமாய்ச் சிவஞான சித்தி யாரின் சாரமாய் அமைந்திருக்கிறது.

சைவ ஒழுக்கமும் வரன்முறையிற் சைவசித்தாந்த அறிவுங் கை வந்த சைவாசிரியர்களுக்கு, உயர்தர வகுப்பு மாணவர்களின் உள் ளத்திற் சைவ உணர்ச்சியை உதிக்கச் செய்தற்கு, சைவ பொக்கிஷ மகாமண்டபத்தின் ஒரு திறவுகோலாய் இந்நூல் உதவுமென்பது எனது கருத்து.

இதனை உதவி உபகரித்தவர்கள் இப்பொழுதைய சைவ உல கிலே, சிவாகம சமுத்திரத்தில் முழுகித் திளைத்துக் கிரிதீபமாய்ப் பிரகாசிப்பவர்கள் என்பது சைவ உலகு நன்கு அறிந்தது.

திரு. சை. ஆ. க. சாலை.
13-9-55.

சி. கணபதிப்பிள்ளை.

---

## திருக்கேதீசுவர ஆலயப் புனருத்தாரணச் சபைத்தலைவருமான

# கௌரவ சேர். கந்தையா வைத்தியநாதன்

## அவர்கள் முதலாம் பதிப்பிற்கு எழுதியது.

அச்சுவேலி சிவஸ்ரீ. ச. குமாரசுவாமிக் குருக்களையும், அவர்களது சைவப் பணிகளையும் சைவ உலகம் நன்கறியும் "முப்பொருள்விளக்கம்" என்று கூறப்பட்ட இந்நூல் அன்னாரது சைவ சமயப் பற்றுக்கும், ஆழ்ந்த அறிவிற்கும் ஒரு தலைசிறந்த எடுத்துக் காட்டு

சைவசித்தாந்த நெறியே வீடுபேற்றிற்கு நேர்வழியாம். இத் துணைப் பெருமை வாய்ந்த நெறியை எளிதில் யாவரும் கற்றறிந் தொழுகும் வகையில் இந்நூல் அமைந்துள்ளது கிரியைகள், சின்னங்கள் முதலியவற்றைத் தத்துவரீதியாக விளக்கியிருப்பதால் கற்போருக்கு எளிதில் கிரகிக்கக் கூடியதாக இருக்கிறது.

சைவசமய சாஸ்திரங்கள், திருமுறைகள், புராணங்கள் எனப் பட்ட மூன்றும் தனித்தனியே ஆராயப்படுவது வழக்கம். குருக்களவர்கள் இவற்றை ஈண்டு ஒருமுகப்படுத்தி ஆராய்ந்திருப்பது. இவை மனிதனின் உள்ளத்தை ஒருவழிப் படுத்தும் ஒரே நோக்கத்தைக் கொண்டிருப்பதாற் போலும், சாஸ்திர விதிகளை விளக்குவதற்கு புராணங்களிலும் திருமுறைகளிலும் இருந்து தகுந்த உதாரணங்களை எடுத்துக் கையாண்டிருப்பது பாராட்டத்தக்கது. சமய சாஸ்திரங்களின் உண்மைகளே தேவார திருவாசகங்களிலும் பொதிந்துள்ளன என்பதும் அவற்றை விளங்கிக்கொள்வதற்குச் சைவ சித்தாந்தஅறிவு இன்றியமையாதது என்பதும் யாவரும் அறிந்ததே.

ஒன்றை முற்றாக அறிந்தபின்பே அதைப்பற்றிய அறிவு முற்றுப்பெறும். ஒருசமயத்தைப் பற்றி அறியும்போது அதன் ஒரு அங்கத்தை மாத்திரம் கற்பது முற்றறிவாகாது. இது குருடர்கள் யானையின் ஒரு அங்கத்தை மாத்திரம் அறிந்துவிட்டு யானையின் இலக்கணங்களைக் கூற முற்பட்ட கதையை ஒக்கும். எனவே ஒரு சமயத்தின் எல்லா அங்கங்களையும் கற்றறிந்த பின்பே அதில் முற்றறிவு உண்டாகும் என்பது தெளிவு.

உ

சிவமயம்

முதலாம் பதிப்பின்

# உபோற்காதம்.



அநாதிமுத்தபதியாகிய சிவபெருமான் அநாதிபெத்த பசுக்களாகிய ஆன்மாக்கள் பொருட்டு இகபரசாதனங்கட்கேதுவாக அருளிச்செய்த முதனூல்கள் வேதங்களும், ஆகமங்களுமாம். ஏனைய நூல்கள் இவற்றினின்று விரிந்த நூல்களாம்.

சிவாகமங்களுக்கு வழி நூல்கள் மிருகேந்திர முதலிய இருநூற்றேழு உபாகமங்களாம். சிவாகமங்கள் தனித்தனி நான்கு பாதங்களையுடையன. பதிபசுபாசங்களின் உண்மையினையும் அவற்றின் இலக்கணங்களையும், பசுவானது பாசத்தினின்று நீங்கிப் பதியை அடைதற்குச் செய்யப்படும் சாதனைகளையும், சாதனை முற்றுப்பெற்ற பின் நிகழும் முத்தி நிலையையும் விளக்குவது ஞானபாதமாம்.

சிவாகமங்களின் ஞானபாத மூலங்களும் வியாக்கியானங்களும் மிகவிரிவாயிருத்தலின் அவற்றின் உண்மையினை எளிதில் உணரும் வண்ணம் சிவாநுபூதிச் செல்வர்களாகிய பெரியோர்கள் சிலர், சுருக்கமாக எட்டு நூல்களைச் செய்துதவினார்கள். இந்த அஷ்டப் பிரகரணத்தையும் சித்தாந்தசாராவளி முதலியவற்றையும் சிவாகமங்களுக்குச் சார்பு நூல்களென்று பாராட்டிக் கூறுவர் பெரியோர்.

திருவுந்தியார் முதல் சங்கற்ப நிராகரணம் இறுதியாகிய அருணூல்கள் பதினான்கும், சைவாகம ஞானபாதப் பொருளை இனிது விளக்கும். தமிழ்ச் சித்தாந்த சாஸ்திரங்க ளென்று சிறப்பித்துக் கூறப்படுவன. இவை ஆன்மாக்களது பிறவிப்பிணி தீர்த்தற்குத் திவ்விய ஔஷதமாய் நிலவுகின்றன.

இவற்றுக்கு உரை செய்தவர்கள் சிவஞான முனிவர் சிவாக்கிர யோகிகள் முதற் பல்லோராவர்.

இந்த ஞான சாத்திரங்களை முதனூலாகக் கொண்டு செய்யப்பெற்ற நூல்கள் பண்டார சாத்திரங்களும் ஆறுமுக நாவலர் சைவ வினாவிடை முதலியனவுமாம். குமரகுருபர சுவாமிகள் பிரபந்தம் முதலியனவும் சைவசித்தாந்த நுண்பொருள் விளக்கும் சிறந்த தமிழ் நூல்களாம். இந்த நூல்களனைத்தும் சைவ சமயிகளுக் கெல்லாம் கிடைத்தற்கரிய பெரிய சிந்தாமணியாயுள்ளன.

இவ்வாற்றானே, வேதம் ஆகமம் முதலிய எல்லா நூல்களும்

பதிபசு பாசம் என்னும் முப்பொருள் இலக்கணங்களையே கூறப் புகுந்தன என்பது தெற்றென விளங்குகின்றது.

சிவஞானசித்தியார், சிவப்பிரகாசம் என்னும் சாத்திரங்களின் சாரமாக, உயர்தரவகுப்பு மாணக்கர்களுக்குப் பயன்படும் வண்ணம் ஒரு நூல் எழுதிப் பதிப்பிக்குமாறு சைவப்பிரசாரகரும், பலாலி அரசினர் கலாசாலைப் பேராசிரியரும், பண்டிதருமாகிய ஸ்ரீமத் பொ. கிருஷ்ணபிள்ளை அவர்கள் கேட்டுக் கொண்டார்கள். அவர்களது விருப்பத்திற் கியைந்து, முப்பொருள் விளக்கம் என்னும் இந்நூலை எழுதினேன்.

இந்த நூல் இனிது முற்றுப்பெறுமாறு செய்தருளிய விநாயகரையும், சிவபெருமானையும், உமையம்மையாரையும், முருகப்பிரானையும், சமயாசாரியர்களையும், சந்தாளுசாரியர்களையும் திரிகரணங்களாலும் சந்ததம் சிந்தித்து வணங்குகின்றேன்.

சிறிய வாடியிற் பெரியமால் வரைப்பொருள் செறித்தாங்
கறிவு நூல்களின் முடிபெலா மகப்படுத் தவற்றி
னெறியெ லாம்விளக் கியசிவ ஞானபோ தத்தைக்
குறிசெய் தீந்தமி ழாலுரை குரவனைப் பணிவாம்.

அச்சுவேலி,
16-9-55.

இங்ஙனம்
ச. குமாரசுவாமிக் குருக்கள்

---

# பொருளடக்கம்

# பிழை திருத்தம்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 4 | 25 | குருவா லுபய | குருவநா லுபய |
| 9 | 16 | அதிலமநைந்த | அதிலமைந்த |
| 9 | 31 | மருவுத் | மருவுருத் |
| 14 | 24 | ஞகிய | நாயகி |
| 15 | 4 | தம்மிடத்லே | தம்மிடத்திலே |
| 37 | 24 | தடுக்கப்படுத்தல் | தடுக்கப்படுதல் |
| 47 | 15 | அழுந்தமாறு | அழுந்துமாறு |
| 59 | 17 | பாவகங்கள் | பாவங்கள் |
| 64 | 20 | புசிப்பித்தால் | புசிப்பித்தலால் |
| 64 | 22 | கரிய | காரிய |
| 70 | 20 | சுத்ததத்ததத்துவம் | சுத்ததத்துவம் |
| 70 | 26 | வருதரு | வதுதரு |
| 105 | 20 | பௌருத்தம் | பௌத்தம் |
| 112 | 33 | டௌஷ்கராமம் | பௌஷ்கராகமம் |



சிவஸ்ரீ. ச. குமாரசுவாமிக் குருக்கள்.
அச்சுவேலி.

உ

கணபதி துணை

# முப்பொருள் விளக்கம்.

## கணபதி

திருஞானசம்பந்தமூர்த்திநாயனர்.

திருவிராகம். பண்—வியாழக்குறிஞ்சி

திருச்சிற்றம்பலம்

பிடியதனுருவுமை கொளமிகு கரியது
வடிகொடு தனதடி வழிபடு மவரிடர்
கடிகண பதிவர வருளினன் மிகுகொடை
வடிவினர் பயில்வலி வலமுறை யிறையே.

## நடேசர்

பண்—குறிஞ்சி

கற்றுங் கெரியோம்பிக் கலியை வாராமே
செற்ருர் வாழ்தில்லைச் சிற்றம் பலமேய
முற்ரு வெண்டிங்கண் முதல்வன் பாதமே
பற்ரு நின்ருரைப் பற்ரு பாவமே.

## அர்த்தநாரீசுவரர்

திருநாவுக்கரசுநாயனர்.

பண் — பியந்தைக்காந்தாரம்

புதுவிரி பொன்செ யோலை யொருகாதொர் காது
சுரிசங்க நின்று புரள
விதிவிதி வேத கீத மொருபாடு மோத
மொருபாடு மெல்ல நகுமால்

மருவிரி கொன்றை துன்று சடைபாக மாதர்
குழல்பாக மாக வருவர்
இதுவிவர் வண்ண வண்ண மிவள்வண்ண வண்ண
மெழில்வண்ண வண்ண மியல்பே.

சுப்பிரமணியர்

கள்ளி முதுகாட்டி லாடி கண்டாய்
காலனையுங் காலாற் கடந்தான் கண்டாய்
புள்ளி யுழைமானின் தோலான் கண்டாய்
புலியுரிசே ராடைப் புனிதன் கண்டாய்
வெள்ளிமிளிர் பிறைமுடிமேற் சூடி கண்டாய்
வெண்ணீற்றான் கண்டாய் நஞ்செந்தின் மேய
வள்ளி மணாளற்குத் தாதை கண்டாய்
மறைக்காட் டுறையு மணாளன் றானே.

திருச்சிற்றம்பலம்.

---

உ
கணபதி துணை

# முப்பொருள் விளக்கம்

—★—

## * பதியுண்மை

அவனென்றும், அவளென்றும், அதுவென்றும் இவ்வாறு அவயவப் பகுப்புடையதாய்க் கூறப்படும் பிரபஞ்சம், தோன்றி நின்றழியும் இயல்புடைமையினாலே அதனைத் தோற்றுவிப்பதற்கு ஒரு கருத்தா வேண்டப்படும். அக்கருத்தா முன் பிரபஞ்சம் ஒடுங்குதற்கு ஏதுவாய் நின்ற சங்கார காரணரேயாம். அக்காரணர் பிரபஞ்சம் ஒடுங்கியபின்னரும் [1] அநாதிமுத்த சித்துருவாய் நிலைபெற்று நின்று [2] அநாதிபெத்த சித்துருவின் பொருட்டு மீளவும் அப்பிரபஞ்சத்தை முன்போலத் தோற்றுவித்தருளுவர். இவ்வாறு ஒடுக்கியும் தோற்றுவித்தும் செய்வதனால் சங்காரத் தொழிலைச் செய்யும் பரமசிவனே முதற்கடவுள் என்று கூறுவர் அறிஞர்.

## சொரூபலக்கணம்

### முதல்வனது சிறப்பிலக்கணம்

அருவம் அருவுருவம் உருவம் என்னும் முத்திறத் திருமேனிகளைக் கடந்தோராய், ஓரடையாளமும் இல்லாதவராய், மனம் வாக்குக்கு அதீதராய், குணங்களுக்கு மேற்பட்டவராய், ஆனந்தக் குறியாய், அற்புதராய், மலரகிதராய் ஓராதாரமுமில்லாதவராய் ஒருகாலத்தும்சலிப்பற்றவராய், சுகவடிவினராய்,பாச பசுஞானங்களால் அறிதற்கரியவராய், உவமையில்லாதவராய், ஞானமாய், அதிசூக்குமராய், விருப்பு வெறுப்பு இல்லாதவராய், பரஞ்சோதியாய், மூவகை ஆன்மாக்களுக்கும் முத்தித்தானமாய் நிற்பவர் சிவபெருமான் ஒருவரேயென்று சிவாகமங்கள் கூறும்.

---

* பதி — காக்கிவறன்.

1 அநாதிமுத்த சித்துரு — அநாதியே அதாவது இயல்பாகவே பாசங்களினின்றும் விடப்பட்ட ஞானவடிவினன்.

2 அநாதிபெத்தசித்துரு — இயல்பாகவே பாசத்தோடுகூடிய ஞானவடிவினர்.

கந்தபுராணம்

ஊரி லான்குணங் குறியிலான் செயலிலா னுரைக்கும்
பேரி லானொரு முன்னிலான் பின்னிலான் பிறிதோர்
சாரி லான்வரல் போக்கிலான் மேலிலான் றனக்கு
நேரி லானுயிர்க் கடவுளா யென்னுளே நின்றான்.

## முத்திறத்திருமேனி

உருவு செயல் பெயர் முதலியவற்றைப் பொருந் தாத சிவபெருமான் பஞ்சகிருத்தியஞ்செய்து ஆன்மாக்க ளது மும்மலங்களை நீக்கி [1]மோட்சத்தைக் கொடுத்தல் வேண்டுமென்னும் பெருங்கருணையினாலே அருவம், அருவுரு வம், உருவம் என்னும் மூவகைத் திருமேனி கொண்டருளி னார்.

## நவந்தருபேதம்

முப்பத்தாறு தத்துவங்களையும் கடந்து நிற்கும் சுத்தசிவன், ஒவ்வோர் தத்துவங்களில் நின்றுகொண்டு தத் தம் தொழிலைச் செய்யுமுறையில் **சிவம் சத்தி நாதம் விந்து** என அருவத்திருமேனி நான்காயும் **சதாசிவ**மென்னும் அருவுருவத்திருமேனி ஒன்றாயும், **மகேசன் உருத்திரன் விட்டுணு பிரமன்** என உருவத்திருமேனி நான்காயும் ஒன்றி னொன்றாகத் தோன்றி முத்திறத்து ஒன்பது பேதத்தினும் வேற்றுமையின்றி நின்று அவ்வத் தொழிலைச் செய்வர்.

சிவஞானசித்தியார்

சிவஞ் சத்தி நாதம் விந்து சதாசிவன் றிகழு மீச
னுவந்தரு ளுருத்தி ரன்றான் மாலயனொன்றி னொன்றாய்ப்
பவந்தரு மருவ நாலிங் குருவா லுபய மொன்றா
நவந்தரு பேத மேக நாதனே நடிப்ப னென்பர்.

இனித் தோன்றுமுறைமையாவது:- சிற்சத்தியோடு பிரிப்பின்றிநிற்கும் சிவபெருமான் ஆன்மாக்களின் மல நோயைத் தீர்த்தற் பொருட்டுச் சுத்தமாயையில் தொழில் செய்யத்திருவுளங்கொண்ட நிலை **சிவம்**. இதனைப் பரநா தம் என்பர் அவ்வுன்னுதலின் பின் எவ்வாறு தொழில் செப் யவேண்டும் என்று எண்ணிய நிலை **சக்தி** இதனைப் பர விந்து என்பர். நாதம் என்பது ஒலியையும்,

---

1 மோட்சம் – முத்தி, வீடு

விந்து என்பது குறியையும் உணர்த்தும், அதன்பின் எண்ணியவாறே செய்தற்குச் சுத்தமாயையோடு கூடிய நிலை **நாதம்**. அச்சுத்தமாயையோடுகூடிச் செய்யவேண்டு வனவற்றைச் செய்ய எண்ணிய நிலை **விந்து**. முன்னர்க் கூறிய நாதவிந்துக்கள் சுத்தமாயையிற் கூடாத அவதரத்தில் உண்டானமையால் பரநாதம் பரவிந்து எனவும், பின்னர்க் கூறிய நாத விந்துக்கள் சுத்தமாயையோடு கூடிய அவதரத்தில் உண்டானமையின் அபரநாதம் அபரவிந்து எனவும் கூறப்படும். அபரநாதம் அபரவிந்துவையும் சிவம் சத்தி எனக் கூறுதலும் உண்டு. அதன் பின்னர் இன்னின்னவாறு செய்யவேண்டும் என்று எண்ணிய நிலை **சதாசிவம்**. எண்ணியவாறு செய்யுங்கால் அவரவர்கள் கன்மத்தை அனுபவிக்கச் செய்யுமுறைமையில், அனுபவிக்கவேண்டாத கன்மங்களை மறைத்தும் அனுபவிக்கவேண்டியகன்மங்களிலுள்ள குணதோடங்களைக் கொடுத்தலுமாகிய நிலை **மகேசுவரம்**. அவ்வாறு அனுபவிக்குங் காலத்து, இளைப்பொழித்தற்பொருட்டுச் சங்கரித்தலாகிய நிலை **உருத்திரன்**. அனுபவிப்பதற்காக நிலைக்கச்செய்யுநிலை **விட்டுணு**. அனுபவித்தற்குரிய உடல் கருவி உலகம் பொருள் முதலியவற்றைத் தோற்றுவிக்கும் நிலை **பிரமன்**. இதன்மேற் செய்யவேண்டியது ஒன்றுமில்லாமையினாலே ஒன்பது பேதமெனவரையறுத்துக் கூறப்பட்டவாறு காண்க [1]

---

1 இவ் வொன்பது பேதத்திற்கும் உதாரணம் வருமாறு:- அரசன்போற் சுத்தசிவம். அவ்வரசன் உலகத்தைத் தொழிற்படுத்தவேண்டுமென்று எண்ணிய அவதரம் சிவம். எவ்வாறு தொழிற்படுத்தலாமென்றெண்ணிய அவதரம் சத்தி. தன்னுள் அடங்கியுள்ள தொழில் செய்யும் அதிகாரிகளைத் தெரிந்தெடுக்க எண்ணுதல் நாதம், அவ்வதிகாரிகளைத் தெரிந்தெடுத்தல் விந்து. இன்னார் இன்னார் இன்ன இன்ன காரியத்தை இவ்வாறு செய்ய வேண்டும் என்று நியமித்தல் சதாசிவம். செய்யுங்காலத்து, முறைபிறழாதிருக்கச் செய்தல் மகேசுவரம். முறைபிறழ்ந்தாரைத் தண்டித்தலும் அவசியமானபோது அப்புறப்படுத்த வேண்டியவர்களை அப்புறப்படுத்தலும் உருத்திரன். முறைபிறழாதாரைக் காத்தல் விட்டுணு. காப்பதற்காகக் கைத்தொழில் கிருஷி முதலியவற்றை உண்டுபண்ணுதல் பிரமன். இவ்வாறு உவமையில் வைத்து உணர்க. இது ஒரு புடை யுவமையல்லது முற்றுவமையன்று.

சிவம் சத்தி நாதம் விந்து என்னும் அருவத் திருமேனி நான்கும் [1] நிஷ்களம் எனவும் கூறப்படும் இத்திருமேனி யுடன் கூடிய சிவபெருமான் சத்தர் எனப்படுவர். சதாசிவம் என்னும் அருவுருவத்திருமேனி [2] சகள நிஷ்களம் எனவும், உபயம் எனவும்கூறப்படும், இத்திருமேனி யுடன் கூடிய சிவபெருமான் உத்தியுத்தர் எனப்படுவர். மகேசுரன் உருத்திரன் திருமால் பிரமன் என்னும் உருவத்திருமேனி நான்கும் [3] சகளம் எனவும் கூறப்படும். இத்திருமேனியுடன் கூடிய சிவபெருமான் [4] பிரவிருத்தர் எனப்படுவர்.

## சத்தி பேதம்

இவ்வொன்பது பேதத்துள் **சத்தி விந்து** என்னும் இரண்டும் சத்திபேதமாம். ஏனைய சிவபேதம் ஏழினுக்கு முரிய சத்திபேதமும் ஏழாம். அவையாவன;— சிவத்திற்குச் **சத்தியும்** நாதத்திற்கு **விந்துவும்**, சதாசிவனுக்கு **மனோன்மனியும்**, மகேசனுக்கு **மகேசுவரியும்**. உருத்திரனுக்கு **உமையும்** விட்டுணுவுக்கு **இலக்குமியும்**. பிரமனுக்குச் **சரஸ்வதியுமாம்**. பரமசிவன் சிவபேதமேழினும் நின்று நடாத்தும்போதெல்லாம் அவரோடு பிரிவின்றி நிற்கும் பராசத்தியும் அவ்வப்பெயர்பொருந்தித் துணையாய் நின்று நடாத்தும்,

**சிவஞானசித்தியார்**

சத்தியாய் விந்து சத்தி யாய்மனோன் மனிதா னாகி
யொத்துறு மகேசை யாகி யுமைதிரு வாணி யாகி
வைத்துறுஞ் சிவாதிக் கிங்ஙன் வருஞ்சத்தி யொருத்தி யாகு
மெத்திற நின்றா ணீச னத்திற மவளு நிற்பள்.

---

1 நிஷ்களம் = வடிவில்லது.

2 சகளம் நிஷ்களம் என்னுமிவ்விரு தன்மையுங் கூடுதலால் சகள நிட்களம்; மகாலிங்கம்.

3 களம் = வடிவம். சகளம் = வடிவத்துடன் கூடியது.

4 சத்தர் – விந்துவின் காரியங்களை ஒடுக்கியிருப்பவர். உத்தியுத்தர் – விந்துவின் காரியங்களில் முயன்றவர்.
பிரவிருத்தர் – விந்துவின் காரியங்களைத் தொடங்கினவர்.

பராசத்தியானது நாத முதலிய சிவபேதம் ஏழினுங் கூடியிருக்கும். அவ்வாறே சுத்த சிவமானது சத்திமுதலிய சத்திபேதம் ஏழினையுங் வாயிலாகக்கொண்டு நிற்கும். இவ்வாறு சத்தியும் சிவமும் மரமும் வைரமும் போல ஒப்பக்கூடி நிற்றலால், சத்தியாற்றரப்படும் எல்லாத்திருமேனியும் சத்தி சிவம் இரண்டிற்கும் பொது வடிவேயாம். அவ்வாறு கூடிப் பிரிப்பின்றி நிற்பினும், சத்தியே சத்தனுக்குத் தேவியுமாம். ஆதலால், சத்தி சிவத்திற்குரிய வடிவு விசேடம் குணவிசேடம் பற்றிச் சத்திபேதம் சிவபேதம் என்றாயின.

அக்கினி பொருளால் ஒன்றாயினும் வடிவால் செம்மையென்றும் குணத்தால் சூடு என்றும் பிரித்தெண்ணப்படுமாறு போலப் பரம்பொருளொன்றேயாயினும் எவற்றையுங் கடந்துநிற்கும் ஒளியாகிய வடிவாற் சிவமென்றும், எவற்றுடனுங் கலந்து அவைகளைத்தன்பால் இழுக்கும் வலிமையாகிய குணத்தாற் சத்தி யெனவும் பிரித்துக் கூறப்படும்.

சிவத்தினின்று சத்தி தோன்றும். சத்தியினின்று சாதாக்கியம் தோன்றும். சாதாக்கியமானது சத்தியும் சிவமும் கூடிய நிலையாம் சத்தி சிவமாகிய இருவரும் கூடிய தனுலேயே உலகத்திலே இயங்கியற் பொருள் நிலையியற் பொருளாகிய பிரபஞ்சங்கள் தோன்றுகின்றன. [1] இவ்வாறுதோன்றினும் சக்தியோடு கூடிநின்ற சிவபெருமான் நித்தியப் பிரமசாரியாவர். சிவசத்தி நித்திய கன்னிகையாவர். சத்தியும் சிவமுமாய் நின்று செய்யும் செயல்களெல்லாம் நம்மனோர் பொருட்டாக நடித்துக்காட்டும் நாடகமாத்திரையேயன்றிப் பிறிதில்லை என்பது முற்றவ விசேடத்தால் முதல்வன் அருள்பெற்ற ஞானிகட்கு விளங்கும்.

**திருவாசகம்.**

மின்னிடைச் செந்துவர்வாய்க் கருங்கண்
  வெண்ணகைப் பண்ணமர் மென்மொழியீர்
என்னுடையாரமுதெங் களப்பன்
  எம்பெருமா னிமவான் மகட்குத்

---

1 சிவஞானசித்தியார் உ-ச-எஎ தமக்கென விருப்பின்றி ஆன்மாக்களின் பொருட்டு எல்லாம் செய்தலால் சிவன் பிரமசாரி எனவும், சத்தி கன்னிகை எனவும் கூறப்பட்டது.

தன்னுடைக் 1 **கேள்வன் மகன் தகப்பன்**
**தமைய** னெம்மையன் தாள்கள் பாடிப்
பொன்னுடைப் பூண்முலை மங்கை நல்லீர்
பொற்றிருச் சுண்ண மிடித்து நாமே.

சத்தியாவது, அக்கினியிற் சூடும் பூவின் மணமும் பரிதியிற் கிரணமும்போல் சிவத்தோடு பிரிவின்றி உள்ளதாகிய வல்லமையாம். அதன் வடிவம் ஞானமேயாம். அந்த ஞானமே **பராசத்தி** யெனப்படும். அந்த ஞானம் ஆன்மாக்களுக்கு மலபரிபாகம் வருதற்பொருட்டுப் பஞ்சகிருத்தியம் செய்தலைக்குறித்துத் **திரோதான சத்தி** யென நின்று **இச்சாசத்தி ஞானசத்தி கிரியாசத்தி** யெனத் தொழிற்படும். பஞ்சகிருத்தியத்தைச் [2] சங்கற்பித்த சிவபெருமானிலிருந்து தோன்றிய இவர்கள் நிஷ்கள சத்திகள் எனப்படுவர்.

## அருவுருவத்திருமேனி

### சாதாக்கியம்

சாதாக்கியம் என்பது எப்பொழுதும் புகழப்படுவது எனப் பொருள்படும். எனவே நாமரூபாதிகள் இல்லாத சுத்த சிவனுர் நாமரூபாதிகள் உடையவராய் அன்பர்களாற் புகழப்படுவர் என்பது கருத்து. சாதாக்கியங்கள் சிவசாதாக்கியம், அமூர்த்தி சாதாக்கியம், மூர்த்திசாதாக்

---

1 சிவபெருமான் உமாதேவியாருக்குக் ''கேள்வன் மகன் தகப்பன் தமையன்'' என்றது என்னையெனில்; உமை, சகளமகேசுரமூர்த்திக்குப் போக சத்தியாயிருத்தலின், கேள்வன் எனவும் சத்தியிற் சகள நிஷ்கள சாதாக்கியந் தோன்றினமையின், சாதாக்கியர் மகன் எனவும், சிவத்திற் சத்தி தோன்றினமையின் சிவம் தகப்பன் எனவும், சிவத்தோடு பிரிப்பின்றி நிற்கும் வல்லமையாதலின் தமையனெனவும் முறைபற்றிக் கூறியவாறு காண்க.

குமரகுருபரசுவாமிகள்:-

கனகமார் கவின்செய் மன்றில்
அநகநா டகற்கெம் மன்னை
மனைவி தாய் தங்கை மகள்.

2 சங்கற்பித்தல் – எண்ணுதல்.

கியம், மூர்த்திசாதாக்கியம், கர்த்திருசாதாக்கியம், கன்ம சாதாக்கியம் என ஐந்தாம். பராசத்தி முதலிய பஞ்ச சத்திகளிலுமிருந்து பஞ்ச சாதாக்கியங்களும் தோன்றியன.[1]

சாந்தியதீதை எனப்பெயரிய பராசத்தியினம்சமாய் **சிவசாதாக்கியம்** தோன்றியது. இது அதி சூக்குமமாய், அளவிலாச் சோதிமயமாய் மின்னல்போல் விளங்கி வியாபித்திருப்பதாகும். சாந்தி எனப் பெயரிய ஆதிசத்தியினம்சமாய், **அமூர்த்தி சாதாக்கியம்** தோன்றியது. இதுகோடி சூரியப்பிரகாசமாய், அரூபியாய், லிங்காகாரமாய் சோதிக்குள் அமைந்த மூர்த்தியாயிருக்கும். வித்தை எனப்பெயரிய இச்சாசத்தியினம்சமாய், **மூர்த்தி சாதாக்கியம்** தோன்றியது. இச் சாதாக்கியம் காலாக்கினியை நிகர்த்த பிரகாசத்தையுடையதாய், லிங்கவடிவாகி, அதன்மேற் பாகத்தில் ஒரு திருமுகமும் அதிலமைந்த முக்கண்களும் உடையதாயிருக்கும். பிரதிட்டை எனப்பெயரிய ஞானசத்தியினம்சமாய், **கர்த்திருசாதாக்கியம்** தோன்றியது இது பளிங்கொளியாய், திவ்விய லிங்கமுமாய், மத்தியிலே நான்கு முகங்களும் பன்னிரு கண்களும், எட்டுக் கரங்களுமுடையதாய்க் குறைவற்ற இலக்கணமுடையதாயிருக்கும். நிவிர்த்திஎனப்பெயரிய கிரியா சத்தியினம்சமாய்க் **கன்மசாதாக்கியம**் தோற்றியது.

சிவசாதாக்கியம் முதலிய நான்கும், ஒன்றையொன்று பற்றி, ஐந்தாவதாகிய கன்மசாதாக்கியத்தை அடைந்திருத்தலின், இது மற்றைய சாதாக்கியங்களிலும் விசேஷமுடையது. இக் கன்மசாதாக்கியம் நாதமயமாகிய லிங்கமும் பிந்துமயமாகிய பீடமும் கூடியதாய்ப் பஞ்சகிருத்தியத்தையுடையதாய் இருக்கும். கன்மசாதாக்கியர்

---

1 கந்தபுராணம்

**ஐந்தியற் சத்திக**ளாயி னோர்தமைத்
தந்தது **மருவுத்** தாங்கியவ்வழிச்
சிந்தனை யருச்சனை செய்து யாவரு
முய்ந்திடச் **சதாசிவ வுருவைந் துற்றதும்,**

ஐந்தியற் சத்திகள்— பஞ்சசத்திகள், **அருவுரு**—சகள நிஷ்களம். சதாசிவ உரு ஐந்து—பஞ்ச சாதாக்கியம்]

இலிங்கமும் பீடமுமாயிருப்பினும், ஐந்து திருமுகமும், பத்துத் திருக்கரங்களு முடையவராய்த் தியானரூபியா யிருப்பர்.

சிவபெருமான் ஆன்மாக்களுடைய தியான பூசை யின்நிமித்தமாக, அருவுருவத் திருமேனியைக் கொண்ட நிலை ஆவுடையாளுடன் கூடிய இலிங்கமாம்.

சைவசமயநெறி

நிட்களன்று னன்பா னினைந்தருச்சிக் கச்சகள
நிட்களனு ணிமலனே.

[1] இலிங்கத்திலே சிருட்டிகாலத்தில் தோற்றமும், சங்காரகாலத்தில் ஒடுக்கமுமாம். [2] ' சங்கார காலத்தில் சமஸ்த சேதனுசேதனப் பிரபஞ்சங்களும் லயமடைந்து பின் சிருஷ்டிகாலத்தில் அங்ஙனம் உற்பத்தியாகின்றமை யினுல், லிங்கம் எனப்படும்.'' என்று சுப்பிரபேதாகமம் கூறுகின்றது. படைத்தல் முதலியவற்றுல் உலகத்தைச் சித்திரிப்பதாகிய பரமேசுரப்பிரபாவமே இலிங்கம் எனப் படும் எனினுமமையும். [3]

ஞானசத்தியாகிய சிவலிங்கத்தின் கீழ்க்காணப்படும் ஆவுடையாள் கிரியாசத்தியைக் குறிக்கும். பரவெளியைக் குறிக்கும் சிவலிங்கத்திலே எப்பொழுதுமோர் அசை வுண்டு. அதுவே பராசத்தியாகும், ஆன்மாக்களின் பாசத் தைக் கெடுப்பதற்காக அசைதற்சத்தி லிங்கத்தைச்சுற்றிக் கொண்டிருக்கிறது. அவ்வசைவு லிங்கத்தில் உண்டென் பதை உணர்த்துவதற்கு ஆவுடையாள் லிங்கத்தைச் சுற்றிச் கீழடங்கியமைந்திருக்கிறது. ஆவுடையாளின் ஓர் பக்கத்திலே நீண்டிருக்கும் கோமுகியானது, ஆன் மாக்களைத் திருநோக்கம் செய்கிற குறிப்பாக அமைந் திருக்கிறது.

---

கந்தபுராணம்

1 அருளுரு வாகியே யகில மாவிக
டருவதுங் கொள்வது மாகித் தாணுவா
யுருவரு வாகிய வொப்பில் பேரொளித்
திருவுரு வொன்றினைச் சிவனுக் காக்கினுன்.

2 லிங்—ஒடுக்கம்; கம்—தோற்றம்.

3 லிங்க—சித்திரித்தல்.

இலிங்கம் பிரணவ வடிவாயுள்ளது. அது பிரமன், விட்டுணு, உருத்திரன், மகேசன், சதாசிவன், விந்து, நாதம், சத்தி, சிவன், வடிவாகி நின்று வழிபடுவோருக்குப் பலன் கொடுக்கும். லிங்கம் என்பது சிவமேயாம். சிவத்துக்குப் பெயராகிய இலிங்கம் என்னும் பதம் உபசாரத்தால் பக்குவம்நோக்கி ஆன்மாக்களின் தியான பூசை நிமித்தம் அச்சிவம் விளங்கப்பெறும் ஆதாரமாகிய சைலமுதலியவற்றிற்கும் வழங்கும் [சைலம்—சிலையாலாகியது]

---

## உருவத்திருமேனி

சிவபெருமான் ஆன்மாக்களைப் பந்திப்பனவும் விடுவனவுமாகிய சொல்லும் பொருளுமாய பிரபஞ்சப் பொருள்கள் அல்லாதவராதலானும், தோற்றமும் அழிவும் இல்லாதவர் ஆதலானும், அளந்தறியப்படாதவர் ஆதலானும், இன்னவடிவினரென்றும் இன்ன வடிவத்தைக் கொள்ளுவரென்றும், இன்ன வடிவத்தைக் கொள்ள மாட்டார் என்றும் கூறுவதற்கு ஆசங்கையும் உத்தரமும் இல்லையாம்,

சிவபெருமானும் உயிர்களும் சித்துப்பொருள்களாயினும் முதல்வனுர் சூக்குமசித்துப்பொருள்; உயிர்கள் தூலசித்துப்பொருள்கள். உயிர்கள் தாம் நினைத்த தொன்ருக வரற்கேற்ற ஆற்றல் இல்லாதன; சிவபெருமான் அளவிலாற்றல் உடையவர். சிவபெருமான் முற்றறிவும் முற்றுத்தொழிலுமுடையவர்; உயிர்கள் சிற்றறிவும் சிறுதொழிலுமுடையன. இறைவனுர் இயல்பாகவே மலத்தினீங்கினவர் உயிர்கள் அநாதியே மலத்தோடு கூடியன. இங்ஙனம் பரமசிவன் உயிர்களின் தன்மை இல்லாதவராதலால், அவர் நினைத்தவடிவங்களை எடுக்கும் இயல்புடையவர். ஆதலாற் சிவபெருமானுடைய திருமேனி சத்தி வடிவமேயாம்.

அநாதி மலமுத்த சித்துருவாகிய கடவுள், ஆன்மாக்கள் பொருட்டுக் கருணையினுல் உருவத்திருமேனி கொண்டு வேதாகமங்களை உபதேசித்தருளாராயின், ஆன்

மாக்கள் பதி பசு பாசங்களின் இயல்புணர்ந்து முத்தி யடைதல் கூடாதாகும். அன்றியும் குருபரம்பரையாக அவை உபதேசிக்கப்பட்டு வருதலும் இல்லையாகும்.

உருவத்திருமேனிகொண்டு சிவபிரானால் அருளிச் செய்யப் பட்ட வேதாகமங்கள் எமக்கு எவ்விதம் கிடைத்தன. எனின், சதாசிவமூர்த்தி [1] அஷ்டவித்தியேசுரரில் தலைவராகிய அநந்ததேவருக்கு உபதேசிக்க, அவரால் ஸ்ரீகண்டருக்கும், அவரால் விட்டுணுவுக்கும், விட்டுணுவால் பிரமாவுக்கும், பிரமாவால் முனிவர்களுக்கும், முனிவரால் மானுடர்க்கும், மானுடரால் மானுடர்க்கும் உபதேசிக்கப்பட்டு வந்தனவாம்.

இன்னும் படைப்பாகிய தொழிலுக்கு வாதுளாகமத்தினோதியவாறே, அசையும் பொருளும் அசையாத பொருளுமாகிய உலகங்கள் முதல்வரது திருமேனியில் ஒவ்வொரு உறுப்புக்களினின்று தோன்றுமாறு செய்யவேண்டுமாதலானும், பக்தர்கட்கு இருவினையொப்பு வந்தவிடத்து அனுக்கிரகத்தின் பொருட்டுச் செய்யும் மறைத்தற் றொழிலுக்கு ஊன நடனமியற்ற வேண்டுமாதலானும், திதி கிருத்தியத்துக்கு அருளாகிய உமாதேவியாரோடு இயையவேண்டுமாதலானும், அனுக்கிரகத்திற்கு யோகிருந்து காட்ட வேண்டுமாதலானும், சங்காரத்திற்குத் தோன்றின முறையே அவ்வுறுப்புக்களில் ஒடுங்கவேண்டுமாதல்ானும். உருவத்திருமேனி முதல்வருக்கு இன்றியமையாது வேண்டப்படும்.

## 2 அங்கபேதம்

சிவபெருமானுடைய திருவுருவம் அருளாதலின், சிரம், முதலிய அங்கங்களும், திருமார்பு முதலிய பிரத்தியங்கங்களும், சூல முதலிய ஆயுதங்களாகிய சாங்கங்களும் வஸ்திரம் முதலிய உபாங்கங்களும் சத்தி வடிவேயாம். இவ்வருளாகிய வடிவெல்லாம் உயிர்களின் பொருட்

1 அட்டவித்தியேசுரர் விஞ்ஞானகலராயிருந்து மலபரிபாகம் எய்தப்பெற்றும், அதிகாரம் செய்யும் இச்சையால் ஈசுரதத்துவத்தில் அதிகாரம் செய்துகொண்டிருக்கும் எண்மர்.

2 வாதுளாகமம்

டன்றிச் சிறிதும் தம்பொருட்டுக் கொள்பவர் அல்லர். சிரசு, முகம், இருதயம் என்பன அங்கங்களாம். திருமார்பு கழுத்து, தனம், புயம், நாபி, குய்யம், உதரம், கண்கள், நாசி, வாய், காதுகள், கரங்கள், பாதங்கள், விரல்கள், தொடைகள், முழந்தாள்கள், கணைக்கால்கள் ஆகிய இவைபிரத்தியங்கங்களாம். சூலம், மழு, வாள், குலிசம், அபயம், அக்கினி, அங்குசம், மணி, சர்ப்பம் பாசம், முதலியவை சாங்கங்களாம். வஸ்திரம், உபவீதம், மாலை, கந்தம், ஆபரணம் முதலியவை உபாங்கங்களாம். [அங்கம் திருமேனி; பிரத்தியங்கம்—அத்திருமேனியிலுள்ள உறுப்புக்கள், சாங்கம்-அங்கத்தோடுகூடியது; உபாங்கம்-அங்கத்தை விட்டு நீங்காது அதன் சமீபத்தில் இருப்பது ]

அநாதியே சிவபெருமானுக்குச் சுதந்திரமாயுள்ள சிவகரணமே **சிகையாம்.** ''ஓங்கள வின்மை யுயர்சிகை'' என்பது சதாசிவரூபம். பிரமா முதலிய மூர்த்திகளினிடமாக இருந்து பஞ்சகிருத்தியத்தைச் செய்தருளும் பரம சிவனுடைய சுத்தகுணங்களாகிய ஈசானுதி ஐந்துமந்திரங்களும் சதாசிவமூர்த்திக்கு ஐந்து **திருமுகங்களாம்.** முத்தான்மாக்களுக்கு மெய்ஞ்ஞானத்தை உணர்த்தும் திருவருட்சத்தி இருதயமாம். **திருவடிகள்** ஞானசத்தி கிரியா சத்திகளைக் குறிப்பனவாம்.

## நீலகண்டம்

சிவபெருமான் நஞ்சைத் திருக்கண்டத்தில் நிறுத்தியருளியது சகல புவனங்களிலுமுள்ள எல்லா ஆன்மாக்களும், பேரிடரை நீக்கும் தமது பெருங்கருணைத் திறத்தை உணர்ந்து உய்யும் பொருட்டாம். [1]

பெரியபுராணம்

''புவனங்க ளுய்ய வையர் பொங்குநஞ் சுண்ண யாஞ்செய்
தவநின்று தடுத்த தென்னத் தகைந்துதான் தரித்த தென்று
சிவனெந்தை கண்டந் தன்னைத் திருநீல கண்ட மென்பார்.''

1 ''கறை மிடறணியலு மணிந்தன் றக்கறை—மறைநவி லந்தணர் நுவலவும் படுமே''—புறநானூறு.'' அக்கறுப்பு தான் மறுவாயும் வானோரை உய்யக்கொண்டமையின், வேதத்தைப் பயிலும் அந்தணராற் புகழவும்படும்.'' ஷை உரை.

சிவபெருமான் ஆலாகலத்தை அமுதுசெய்தருளியது அரிபிரமேந்திராதி தேவர்களெல்லாம இறவாதிருக்க வேண்டு மென்னும் பெருங்கருணையுடையவர் என்பதை விளக்குவதாம். அச்செயல் இதர தேவர்களால் நிறை வேற்றமுடியாத அரிய செயல்களை நிறைவேற்றியருளுந லாகிய அப்பெருமானது பேராண்மையைக் குறிப்பதுமாம் [1] அரிபிரமாதி தேவர்கள் சமஸ்தரும் மரித்தலுடையவர் என்பதும் சிவபெருமான் ஒருவரே மரியாதவர் என்பதும் ஆலாகலத்தை அமுதுசெய்தமையாற் பெறப்பட்ட மற்றோ ருண்மையாகும்.

## திரிநேத்திரம்

சிவபெருமான் திரிநேத்திரம் கொண்டது, சூரியன், சந்திரன், அக்கினி என்னும் முச்சுடர்களையும் அதிட்டிக் கின்றவர் தாமென்பதை உணர்த்துவதற்காகும். [2] "சுடர் மூன்றுங் கண்மூன்ருக் கொண்டான்ருன் காண்" என்பது தேவாரம். [3] முதல்வி உளமகிழ்ச்சியினுல் முதல்வனுரது திருக்கண் புதைத்த திருவிளையாட்டின்கண் எவ்விடத்து மிருள் பரந்து மூடவும், இறைவர் உலகத்திலுள்ளார்க்கு நெற்றிக்கண்ணுல் ஒளியைத் தந்தருளிய தன்மையினுல், உலகத்திலுள்ள ஒளிகளெல்லாம் அவரது திருமேனிப் பிரகாசமேயாம்.

சிவஞானசித்தியார்

நாயகன் கண்ண யப்பா ளுகிய புதைப்ப வெங்கும்
பாயிரு ளாகி மூடப் பரிந்துல கினுக்கு நெற்றித்
தூயநேத் திரத்தி னுலே சுடரொளி கொடுத்த பண்பிற்
றேயமா ரொளிக ளெல்லாஞ் சிவனுருத் தேச தென்னர்.

---

1 "பால்புரை பிறைநுதற் பொலிந்த சென்னி
நீல மணிமிடற் றொருவன் போல
மன்னுக பெரும......"—புறநானூறு. "நீல மணி மிடற் றொருவன்போல என்றகருத்து சாதற்குக் காரணமாகிய நஞ் சுண்டும் நிலைபெற்றிருந்தாற்போல நீயும் சாவாதிருத்தல் வேண் டும் என்பதாம்." ஷெ உரை.

2 திருநாவுக்கரசுநாயனுர் திருத்தாண்டகம் 'ஏவணச்சிலையான்...';

3 இச்சரித்திரத்தை "மலைமடந்தை விளையாடி" என்னும் சுந்தர மூர்த்திநாயனுர் தேவாரத்திலும், கந்தபுராணத்திலும் காண்க,

மூன்று திருக்கண்களையு முதல்வன் கொண்டது காருகபத்தியம், ஆகவனீயம், தட்சிணாக்கினி என்னும் முத்தீவேள்வியில் அவையாவும் தம்மிடத்லே பொருந்தியுள்ளன என்பதையும், இச்சாசத்தி, ஞானசத்தி, கிரியா சத்திகளை யுடையவர் தாம் என்பதையும், உணர்த்துவதற்காம என்றும் உண்மை நூல்கள் கூறுகின்றன.

பட்டணத்தடிகள்

முக்கண னென்பது முத்தீ வேள்வியிற்
றொக்க தென்னிடை யென்பதோர் சுருக்கே.

சதாசிவரூபம்

இவர்தா—மெல்லாமறியு மியல்பது நயனம்.

## சந்திரன்

சிவபெருமான் சந்திரனை அணிந்தது சர்வஞ்ஞத்துவர் தாமென்பதையும் ஆன்மாக்களது பிறப்பிறப்புக்களை நீக்கி மேலான முத்தியைக் கொடுப்பவர் தாமென்பதையும் அறிவித்த உண்மையாகும்.

தூமதி சடைமிசைச் சூடுதல் தூநெறி
யாமதி யானென வமைந்தவாறே.

## கங்கை

உமாதேவியாரது திருக்கரத்திலுள்ள பத்து விரல்களினின்றும் தோன்றிய கங்கையானது உலகத்தை அழியாதபடி அதன்வேகத்தை அடக்கித் தமது திருச்சடையில் தரித்தருளினமையால் ஆன்மாக்கள் ஆனந்தக் கடலில் ஆழ்கின்றனர். [1] அகங்காரத்தை அடக்கும் ஆற்றலுடைமையை இது குறிக்கின்றது.

திருவாசகம்

மலைமகளை யொருபாகம் வைத்தலுமே மற்றொருத்தி
சலமுகத்தா லவன்சடையிற் பாயுமது வென்னேடீ
சலமுகத்தா லவன்சடையிற் பாய்ந்திலளேற் றரணியெலாம்
பிலமுகத்தே புகப்பாய்ந்து பெருங்கேடாஞ் சாழலோ.

---

1 இச்சரித்திரத்தைக் கந்தபுராணத்துட் காண்க.

## சூலம்

சனனி ரோதயித்திரி ஆரிணி என்னும் முச்சத்தி வடிவினதாகிய சூலப்படையைச் சிவபெருமான் ஏந்தியருளியது முத்தொழிலுக்கும் முதல்வராகிய முழுமுதற் கடவுள் தாம் ஒருவரே என்பதையும், [1] இச்சாசத்தியையும் ஞானசத்தியையும் கிரியாசத்தியையும் உடையவர் தாமென்பதையும் உணர்த்தும் அறிகுறியாம்.

பதினொராந்திருமுறை
மூவிலை யொருதாட் சூல மேந்துதன்
மூவரும் யானென மொழிந்த வாறே.

## மான்

மானினது நான்கு கால்களும் நான்கு வேதங்களெனக்கொள்ளக் கிடத்தலால், அவ்வேதங்களுக்கு நாதர் தாமென்பதை உணர்த்துதற்காக மானேந்தினர்.

வேத மான்மறியேந்துதன் மற்றத
னாத னெனென நவிற்றுமாறே.

## மழு வாள் முதலியவற்றைக் கொண்டது.

[2] சிவபெருமான் சத்தியமுடையவர் தாம் என்பதை உணர்த்தற்கு **மழுவேந்தினர்** என்பர்.

ஆன்மாக்களின் பிறப்பறுப்பவரும், எல்லாரையும் அடக்கியாளலால் வந்த புகழுடையவரும் தாமென்பதையுணர்த்துவதற்காக [3] ஞானவடிவாகிய வாளை ஏந்தினர்.

எவராலும் கெடுத்தற்கரியவர் தாம் என்பதைக் காட்டுவதற்காக **குலிசத்தைக்** கொண்டனர்

உலகத்துன்பத்துக்குப் பயப்பட வேண்டாமென்று அனுக்கிரகம் செய்யும் குணத்தை [3] **அபயகரம்** குறிக்கும்.

1 ஆன்மாக்களுக்குப் பேரின்ப வீடளிக்க விரும்பும் விருப்பம் இச்சாசத்தி, அதற்கு வேண்டுவனவற்றை அறியும் அறிவு ஞானசத்தி, அறிந்து செய்யும் செயல் கிரியாசத்தி.

2 வாதுளாகமம் தத்துவபேதபடலம்.

3 ''ஞானவாளேந்துமையர்''—திருவாசகம்.

4 அபயகரமானது உலகங்களைக் காக்கிறசத்தி — காமிக ஆகமம்.

ஆன்மாக்களின் கன்மத்துக்கிடாகப் போகமுத்திகளைக் கொடுப்பவர் என்பதை **வரதகரம்** உணர்த்தும்.

[1] சர்ப்பத்தினுடைய விரிவு சுருக்கம்போலப் பிரபஞ்சத்தோற்றமொடுக்கம் இருப்பதால், உலகத்துக்கு நிமித்தகாரணர் தாம் என்பதைஅறிவித்தற்காகக் குண்டலினி சத்தி ரூபமாகிய பாம்பைப் பூண்டனர்.

ஆன்மாக்களுக்கு மலத்தை யூட்டுவிப்பவர் தாம் என்பதை அறிவித்தற்காக மாயாரூபமாகிய பாசத்தைத் தரித்தனர். [2] **அங்குசம்** திரோபவ கிருத்தியத்தைச் செய்பவர் என்பதையும், **கண்டாமணி** நாதமயமாயிருப்பவர் என்பதையும், **அக்கினி** ஆன்மாக்களைப் பந்தித்த பாசங்களைச் சங்கரிப்பவர் என்பதையும், **உடுக்கை** எல்லா உலகங்களையும் சிருட்டிப்பவர் என்பதையும், **நீலோற்பலம்** சங்கற்ப விகற்பமாகிய மனதத்துவத்தை நடாத்தும் குணமுடையவர் என்பதையும் உணர்த்தும்.

[3] **திருப்புன்முறுவல்** ஆன்மாக்களது சஞ்சிதம், பிராரத்தம். ஆகாமியம் ஆகிய மூவகைத் துயரத்தையும் நீக்கியருளும் குறிப்பாகும்.

வேதாந்தப்பொருளாயுள்ளவரும், அதனைக் கொடுப்பவரும் தாமென்பதைக் காட்டும் குறிப்பாக **உபவீதத்தைத்** தாங்கியருளினர். பிரபஞ்சத்தை மறைக்கும் திரோபவ கிருத்தியத்தைச் செய்து ஆன்மாக்களது ஆணவமலசத்திகளை மேலிடாமல் அமிழ்த்துபவர் சிவபெருமானே என்பதனை அவரது முயலகனை **ஊன்றியதிருப்பாதம்** காட்டும். **தூக்கியதிருவடி** அனுக்கிரகத்தை உணர்த்தும்.

## கொன்றை - பரிவட்டம் - சிலப்பு - வீரக்கழல்.

கொன்றை முதலிய மாலையும் பரிவட்டமும் தரித்தது ஓங்காரப் பொருளாயிருப்பவரும் திரோபவ கிருத்தியம்

---

1 'போர்ப்பனையானை யுரித்த பிரான்' என்னும் தேவாரம் காண்க.

2 அங்குசம்—விரிவைக்குறிக்குமென்பதுமாம்.

3 ''இடர்மூன்று மிழித்தருளு மிழமுறுவன் முகமலரிலங்க'' என்பது சிவதருமோத்தரம்,

செய்பவரும் என்பதைக் குறிக்கும். **சிலம்பையும் வீரக் கழலையுந்** தரித்தமை ஆன்மாக்களைச் சோரமாகத் தன் வசப்படுத்துகின்ற முன்னை வினைகளை வென்று பிறவித் துன்பத்தை நீக்குபவர் என்பதை உணர்த்துவதற் காகும்.[1]

## இடப வாகனம்.

தருமதேவதையையும் ஞானத்தையும் திருமாலையும் இடபமாகக் கொண்டது தரும பரிபாலகரும், தருமவடி வினரும், ஞானவடிவினரும், விட்டுணுவுக்கு மேலானவரும் தாமென்பதனை அறிவுறுத்துவதற்காகும்.

அறனுரு வாகிய வானே றூர்தல்
இறையவ னியானென வியற்று மாறே.

## திருவாசி.

சிவமூர்த்த முதலிய வடிவங்களைச் சூழ்ந்து விளங்கும் திருவாசியை நோக்குமிடத்து, அதனுண்மை பிரணவமாகக் காணப்படும். அதனால் எல்லா உலகங்களும் எல்லாச்சுருதி களும் பிரணவத்தினின்றுந் தோன்றி ஒடுங்குமென்பதும், பிரணவம் பிரமன் முதலிய தேவர்களுக்குப்பிறப்பிடமாய், சிவபெருமானுக்கே இருப்பிடமா யுள்ளதென்பதும், அஃதன் பொருளாயிருப்பவர் சிவபெருமானே என்பதும் அறியப் படும்.

**உண்மை விளக்கம்.**

ஓங்கார மேநற் றிருவாசி யுற்றதனி
னீங்கா வெழுத்தே நிறைசுடரா—மாங்கார
மற்றூ ரறிவரணி யம்பலத்தா னாடலிது
பெற்றார் பிறப்பற்றார் பின்.

சிவபெருமான் இவைகளைக் கொண்டருளியமை தம் பயன் கருதியன்று; சிற்றறிவினர்களாகிய ஆன்மாக்களுக்கு அறிவித்து முத்திகொடுக்குமாறு கொண்ட திருச்சின்னங் களேயாம்.

---

1 போற்றிப்பஃறொடை;—“வீட்டின்ப — வெள்ளத் தழுத்தி விடுந்தா ளினுமடியா — ருள்ளத்தி னும்பிரியா வொண்சிலம்பும்—கள் ளவினை - வென்று பிறப்பறுக்கச் சாத்தியவீ ரக்கழலும்,,

கந்தபுராணம்.

ஆதலாற்றனை வியப்பதற் கன்றவை யணித
லீத லாதொரு திறமுள தியாவரு மெவர்க்கு
நாத னேயிவ னென்றுதன் பாங்கரே நண்ணீத்
தீதெலாமொரீஇ முத்திபெற் றுய்ந்திடுஞ் செயலே.

---

## மகேசுவரவடிவங்கள்

மகேசுவர வடிவங்கள் சந்திரசேகரர், உமாமகேசுவரர், இடபாரூடர், கல்யாணசுந்தரர், சபாபதி, பிக்ஷாடனர், காமாரி, காலாரி, திரிபுராரி சலந்தராரி மாதங்காரி, வீரபத்திரர், அரியர்த்தர், அர்த்தநாரீசுரர், கிராதர், கங்காளர், சண்டேசானுக்கிரகர், நீலகண்டர், சக்கரப்பிரதர், கயமுகானுக்கிரகர், சோமாஸ்கந்தர், ஏகபாதர், சுகாசீனர், தக்ஷிணாமூர்த்தி, லிங்கோற்பவர் என இருபத்தைந்தாம்.

இவ் வடிவங்கள், போகவடிவம், யோகவடிவம், கோரவடிவமென மூவகைப்படும். போகவடிவம் உமாமகேசுவரர், கல்யாணசுந்தரர் முதலிய திருமேனிகளாம். இத் திருமேனிகளைக் கொண்டருளியது உயிர்களுக்குப் போகத்தைக் கொடுத்தற்பொருட்டேயாம். யோகவடிவம் தக்ஷிணாமூர்த்தி முதலிய திருமேனிகளாம். இத்திருமேனிகளைக் கொண்டருளியது உயிர்களுக்கு யோக முத்தி உதவுதற்பொருட்டாம். கோரவடிவம், சலந்தாரி முதலியனவாம். இவை உயிர்களது வினையைக் கெடுத்து அனுக்கிரகித்தற் பொருட்டாம். [1]

---

1 சிவஞானசித்தியார்

போகியா யிருந்து யிர்க்குப் போகத்தைப் புரித லோரார்
யோகியா யோக முத்தி யுதவுத லதுவு மோரார்
வேகியா னற்போற் செய்த வினையினை வீட்ட லோரார்
ஊகியாமூட ரெல்லா மும்பரி னொருவ னென்பர்.

கந்தபுரணம்

ஒன்று யிருதிறமா யோரைந்தா யையைந்தா
யன்று தியின்மீட்டு மைந்தா யளப்பிலவாய்
நின்றாய் சிவநேயிந் நீர்மையெலாந் தீங்ககற்றி
நன்று விகட்கு நலம்புரிதற் கேயன்றே.

சிவபெருமானது வடிவங்கள் தோல், இரத்தம், மாமிசம் முதலிய தாதுக்களால் ஆக்கப்பட்ட நமது அசுத்ததேகத்தைப் போன்றதன்று; அவை விசுத்தமாய் ஞானரூபமாகிய சத்திவடிவெனப்படும். ''காயமோ மாயை யன்று காண்பது சத்தி தன்னுல்'' எனவும். ''சத்திதன்வடிவே தென்னிற் றடையிலா ஞான மாகும்'' எனவும் வருவனவற்ருல் இதனையறிக.

**விநாயகர், சுப்பிரமணியர், வைரவர், வீரபத்திரர்** என்னும் மூர்த்தங்களும் இறைவனுரது அருள்வடிவங்களாம். மாணிக்க இரத்தினத்தையும் அதனொளியையும், அக்கினியையும் அதனது சுடுதல் அடுதல் முதலாகப் பல வகைப்பட்டு விளங்கும் சத்தியொன்றனையும், மரத்தையும் அதனது வைரத்தையும் போன்று சிவபெருமானுக்கும் இம்மூர்த்தங்களுக்கும் பேதமில்லையென்பது உண்மைநூற் றுணிபு. ஆகையால் அவர்களும் சிவமெனப்படுவர்.

விநாயகமூர்த்தமும் சுப்பிரமணியமூர்த்தமும் கயமுகாசுரன், சூரபதுமன் முதலாயினேரால் தேவர்களுக்கு எய்திய துன்பத்தை நீக்கி அடியார்களுக்குப் போக மோக்ஷங் கொடுத்தருளுதற்பொருட்டு எழுந்த மூர்த்தங்களாம் வைரவமூர்த்தம் பிரமன் முதலியோர் சிவபெருமானை மதியாது கொண்ட அகந்தையை நீக்குதற்கும், வீரபத்திரமூர்த்தம் தக்கன்செய்த சிவதூஷண வினையை வீட்டுதற்கும் எழுந்த மூர்த்தங்களாம்.

சிவபெருமான் பிதாவும் விநாயகர் முதலியோர் புத்திரருமாக உண்மைநூல்கள் செப்பும். அவ்வாறு ஒரு பொருளே பிதாவும் புத்திரருமாகப் புகழப்படுதல்' ஆன்மப்பிரயோசனங் குறித்தேயாம்.

திருநாவுக்கரசுநாயனுர்
திருத்தாண்டகம்.

கைவேழமுகத்தவனைப் படைத்தார் போலும்
கயாசுரனை யவனுற்கொல் வித்தார் போலும்
செய்வேள்வித் தக்கனைமுன் சிதைத்தார் போலும்
திசைமுகன்றன் சிரமொன்று சிதைத்தார் போலும்.

மெய்வேள்வி மூர்த்தி தலை யறுத்தார் போலும்
வியன்வீழி மிழலையிடங் கொண்டார் போலும்
ஐவேள்வி யாறங்க மானார் போலு
மடியேனை யாளுடைய வடிக டாமே.

எனவும்,

திருஞானசம்பந்தப் பிள்ளையார்
பண்-காந்தாரம்.

காயச் செவ்விக் காமற் காய்ந்து கங்கையைப்
பாயப் படர்புன் சடையிற் பதித்த பரமேட்டி
மாயச் சூரன் றறுத்த மைந்தன் றாதைதன்
மீயச் சூரே தொழுது வினையை வீட்டுமே.

எனவும்,

திருநாவுக்கரசு நாயனார்
திருநேரிசை

விரித்தபல் கதிர்கொள் சூலம்வெடிபடு தமரு கங்கை
தரித்ததோர் கோல கால பயிரவ னாகி வேழம்
உரித்துமை யஞ்சக் கண்டு வொண்டிரு மணியாய் விள்ளச்
சிரித்தருள் செய்தார் சேறைச் செந்நெறிச் செல்வனாரே.

எனவும்,

திருவாசகம்

பண்பட்ட தில்லைப் பதிக்கரசைப் பரவாதே
யெண்பட்ட தக்க னருக்கனெச்ச னிந்துவனல்
விண்பட்ட பூதப் படை வீரபத்திரராற்
புண்பட்ட வாபாடிப் பூவல்லி கொய்யாமோ.

எனவும்

வருந் திருவாக்குகளினால், இவ்வுண்மை தெளியப்படும்.

சிவபெருமான் ஒருவரையழித்து மற்றொருவரை காத்தல் குற்றமாகாதோ எனில், தந்தை தாயார் தம் சொல்லின்வழி யொழுகாத புதல்வரை உறுக்கி அடித்துக் கண்டித்து நல்வழிப்படுத்தல்போல, முதல்வன் நிக்கிரகஞ் செய்தல், செயல்வகையால், வெகுளி போலத் தோன்றினும், கருத்துவகையால் அருளேயாம். அது,

சிவஞான சித்தியார்

தந்தைதாய் பெற்ற தத்தம் புதல்வர்க டஞ்சொ லாற்றின்
வந்திடா விடினு றுக்கி வளாரினா லடித்துத் தீய
பந்தமு மிடுவ ரெல்லாம் பார்த்திடிற் பரிவே யாகு
மிந்தநீர் முறைமை யன்றோ வீசனார் முனிவு மென்றும்.
என்பதனால் உணரப்படும்.

## மந்திரவடிவம்

சுத்த மாயையிலே, மனத்திஞலறிதற்கரிய சிவசத்தி சேரப்பட்டு நிற்றலாலும், அச்சுத்தமாயையிலே தோன்றிய காரணத்திஞலும், சிவசத்தியிஞல் அதிட்டிக்கப்பட்டுச் சிவபூசை அக்கினி காரியம் செபம் முதலியவற்ருல் வழிபட்ட ஆன்மாக்களுக்குப் போகமோக்ஷங்களாகிய பயனைக்கொடுத்தலானும் முதல்வனுக்கு **மந்திரங்கள் வடிவ**மென்று விசேஷ உரிமையுடையனவாக ஆகமங்கள் கூறும்.

அரசகட்டளைப்படி உத்தியோகங்களைப் பார்ப்பவர்களுக்கு அவ்வுத்தியோகங்களில் உரிமையிருப்பினும் அவ்வுரிமை சுதந்திரமாயின்மையின், அவற்ருேடு அரசனுக்குரிய சுதந்திர உரிமை போல, மந்திரங்களோடு ஏனைய தேவர்களுக்கும் உரிமையிருப்பினும் அவர்களுக்கு அவை சுதந்திர உரிமையன்று; அரனுக்கே விசேட உரிமையுடையனவாம்.

இறைவனுக்கு மந்திர வடிவங்களுள்ளும் பஞ்சப்பிரமமந்திர வடிவம் சிறந்ததாம். அவ்வாறு சிறந்தெடுத்துக் கூறியது என்னையெனில், ஈசான முதலிய ஐந்து மந்திரங்களும், மந்திரங்கள் எல்லாவற்றுக்கும் முற்படச் சுத்தமாயையிலே தோன்றியவாதலாலும் மற்றைய மந்திரங்களுக்கு மூலமாயிருத்தலாலும் அவற்றை விதந்தெடுத்துக் கூறியதாம். அவை இறைவனுக்கு சிரம், முகம், இருதயம் குய்யம், திருவடிகள் எனப்படும். ஈசான முதலிய ஐந்து மந்திரங்களும் அனுக்கிரகம் முதலிய ஐந்தொழில்களையுஞ் செய்யும் சத்திகளாம். [1] இருதயம் மெய்ஞ்ஞானமென்றும் சிரசு மிகவுயர்ச்சியாகிய நித்திய திருப்தி என்றும், சிகைதம் வயமுடமை என்றும், கவசம் இரட்சித்தல் என்றும், நேத்திரம் எல்லாமறிதல் என்றும், அஸ்திரம் அஞ்ஞானத்தை அழிக்கிற பிரதாப சத்தி என்றும் ஆகமம் கூறும்.

[2] மந்திரம் என்பதற்கு நினைப்பவனைக்காப்பதுஎன்பது

1 தத்துவத்திரய நிர்ணயத்திற் காண்க.

2 மந் — நினைப்பவன்: திர — காப்பது

பொருளாகும். ஆகவே மந்திரம் என்னும் பெயர் நினைப்பவனைக் காக்கும் இயல்புடைய வாச்சியமாகிய சிவத்துக்கும் சிவசத்திக்குமே செல்லும். ஆயினும் வாச்சியத்துக்கும் வாசகத்துக்கும் பேதமில்லாமைபற்றி. உபசாரத்தால் வாசகத்துக்கும் செல்லும். எனவே, மந்திரம் வாச்சியமந்திரம் வாசகமந்திரம் எனஇருதிறப்படும் என்ற படியாயிற்று.

சிவபெருமானுக்கு வாச்சியமந்திரமாகிய சிவசத்தியே உண்மைவடிவம் அச்சிவசத்தி கரியினிடத்து அக்கினி போல; வாசகமந்திரத்தினிடத்தே நின்று சாதகருக்குப் பயன் கொடுக்கும். ஆதலினுலே சிவபெருமானுக்குச் சிவ சத்தியினுல் வாசகமந்திரத்தோடு சம்பந்தம் உண்டு, அச் சம் பந்தம் பற்றி வாசகமந்திரம் சாதகருடைய தியான பூசைகணிமித்தமாகச் சிவபெருமானுக்குச் சொல்லப்பட்ட உபசாரவடிவமாம்.

ஆகையால், மந்திரங்கள் தேவர்களாலாவது முனிவர் களாலாவது மனிதர்களாலாவது ஆக்கப்பட்டன அல்ல; அத்தேவர்கள் முதலாயினோர் தாமும் அட்சர சுத்தியுடன் உச்சரிப்பதனுற் புண்ணியமும் அக்ஷரசுத்தியின்றி உச்சரிப் பதனுல் பாவமுமாமென்று கூறப்பட்டிருக்கிறது. சிவசத்தி சுத்தமாயையினுலே நின்று மந்திரங்களைத் தோற்று வித்தருளியமையாலும், சிவசத்தி ஒவ்வோர் மந்திரங்க ளையும் அதிட்டிக்கின்றமையாலும் சாதிப்பவர்கள் விரும்பிய பலனைக் கொடுக்குஞ்சத்தி மந்திரங்களுக்கு உண்டாயிற்று 'ஆகமத்தொடு மந்திரங்களமைந்தசங்கதம்' என்பது திருஞானசம்பந்தப் பிள்ளையார் திருவாக்கு.

## அஷ்ட மூர்த்தி

நிலம், நீர், நெருப்பு, காற்று, ஆகாசம், சூரியன், சந்திரன், ஆன்மா என்னும் இவையெட்டும் சிவபெரு மானுடைய அஷ்ட மூர்த்தங்களாம். இவற்றையதிட்டிப் பவர் அப் பரம்பொருளேயாவர், சிவபெருமான் அஷ்ட மூர்த்தியாய் நிற்பது உலகத்தில் உண்மைப்பொருளாய் நிற்பவர் தாம் என்பதைச் சிற்றறிவினராகிய ஆன்மாக்கள் அறிந்து உய்யும்படி கொண்டருளிய பெருங்கருணையாம்.

பிருதிவிரூபமாகிய விக்கிரகவணக்கமும், கங்கை முதலிய தீர்த்த வணக்கமும், நித்திய நைமித்தியங்களிற் செய்யப்படும் அக்கினி வணக்கமும், பஞ்சபூத தலங்களிற் செய்யப்படும் [1] பஞ்சபூதலிங்க வணக்கமும், சிவபூசை முதலியவற்றிற் செய்யப்படும் சூரிய சந்திர வணக்கமும் குருவையும் சிவனடியார்களையும் பிராமணர் முதலிய பெரியோர்களையும் சிவபெருமானாகப் பாவித்து வணங்கும் வணக்கமும் சிவபெருமானின் அஷ்டமூர்த்த வணக்க மேயாம்.

திருநாவுக்கரசு சுவாமிகள்
நின்றதிருத்தாண்டகம்

இருநிலனாய்த் தீயாகி நீரு மாகி
 [2] யியமான னாயெறியுங் காற்று மாகி
அருநிலைய திங்களாய் ஞாயி றாகி
 யாகாச மாயட்ட மூர்த்தி யாகிப்
பெருநலமுங் குற்றமும் பெண்ணு மாணும்
 பிறருருவுந் தம்முருவுந் தாமே யாகி
நெருநலையா யின்றாகி நாளை யாகி
 நிமிர்புன் சடையடிக ணின்ற வாறே.

பதினொராந் திருமுறை

எண்வகை மூர்த்தி யென்பதிவ் வுலகினி
லுண்மை யானென வுணர்த்திய வாறே

''விருக்ஷ மூலத்திலே இறைத்த நீரால் அம் மரச்சாகைகள் புஷ்டியடையுமாறுபோல, சிவபெருமானுடைய பூசையினால் அவர் சரீரமாகிய உலகம் செழிக்கின்றது: சிவபெருமானுக்கு எட்டாவது மூர்த்தம் மற்றைய மூர்த்தங்களுள்ளே வியாபகமாகிய ஆன்மா; ஆகலின் உலகமனைத்தும் சிவசொரூபம்; எந்தத் தேகமுடைய ஆன்மாவேனும் நிக்கிரகத்துக்கு ஆளாயின், அது முழுமையும் அஷ்டமூர்த்தமுடையாருக்கு வெறுப்பாய் முடியும்'' என்று வாயு சங்கிதை கூறுகின்றது.

சிவபெருமான் எங்கும் நின்று உபகரித்துவரின், யாவரும் அறியாததற்குக் காரணம் என்னையெனின்,

---

1 பஞ்சபூதத்தலங்கள்;- (திருவாரூர்) காஞ்சி, திருவானைக்கா திருவண்ணாமலை, திருக்காளத்தி, சிதம்பரம் என்பன

2 இயமானன் — ஆன்மா.

ஆதித்தன் எவ்விடத்திலும் விளக்கமாய் இருப்பினும் அந்தகர் அறியவராது இருளாய் இருப்பதுபோல முதல்வன் உபகாரம் விளக்கமாயிருப்பினும் அருட்கண்ணுடையார்க்கன்றி ஏனையோரால் அறிதல் முடியாது.

தாமரை மலர்களுள் பக்குவமுடைய தாமரை மலரை மட்டும் ஆதித்தன் விரியச்செய்தல் போல, அவ்வருட்கண்ணும் பக்குவமுடையார்க்கன்றிக் கிடைக்கப்பெறாது; பக்குவமுடையார்க்கும் அவ்வருட்கண் பரமசிவனுடைய பெருங்கருணையினாற் கொடுக்கப்பட வேண்டுமேயன்றித் தாமாகவே சம்பாதித்துக்கொள்ள முடியாது. ஆதலாற் சிவபெருமானருளால் அவ்வருட்கண்ணைப் பெற்றவர்களுக்கே அவர் அறிவிற்கறிவாய் நின்று உபகரித்தருளுவர்.

திருநாவுக்கரசு நாயனார்.
திருத்தாண்டகம்

மைப்படிந்த கண்ணாளுந் தானுங் கச்சி
மயானத்தான் வார்சடையா னென்னி னல்லான்
ஒப்புடைய னல்ல னொருவ னல்ல
னோரூர னல்ல னோருவம னில்லி
அப்படியு மந்நிறமு மவ்வண் ணமு
மவனருளே கண்ணாகக் காணி னல்லால்
இப்படிய னிந்நிறத்த னிவ்வண் ணத்த
னிவனிறைவ னென்றெழுதிக் காட்டொ ணாதே.

## சிவபெருமான்
## உலகாதீதரும் .... உலகரூபியும்

உலகாதீதரும், உலக காரணரும், உலகத்துக்கு அந்தர்யாமியும், உலகரூபியுமாய் நிற்பவர் சிவபெருமான் ஒருவரே. அவர் வடிவம் உலகினைக் கடந்து நிற்றலால் உருத்திரன் **விசுவாதிகன்** என்றும், [1] அவருருவில் உலகந்

---

1. மாயையிற்றோன்றி யொடுங்குமுலகம், அம்மாயைக்கு ஆதாரமாய் நின்ற பரமேசுரனுடைய திருவுருவிற்றோன்றி யொடுங்கும் எனக் கூறப்பட்டது; இது கிழங்கினின்றுந் தோன்றிய தாமரையை அக்கிழங்கிற்கு ஆதாரமாய்நின்ற சேற்றினின்றுந் தோன்றியதெனப் பொருள்படும்படி பங்கசம் எனக் கூறுவதனாலறியப்படும். பங்கம் – சேறு. ஜம் – தோன்றுதல். இதுபற்றிச் சிவஞான பாடியம் க-ம் சூத்திரம் காண்க.

தோன்றி ஒடுங்குதலால் **விசுவகாரணர்** என்றும், உலகத்துக்கு உயிராய் நிற்றலால் **விசுவாந்தர்யாமி** என்றும், உலகமாய் நிற்றலால் **விசுவரூபி** என்றும் வேதம் கூறும்.

சிவபெருமான் விசுவாதீதர் என்பதை [1]பிரம விட்டுணுக்கள் அடிமுடி அறியாவண்ணம் அனற்பிழம்பாயுயர்ந்த முதல்வனரது திருவுருவின் நிலை கூறும் புராண சரிதமும், பரமசிவன் விசுவகாரணர் என்பதை முப்மூர்த்திகளும், தம்முடைய உறுப்பிற்றேன்றி நின்ற திருவுருவின் இயல்பு கூறும் புராண வசனமும், விசுவாந்தர்யாமி என்பதை அவ்விறைவன் வடிவிலே விளைந்த வண்ணமே உலகிற்கு விளைவு கூறும் புராணவசனமும், விசுவரூபி என்பதை [2]அர்த்தநாரீசுர வடிவுகூறும். புராண வாக்கியமும் வலியுறுத்தும்.

சிவபெருமான் உலகினுக்குயிருமாகி நின்றருளுவர் என்பது. அவர் யோகத்திலிருந்தபொழுது, காமத்திற்குக் காரணனுகிய மன்மதனிருக்கவும், தேவர் முதலியோர் காமவேட்கையின்றி மெலிந்ததிருவிளையாடலும், விட்டுணு அம் மெலிவு கெடும்படி கருதிச் சிவபெருமானிடத்து மன்மதனை ஏவ, அம் மன்மதனை நெற்றிக்கண்ணை விழித்தெரித்து, இமயமலை அரசன் புத்திரியாகிய உமாதேவியாரைத் திருமணஞ்செய்து அவ்வுயிர்கட்குப் பேரின்பத்தை அளித்த திருவிளையாடலானும் இனிது விளங்கும். அஃதாவது இறைவனர் உயிருக்குயிராய் நிற்றலை அவர் தொழிற்படாதிருக்கும்பொழுது உயிர்கள் தொழிற்படாமையானும், அவர் தொழிற்படும்பொழுது உயிர்கள் தொழிற்படுதலினுலும் நன்கு விளங்கும்.

---

1. திருவாசகம்: ''பிரமனரி யென்றிருவ ருந்தம் பேதைமையாற்—பரமமியாம்பரம மென்றவர்கள் பதைப்பொடுங்க—அரனுரழலுருவா யங்கே யளவிறந்து—பரமாகி நின்றவா தோணுக்க மாடாமோ'' இது லிங்கோற்பவமூர்த்தம் எனப்படும்.

2. அர்த்தநாரீசுரவடிவம் மகேசுரமூர்த்தம் இருபத்தைந்தனுள் ஒன்று

சிவஞானசித்தியார்

கண்ணுதல் யோகி ருப்பக் காமனின் றிடவேட் கைக்கு
விண்ணுறு தேவ ராதி மெலிந்தமை யோரார் மாறு
னெண்ணிவேண் மதனை யேவவெரிவிழித் திமவான் பெற்ற
பெண்ணினைப் புணர்ந்து யிர்க்குப் பேரின்ப மளித்த தோரார்.

இவ்வுண்மையறியாதவர் சிவபெருமானைத் தேவர்களில் ஒருவர் என்பர். வேதங்கள் தேவதேவரென்றும், மகாதேவரென்றும், ஈசரென்றும், மூவரின் முதல்வர் என்றும், ஏகரென்றும், சர்வாந்தர்யாமி என்றும், ஆதி என்றும் இவ்வாறு சிவபெருமானைப் புகழ்ந்ததுபோல மற்றோர் தேவரைப் புகழ்ந்திலது.

கந்தபுராணம்

தேவதேவன் மாதேவன் சிறப்புடை யீசனெங்கோன்
மூவரின் முதல்வ னேகன் முடிவிற்கு முடிவாய் நின்றோன்
ஆவியு ளாவி யானோ னந்தண னுதியென்றே
ஏவரை யிசைத்த வம்மா எல்லைதீர் மறைக ளெல்லாம்.

## சத்திபேதம்

உயிர்களுக்கு அனுக்கிரகம் செய்தலைக் குறித்துப் [1]பொதுவகையால், அறிந்தும் அறிவித்தும் நிற்கும் ஞான மொன்றே சிவசத்தியின் சொரூபமாம். அதுவே பராசத்தி எனப்படும். அது [2]சிறப்புவகையால் வியாபரிக்கு மிடத்துத் **திரோதானசத்தி** என நின்று **இச்சாசத்தி ஞானசத்தி கிரியாசத்தி** என மூவகைப்படும். அம் மூன்றனுள், உயிர்களுக்கு மலத்தைநீக்கி, சிவத்தை அளித்தற் கண்ணுள்ள இரக்கம் இச்சாசத்தி எனப்படும். மலத்தை நீக்குதற்கும் சிவத்தை அளித்தற்கும் செய்யவேண்டிய [3]உபாயங்களை அறிவது ஞானசத்தி எனப்படும். அவ்வுபாயங்களைச் சங்கற்பித்துச் செய்யுஞ் சத்தி கிரியாசத்தி

---

1. பொதுவகையால் அறிதலாவது அனுக்கிரக மாத்திரம் குறித்து நிற்றல்.

2. சிறப்புவகையால் வியாபரித்தலாவது விரும்புதலும் அறிதலும் செய்தலுமாம்.

3. உபாயங்களாவன; படைத்தல் காத்தல் அழித்தல் மறைத்தல் அருளல் என்பன.

எனப்படும். அக் கிரியாசத்தியும் ஐந்தொழில் செய்யும் பொழுது அவ்வக் காரியபேதத்தால் **செநநி ரோதயித்திரி ஆரிணி** என மூன்று பேதமாம். இதனால் இறைவருக்கு பராசத்தி, திரோதானசத்தி, இச்சாசத்தி, ஞானசத்தி, கிரியாசத்தியெனப் பஞ்சசத்திகள் உண்டென்பது பெறப் பட்டது அவற்றுள் பராசத்தியொன்றே சொரூபம்; ஏனைய நான்கும் அவற்றின் வியாபார பேதமாகிய செநநி முதலியசத்திகளும் தடத்தமாம்.

இனி சிவபிரானுக்குச் சத்திகள் பலவோ எனில்; அற்றன்று அரசன் சத்தியொன்றே மந்திரி சேனாதிபதி காவலர் முதலாயினோரிடத்து நின்று செய்யுங் காரிய வேறுபாட்டால் பலவகைப்பட்டாற்போல, சிவசக்தி யொன்றே பிரமன் முதலாயினோர்மாட்டு நின்று செய் யுங் காரிய வேறுபாட்டால் பலபேதமாகும். ஆயினும் சிவசத்தி ஒன்றேயென்பதும், அதுவே பலகடவுளர் மாட் டும் நின்று நடத்துமென்பதும் மந்திரிமுதலாயினோர் எவை எவை செய்யினும், அரசன் நினைத்தவாறன்றி ஆகாமை போல போகமோக்ஷங்களெல்லாம் சிவபெருமான் நினைத் தவாறன்றி ஆகாமையின் வைத்து அறியப்படும்

## சிவபெருமானது திருவருளாலன்றிப் பிரமன் முதலியோருக்கு ஒன்றுமாகாமை.

தக்கன் வேள்வி செய்தபொழுது பிரம விட்டுணு முதலாயினோர் அதற்குத் துணையாய் நின்றும், முதல்வ னது திருவுள்ளத்துக்கு மாறுகச் செய்தமையால் அவ் வேள்வி அளிக்கப்பட்டமையாலும், சிவபெருமானது திருவுள்ளத்தோடு ஒன்றுபட்டுநின்ற மார்க்கண்டேய முனிவரது வாழ்நாள் முடிவுபெற, அவருயிரைக் கவர் தற்குக் காலன் முயன்றும், அவன் எண்ணப்படியாகா மல் [1]அரன் நினைத்தபடி நீடிய வாழ்நாள் அம்முனிவ ருக்குக் கொடுக்கப் பட்டமையாலும், சிவபெருமானை

---

1. ஆன்மாக்களோடு சகசமாகிய மலத்தைப் பக்குவமறிந்து சங்கரித்தலால் உயிர்க்குயிராகிய சிவபெருமானுக்கு அரன் என் னுந் திருநாமமுண்டு. சைவசமயநெறி — பொது, கக.

வணங்காது அமுதம் பெறும்படி விட்டுணு முதலாயி ஞேர் பாற்கடலைக் கடைந்த பொழுது, அவர் நினைத்த படியாகாமல் ஆலாகலவிஷம் தோன்றியமையாலும் இவைபோன்ற நிகழ்ச்சிகளாலும் சிவபெருமான் நினைத்த வாறன்றி வேறென்றுமாகாதென்பது இனிது புலப்படும்.

## சீவன் சிவனை யொப்பாகான்.

இச்சாஞானக் கிரியைகள் சிவபெருமானுக்கு இருத் தல்போல; ஆன்மாக்களுக்கு முண்டாகையினுல் அவர் களும் சிவத்தோடு ஒப்பாவார் போலும் என்னில், அன்று கேவலாவத்தையில் ஆன்மாக்களின் இச்சா ஞானக்கிரி யைகளை ஆணவமலம் மறைக்கும்.

சகலத்தில் ஆன்மாக்கள் தாம் தாம் செய்த கன்மத் திற்கேற்ப அறிவிச்சை செயல்கள் ஏகதேசமாய் விளங்கப் பெற்று விடயபோகங்களை ஏகதேசப்பட்டு அனுபவிக்கும். ஏகதேசப்பட்டு அனுபவித்தலாவது சிற்றறிவுஞ் சிறு தொழிலு முடையனவாயிருந்து அனுபவித்தலாம்.

சுத்தநிலையில் ஆன்மாக்கள் வியாபக அறிவும் பேரா னந்தமும் சிவபெருமான் கொடுக்கக் கொள்ளும் உரிமை யுடையன. சிவபெருமான் [1]நித்தியானந்த சொரூபி; சிவபெருமானுக்கு மலபந்த மில்லாமையால் கேவலம், சகலம், சுத்தம் என்னும் அவத்தைகளுமில்லை; ஆதலால் ஆன்மாக்களுக்கு இச்சா ஞானக் கிரியைகள் உளவெனி னும், அவற்றிற்கும், சிவனுருடைய இச்சாஞானக் கிரியை களுக்கும் வேற்றுமை பெரிதாம். ஆதலால் ஆன்மாக் கள் சிவனேடு சமமாகா; சிவபெருமான் ஆண்டவனும் ஆன்மாக்கள் அடிமைகளுமாம்.

திருநாவுக்கரசு நாயனர்

**ஆண்டானை யடியேனை யாளாக் கொண்டு**
வடியொடு முடியயன்மா லறியா வண்ணம்
நீண்டானை நெடுங்களமா நகரான் றன்னை

1. ''இன்பா யிருந்தானை யேத்துவர்க் கின்பமே'' திருஞான சம்பந்தர்—திருநாவலூர்மயானம்.

## தடத்தவடிவம்

சிவபெருமான் இச்சாசத்தி ஞானசத்தி கிரியாசத்தி என்னும் மூவகைச் சத்திகளைப் பொருந்திய பொழுது சத்திகாரியமாகிய அருட்டிருமேனி உண்டாம். சிவன் ஞானசத்தியைப் பொருந்திய பொழுது நிஷ்களத் திரு மேனியுடையவராவர். இவர் நிஷ்கள சிவனென்றும். இலய சிவனென்றும் பெயர் பெறுவர். [நிஷ்களம்-அருவம், லயத்தானம் - சிவதத்துவம்]

சிவன் ஞானசத்தியையும் கிரியாசத்தியையும் சம மாகப் பொருந்தியபொழுது அருவுருவத் திருமேனியுடை யவராவர். அவர் சதாசிவரென்றும். உத்தியுத்தர் என் றும், போகசிவன் என்றும், நிஷ்கள சகள சிவன் என் றும் பெயர் பெறுவர். [போகத்தானம் – சதாக்கியதத் துவம்.

ஞானசத்தி குறைந்தும் கிரியாசத்தி ஏறியுமிருக் கும் அவதரம் உருவத்திருமேனியாம் அம்மூர்த்தி மகே சுரர் என்றும், பிரவிருத்தர் என்றும், அதிகார சிவன் என்றும், சகளசிவன் என்றும், பெயர் பெறுவர். [அதி காரத்தானம் - ஈசுவரதத்துவம்] சிவம், சதாசிவம், மகே சுவரம் ஆகிய இவை மூன்றுக்கும் தம்முட் பேதமில்லை. சத்தியின் தொழில் வேறுபாட்டால் இப் பேதங்கள் உண்டென்றும் உபசாரமாகச் சொல்லப்படும்.

சிவம் சத்தி என்ற இரண்டும் எல்லாம் ஒடுங்குதற்கு இடமாய் நிற்றலால் இலயமெனவும், சதாசிவம் ஏனைய மூர்த்தங்களைத் தோற்றுவித்தலால் போகம் எனவும். மகேசுரத்தில் இருபத்தைந்து மூர்த்தமும் சுத்தவித்தை யில் பிரம விட்டுணுவுந் தோன்றித் தொழிற் செய்வ தால், மகேசுரம் சுத்தவித்தை என்ற இரண்டும் அதி காரமெனவும் ஆகமங்கள் கூறும். ஆதலின் மந்திரம் பதம் வன்னம் என்னும் சொற்பிரபஞ்சமும், தத்துவம் புவனம் கலை என்னும் பொருட்பிரபஞ்சமும் ஆகிய இப் பிரபஞ்சமிரண்டையும் ஒடுக்கும் திருமேனி அருவமென் றும், தோற்றுந் திருமேனி அருவுருவம் உருவம் என்றுஞ் சொல்லப்படும். இவை மூன்றும் பரமசிவனது **தடத்த வடிவங்களாம்.**

சிவபெருமான் இம் முத்திறத்திருமேனிகளைக் கொண்டருளியது என்னையெனில், ஐந்தொழில் செய்து ஆன்மாக்களது பாசத்தைநீக்கி முத்தி கொடுத்தற் பொருட்டுக் கொண்ட கருணையேயாம்.

கந்தபுராணம்

தன்னை நேரிலாப் பரம்பொரு டனியுருக் கொண்ட
தென்ன காரண மென்றியே லைந்தொழி லியற்றி
முன்னை யாருயிர்ப் பாசங்கண் முழுவது மகற்றிப்
பின்னை வீடுபே றருளுவா னினைந்தபே ரருளே.

பரமசிவன் ஒன்றினுந் தோய்வின்றிச் சொயம் பிரகாசமாய் நிற்குந் தன்னுண்மையிற் சிவமெனவும், உயிர்களோடு ஒன்ருயும் வேருயும் உடனுயும் நிற்குந் தன்மையிற் சத்தி எனவும், ஐந்தொழில் செய்யுந் தன்மையிற் பதி எனவும் பெயர் பெறுவர்.

## காரணத்திரயம்

ஆன்மாக்கள் எடுக்குந் தேகங்கள் நல்வினை தீவினைகளுக் கேற்றபடி மாறி மாறித் தோன்றுவனவாயும், அழிவனவாயும் சுவர்க்க நரகங்களிற் செல்வனவாயுமிருக்கும். அத்தேகங்களை மாயை தருமென்னில்; மாயை செயலற்ற சடப்பொருள்; ஆகையால் மாயாகாரியமான தேகாதி பிரபஞ்சத்தை மாயை தரமாட்டாது; ஆன்மாக்களே அத்தேகங்களை எடுக்கும் என்னில்; தேகங்கள் எடுக்குமுன்னுள்ள கேவலநிலையில், ஆன்மாக்களுக்கு அறிவின்மையால் ஆன்மாக்களும் அவைகளை எடுக்கமாட்டா; ஆகையால் சிவபெருமான் ஒருவரே **நிமித்தகாரணராய்** நின்று எல்லாவற்றையும் உண்டாக்குவர்.

ஒரு காரிய நிகழ்ச்சிக்கு மூன்று காரணங்கள் வேண்டப்படும். அவை [1] **முதற்காரணம், துணைக்காரணம், நிமித்தகாரணம்** என்பன. இவ்வுலகில் குடமாகிய காரியத்துக்கு முதற்காரணம் மண்ணும், துணைக்காரணம்

---

1. முதற்காரணம் உபாதானகாரணம் எனவும் துணைக்காரணம் சககாரி காரணம் எனவும் கூறப்படும்.

திரிகையும், நிமித்த காரணம் குலாலனுமாகக் காண்கின்றோம். ஆராயுங்கால் தநுகரண புவன போகமெனப் படும் பிரபஞ்சமாகிய காரியத்துக்கும் சுத்தமாயை அசுத்தமாயை பிரகிருதிமாயை யென்னும் மூன்றும் மண் போல முதற்காரணமாகவும், தமது சத்தியே திரிகை போலத் துணைக்காரணமாகவும், சிவபெருமான் குலாலன் போல நிமித்த காரணமாகி நின்று அப்பிரபஞ்சங்களைத் தோற்றுவிப்பர்.

## பஞ்சகிருத்தியம்

நித்திய பரிபூரணராகிய சிவபெருமான் ஆன்மாக்கள் பொருட்டுச் செய்யுந் தொழில்கள் **படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல்** என்னும் ஐந்துபேதமாம். இவை முறையே சிருட்டி, திதி, சங்காரம், திரோபவம், அநுக்கிரகம் எனவும் கூறப்படும்.

படைத்தலாவது ஆன்மாக்களது கன்மங்கள் பக்குவமான விடத்து அவற்றின் பயனை அனுபவித்தற்பொருட்டுத் தநுகரண புவன போகங்களை முதற் காரணத்தினின்றுந் தோற்றுவித்தலாம். காத்தலாவது கன்மங்கள் அனுபவித்து ஒழியும்வரையும் [1] தநு முதலியவைகளை நிறுத்தலாம். அழித்தலாவது பிறந்திறந்து வினைகளைச் செய்து வினைப் பயன்களை அனுபவித்து உழலுகின்ற ஆன்மாக்களுக்கு அதனால் வரும் இளைப்பை நீக்குதற்குத் தநுவாதியவைகளை முதற்காரணத்தில் ஒடுக்குதலாம். மறைத்தலாவது ஆன்மாக்களை இருவினைப் பயன்களாகிய போக்கியப் பொருள்களில் அமிழ்த்துதலாம். அருளலாவது ஆன்மாக்களுக்குப் பாசத்தை நீக்கிச் சிவத்துவத்தை விளக்குதலாம்.

இவ்வைந்து தொழில்களையும் முத்தொழிலாகக் கூறுமிடத்துத் திரோபவத்தைத் திதியிலும், அநுக்கிரகத்தைச் சங்காரத்திலும் அடக்கிக் கூறப்படும்.

---

1 தநு- உடம்பு. கரணம் - மனமுதலிய கருவி. புவனம் உடம்புக்கு ஆதாரமாகிய உலகம். போகம் - அனுபவிக்கப்படும் பொருள்.

பரமேசுரனுர் காருண்யத்தினுலே இக் கிருத்தியங்களைச் செய்தல் ஆன்மாக்களைப் பிறவிக்கேதுவாகிய துன்பக்கடலினின்றுமெடுத்து அருள்புரிதலேயாம் என்பர். அஃதெப்படியெனில்; சங்காரம் ஆன்மாக்களுக்கு இளைப்பாற்றுவித்தலாம். மீண்டு படைத்தல் அவ்வான்மாக்களைப் பற்றிய மலத்துக்குப் பக்குவம் உண்டாக்குதலாம். காத்தல் கன்மந் தொலைத்தல் காரணமாகப் போகத்தைப் புசிப்பித்தலாம். மறைத்தல் போகம் புசிக்குமளவும், அப்போகங்களிலே சுவை பிறக்கும்படி நிறுத்துதல். புகழ்தற்கரிய அனுக்கிரகம் அனுக்கிரகமேயாம். இவ்வாறு ஐந்தொழிலும் அருட்செயலேயாம்.

சிவப்பிரகாசம்

ஏற்றவிவை யரனருளின் றிருவிளையாட்டாக
வியம்புவர்க ளணுக்களிடர்க் கடனின்று மெடுத்தே
ஊற்றமிக வருள்புரித லேதுவாக
வுரைசெய்வ ரொடுக்கமிளைப் பொழித்தன் மற்றைத்
தோற்றமல பாகம்வரக் காத்தல் போகந்
துய்ப்பித்தல் திரோதாயி நிறுத்த லாகும்
போற்றலரு மருளருளே யன்றி மற்றுப்
புகன்றவையு மருளொழியப் புகலொ ணுதே.

சிவபெருமான் சுத்தமாயையின் கிருத்தியமைந்தும் தாமே செய்தருளுவர். அசுத்தமாயையின் கிருத்தியமைந்தும் அநந்தேசுவரரைக் கிரியாசத்தியால் [1] அதிட்டித்து நின்று அவர்வாயிலாகச் செய்தருளுவர்.

அநந்தேசுவரர் விஞ்ஞானகலருள் ஒருவராய் [2] அட்டவித்தியேசுரரில் தலைவராய் மலபரிபாகமுடையவராய், படைப்புக்காலத்தில் பரமசிவனது அநுக்கிரகத்தால் அதிகாரம் பெற்றவராய் உள்ளவர்.

சிவபெருமான், பிரகிருதியின் கிருத்தியமைந்தும் அநந்தேசுவரர் வாயிலாக ஸ்ரீகண்டருத்திரரை அதிட்டித்து நின்று செய்தருளுவர். ஸ்ரீகண்டருத்திரர் பிரள

1. அதிட்டித்தல் நிலைக்களமாகக்கொண்டு செலுத்துதல்.
2. அநந்தர், சூக்குமர் முதலிய எண்மர் அட்டவித்தியேசுரர்

யாகலருட்டலைவராய், மலபரிபாகமுடையவராய், படைப்புக்காலத்திற் பரமசிவனருளால் ஸ்ரீகண்டருத்திர பதத்தைப் பெற்றவராய், அனந்தேசுவரரால் அதிட்டிக்கப்படுபவராய், சைவாகமங்களை அறிவிக்கும் ஆசாரியராய் உள்ளவர்.

ஸ்ரீகண்டருத்திரரிடத்தில் **செநநி**, **ரோதயித்திரி**, **ஆரிணி** என்னும் சிவசத்திகள் பதிந்து நின்று முத்தொழிலையுஞ் செய்யும். இவற்றுள் செநநி பிரமாவிடத்தில் நின்று செலுத்தும். ரோதயித்திரி விட்டுணுவினிடத்து நின்று செலுத்தும். ஆரிணி காலருத்திரரிடத்து நின்று செலுத்தும். இவை நேராகவும் அதிட்டித்தும் நின்று நடத்தலால் எத்தொழிலும் சிவசத்தியின் தொழில்களேயாம்.

செநநி—உற்பத்திக்குக் காரணமாயுள்ளது; அதன் தொழில் சிருட்டி. ரோதயித்திரி—போகங்களில் நியதி செய்வது: அதன்தொழில் திதியும் திரோபவமுமாம் ஆரிணி—சங்கார சாமர்த்தியத்தையுடையது: அதன் தொழில் சங்காரமும் அனுக்கிரகமுமாம்

ஸ்ரீகண்டருத்திரர் படைப்புக் காலத்தில் பிரமா விட்டுணு காலருத்திரர்களை படைத்து, பிரமாவை அதிட்டித்துநின்று படைத்தலும் விட்டுணுவை அதிட்டித்துநின்று காத்தலும், காலருத்திரரை அதிட்டித்து நின்று அழித்தலும் செய்வர். ஸ்ரீகண்டருத்திரர் **மத்தியப் பிரளயத்தில்** பிரகிருதிவரையுமுள்ள உலகங்களையும் பிரம விட்டுணுக்களையும் ஒடுக்கிக் கொண்டு தாம் ஒடுங்காதவராய் அராகதத்துவத்தில் இருப்பர்.

**அவாந்தரப் பிரளயத்தில்** அநந்தேசுவரரால் அசுத்த மாயை வரையுள்ள புவனங்கள் ஒடுங்கும். இப்பிரளயத்தில் ஸ்ரீகண்டருத்திரர் பரமசிவனருளாற் பரமுத்தி அடைவர்.

பரமசிவனுற் செய்யப்படுஞ் சங்காரம் **மகாசங்காரம்** எனப்படும். இச்சங்காரத்தில் பிரகிருதி மாயாகாரியமாகிய அசுத்தப்பிரபஞ்சமும், அசுத்த மாயாகாரியமாகிய சுத்தாசுத்தப் பிரபஞ்சமும், சுத்த மாயாகாரியமாகிய சுத்தப் பிரபஞ்சமும் ஆகிய மூவகைப் பிரபஞ்சங்களும்

சங்காரமாகும். அநந்தேசுரரும் சிவனருளினால் இச் சங்காரத்திலே பரமுத்தியடைவர். பரமசிவன் சமஸ்த உலகங்களையுஞ் சங்கரித்துத் தாம் அழியாது ஏகராய்ச் சுயம் பிரகாசமாய் விளங்குவர்.

சிவபெருமான் சங்காரத்தொழில் செய்யுமிடத்து பிரமா விட்டுணு இருவரும் தத்தம் ஆற்றலோடு நிலை பெறுவாராயின் சங்காரமாதல் இன்று; ஆதலின், சங்கார காலத்தில் அவ்விருவரும் சங்கரிக்கப்படுவர் என்பது பெறப்படும். அதுவன்றியும், சங்காரக் கடவுளாகிய கர்த்தா சிலவற்றையொழித்துச் சங்கரிக்கமாட்டாராகையாலும், முழுதும் சங்கரித்தவிடத்துச் சிவபெருமான் ஒருவரே எஞ்சிநிற்றல் பெறப்படுதலாலும், ஒடுங்கிய உலகங்கட்குப் பெரியதோர் ஆதாரம் எஞ்சி நின்ற அவரே ஆதலாலும் ஒடுக்கிய அக்கடவுளே ஆதாரமாய் நின்று பின்னும் உலகத்தைத் தோற்றுவித்து நிலைபெறச் செய்தருளுவர்.

திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்
பண் - நட்டபாடை

படைப்புந் நிலையிறுதிப் பயன்பருமை யொடுநேர்மை
கிடைப்பல் கணமுடையான் கிறிபூதப் படையானூர்
புடைப்பாளை யின்கமுகின் னெடுபுன்னை மலர்நாற்றம்
விடைத்தே வருதென்றன் மிகுவேணு புரமதுவே.

கந்தபுராணம்

அன்ன வேலையி லவையெலா மளித்தபி னளிப்போ
ரென்ன நின்றவர் தம்மையு மொடுக்குறு மிதற்பின்
முன்ன ருள்ளதோ ரேகமா யுறையுமெம் மூர்த்தி
பின்னு மிம்முறை புரிந்திடு மென்றுமிப் பெற்றி.

சிவஞானசித்தியார்

இறுதியாங் காலந் தன்னி னொருவனே யிருவ ருந்தம்
முறுதியி னின்று ரென்னி னிறுதிதா னுண்டா காதா
மறுதியி லரனே யெல்லா மழித்தலா லவனு லின்னும்
பெறுதுநா மாக்க நோக்கம் பேரதி கரணத் தாலே.

இதனால் பிரமா முதலிய தேவர்களெல்லாம் சங்கரிக்கப்பட்டுப் போகச் சிவபெருமானே சேஷித்து நிற்பவர் என்றும், அவரே சிருஷ்டி முதலிய கிருத்தியங்களுக்

குக் காரணராகிய முதல்வராம் என்றும், அவரே மகா சங்காரம் செய்யவல்ல [1] மகாருத்திரராகிய இறைவராம் என்றும், அவரையே முதலாகவுடையது உலகம் என்றும் ஒரு தலையாக உணர்ந்து கொள்ளற்பாலதாம்.

## சிவபெருமான் திரிமூர்த்தியதிபர்
### (மூவரின் முதல்வர்)

இந்த மகாருத்திரராகிய சிவபெருமானே பிரமா விட்டுணு ருத்திரன் என்னும் மும்மூர்த்திகளுக்கும் காரணரென்றும், முதல்வரென்றும் சுருதிகள் முழங்குகின்றன. இதனை,

தேவராயு மசுரராயுஞ் சித்தர்செழு மறைசேர்
நாவராயு நண்ணுபாரும் விண்ணெரிகா னீரும்
மேவராய விரைமலரோன் செங்கண்மாலீச னென்னும்
மூவராய முதலொருவன் மேயதுமு துகுன்றே.

எனவரும் திருஞானசம்பந்த சுவாமிகள் தேவாரம் வலியுறுத்தும்.

புராணங்களிலும் பாரதத்திலும் பிறவற்றிலும் உருத்திரர், பிரம விட்டுணுக்களை வணங்கினரென்றுவது அவரிற் றாழ்ந்தவ ரென்றுவது வருமிடங்களிலெல்லாம் அங்கே உருத்திரப் பெயராற் கூறப்படுபவர், படைத்தற்றொழிலும் காத்தற்றொழிலும் இனிது நடாத்துதற் பொருட்டுச் சிவாஞ்ஞையினுல் அப்பிரம விட்டுணுக்களிடத்துத் தோன்றிய நீல லோகிதருத்திரர் முதலியவர்களேயாம் என்பர் அறிஞர்.

## தோன்றுதற்கும் ஒடுங்குதற்கும் காரணம்

இனிச் சங்கார கருத்தாவாகிய பரமசிவனுல் அழிவெய்திய உலகம் பின்னும் அவரினின்றும் தோற்றுவது ஆணவமல பரிபாகமாகும் பொருட்டாம். அவ்வாறாயின், உலகம் முன் அழியாது நிலைபெறவே அமையும்; அவ்வா

1. சனன சாகரத்திற்பட்டோர்களுடைய கவலைகளை உருக்கி ஒழித்து அவர்களை உயர்த்தி விடலால் சிவபெருமானுக்கு உருத்திரர் என்னும் நாமம் எய்தியது.

றன்றி, அழிதல் எதற்கெனில், ஆன்மாக்களின் கன்மமல பரிபாகத்தின் பொருட்டேயாம்[1]

## கன்மமல பரிபாகம்

உலகம் ஒடுங்குவதனுற் கன்மமலம் பரிபாகமாதல் எங்ஙனமெனில்; கன்மமலம் என்பது நல்வினை தீவினை என்னுமிருவினைகளாம்; அவைகள் பரிபாகமாதலாவது, அவற்றின் காரியமாகிய இன்ப துன்பங்களில் சமபுத்தி தோன்றுதலாம். அச்சமபுத்தி இன்பமுந் துன்பமும் நெடுங்காலம் அனுபவித்து அவ்வனுபவத்தால் அவ்விரண் டினுங் கைப்புத் தோன்றுதலால் உண்டாம். இன்ப துன்ப அனுபவத்திற்குக் காரணமாகிய இருவினைகள் பயனுக்கு வருங்காலத்து, அவ்வனுபவத்திற் கேற்றவாறு உடல் முதலியவற்றை மாற்றிக்கொடுக்க வேண்டியது சிவபெருமானது கடமை, ஆதலால் அவ்வாறு மாற்றுங் கால் உண்டாகிய ஒடுக்கம் பக்குவமாயிருக்கும் கன்ம பலனை அனுபவித்துத் தொலைத்தற்கு ஏதுவாதலால் சங் காரம் கன்மமல பரிபாகத்தின் பொருட்டாயிற்று.

## ஆணவமல பரிபாகம்

உலகம் தோன்றுதலினுல் ஆணவமலபரிபாகமாதல் எங்ஙனமெனில்; ஆணவமலமானது. அறியாமையைச் செய்வதாம். அவ்வாறு செய்யுஞ் சத்தி கெடுதல் ஆணவ மலபரிபாகமாம். அறியாமையாவது, அநாதிகேவலத்தில் அறிவிச்சை செயல்கள் தொழிற்படாது தடுக்கப்படுத்தல். சிருட்டியால் அத்தடை நீங்குதல் ஆணவ மலபரிபாக மாம். ஆதலால் தோற்றம் ஆணவமல பரிபாகத்தின் பொருட்டாம்,

---

1. ‘‘பரமசிவன்’ நீண்டகாலமாகச் சம்சாரத்தில் வாழ்ந்து வருத்தமடைந்த ஆன்மாக்களுக்குஇளைப்பு நீக்கத்தின் பொருட்டும் கன்மமல பரிபாகத்தின் பொருட்டும், அளவுக்குட்படாத காரியத் தோற்றங்களால் சத்திதேய்ந்திருக்கும் மாயைக்குச் சத்தியை விருத்தி செய்தற்பொருட்டும் மாயையில் எல்லாவற்றையும் ஒடுக் குவர்’’ என்று சித்தாந்த பரிபாஷையிற் கூறப்பட்டுள்ளது.

## மாயாமல பரிபாகம்

ஒடுக்கமும் தோற்றமும் முறையே கருமமலமும் ஆணவ மலமும் பரிபாகமாதற் பொருட்டென்றதனால் நிலைத்தல் மாயாமலபரிபாகமாதற் பொருட்டெனக் கொள்ளுதல் வேண்டும். நிலைத்தலினால், மாயாமலம் பரிபாகமாதல் எவ்வாறெனில்; மாயை என்பது மயக்கத்தைச் செய்வதாம். மயக்கமாவது ஒன்றைப் பிறிதொன்றாக உணரும் விபரீத உணர்ச்சியாம். அதாவது நித்தமல்லாத உலகத்தை நித்தமென உணர்தலாம். இவ்விபரீத உணர்ச்சியின்கேடு மாயாமலபரிபாக மெனப்படும்.

இது நித்தமென்றெண்ணப்படும் உலகம் அநித்தமாதலை அனுபவத்திற் காண்டலால் உண்டாம் அவ்வாறு அனுபவத்திற் காண்பதற்குச் சிறிது காலமேனும் உலகம் நிலைத்திருத்தல் வேண்டுமாதலின் நிலைத்தல் மாயாமல பரிபாகத்தின் பொருட்டாயிற்று.

இவ்வாறு ஆணவமல பரிபாகத்தின் பொருட்டு உலகந் தோன்றி, மாயாமல பரிபாகத்தின்பொருட்டு நிலைத்து, கன்மமல பரிபாகத்தின்பொருட்டு ஒடுங்குமாறு அறிக.

## சூக்கும பஞ்சகிருத்தியம்

சர்வசங்கார காலத்திலே ஆன்மாக்கள் மாயையிலே ஒடுங்கிக்கிடந்தவிடத்தும், சிவபெருமான் மீளப்படைத்தற் கேதுவாக்கப்படும் சூக்கும பஞ்சகிருத்தியத்தைச் செய்தருளுவர்.

[1] மலபரிபாக தாரதம்மியத்திற் கியைந்தவாறு சிவபெருமான் ஆன்மாக்களுக்கு உணர்த்தற்பாலனவற்றை உணர்த்துதல் **அநுக்கிரகம்**. தடுத்தற்பாலனவற்றைத் தடுத்தல் **திரோபவம்**. சஞ்சித கன்மங்களைப் பிரசவோன்முகமாகச்செய்தல் **திதி**. [2] சேதனசேதனப் பொருள்களைப்

1. மிருகேந்திரம் பதிஸ்வரூபபிரகாரணம்.
2. சேதனம் – அறிவுடைப்பொருள், அசேதனம் – அறிவில்லாத பொருள்.

பார்த்துக்கொண்டிருத்தல் சிருட்டி. இதுவே கேவலாவத்தையில் நிகழும் சூக்கும பஞ்சகிருத்தியமாம்.

கந்தபுராணம்.

கடல்விட நுகர்ந்த தொல்லைக் கடவுள்பின் னளிக்குங் காலை
யுடலுயி ரகிலம் யாவு மொடுங்கிய விடம தன்றோ
சுடலைய தாகு மந்தச் சுடலைகா ணனைய சோதி
நடநவில் கின்ற வெல்லை நாடருந் தகைமைத் தஃதே.

திருநாவுக்கரசு நாயனார்
தனித்திருவிருத்தம்

1 பெருங்கடன் மூடிப் பிரளயங் கொண்டு பிரமனும் போய்
இருங்கடன் மூடி யிறக்கு மிறந்தான் களேபரமுங்
கருங்கடல் வண்ணன் களேபர முங்கொண்டு கங்காளராய்
வருங்கடன் மீளநின் றெம்மிறை நல்வீணை வாசிக்குமே.

## முத்தொழில் செய்வதால் சிவபெருமான் விகாரமுறார்

இனி, சிவபெருமான் சிருட்டி முதலிய தொழில்களை இடையறாது செய்தலினாலே பாரமெய்தி விகாரி யாகாரோ எனில்; சூரியனது சந்நிதானத்தில் சூரியகாந்தக் கல்லிலிருந்து நெருப்புத் தோன்றுதலும், தாமரை மலர்தலும், நீர் வற்றுதலும் ஆகிய முத்தொழில்களும் நடைபெறினும், அவற்றினாற் சூரியன் விகார மெய்தாது நிற்றல் போலச் சிவபெருமானது சந்நிதியில் முத்தொழிலும் நடைபெறினும், அவற்றாற் பரமசிவன் விகாரமடையாது நிற்பர் என்பதாம். ஆதலால் சிவபெருமான் நிர் விகாரி எனப்படுவர்.

## முத்தொழிற்கும் சுதந்திரம் சிவபெருமானுக்கேயுண்டு

பிரம விட்டுணு முதலாயினோர் பிரகிருதிமாயை வரையுமுள்ளவர்கள்; முப்பத்தாறு தத்துவ வரம்பைக்

1. இத்தேவாரம் சிவபிரானது முழுமுதற்றன்மையையும் அநாதித்தன்மையையும் குறிக்கின்றது; மிருங்கடன்மீள – உலகம் புனருற்பவமாகும் பொருட்டு. வீணைவாசிக்கும். உலககாரணமாகிய மாயை எழுப்பும் பொருட்டு நாத முழக்குச் செய்வர். களேபரம் – உடம்பு.

கடந்தவராய் பஞ்சகிருத்திய பதியாயுள்ளவர் பரமசிவ ஞெருவரேயாவர். பிரம விட்டுணுக்கள் புண்ணிய விசேடத்தால் முதல்வனுருடைய அதிகாரத்தை அவருடைய ஏவலாற் பெற்றவர்களன்றிப் படைத்தல் காத்தல் என்னுந் தொழில்களுக்கு அவ்விருவரும் சுதந்திரர் அல்லர்[1]

விட்டுணுவுக்குக் காத்தற்ருெழில் சுதந்திரமாயின், அவர் தம்முடைய மகனுகிய மன்மதனைச் சிவபெருமான் நீருக்கிய காலத்து நீறுபடாது காத்திருக்கலாம், பிரமாவுக்குப் படைப்புத்தொழில் சுதந்திரமாயின் சிவபெருமானுற் கொய்யப்பட்ட தமது தலையை மீளப் படைத்திருக்கலாம். அங்ஙனம் செய்யாமையினுல், அவர்களுக்கு அத்தொழில்கள் சுதந்திரமாகாமை உணரப்படும். அயன் அரி இருவரும் பரமசிவனது ஏவுதலினுலே தங்கள் தங்கள் கிருத்தியங்களைச் செய்கின்றமையினுல் அவர்களுக்கு முதன்மை சிறிதேனுமில்லை; எல்லா முதன்மையும் சிவபெருமானுக்கே உரியனவாம்.

## எண்குணம்

இங்ஙனம் கூறப்பட்ட பஞ்சகிருத்திய கருத்தாவாகிய பதிக்கு உரியனவாகிய குணங்கள்:- தன்வயத்தனுதல், தூயவுடம்பினனுதல், இயற்கை உணர்வினனுதல். முற்றுமுணர்தல், இயல்பாகவே பாசங்களினீங்குதல், பேரரு

---

1. பிரம விட்டுணுக்கள் புண்ணிய விசேடத்தால் உயர்ந்த அதிகார சக்தியைப் பெற்றவர்களென்பது "நல்வினைக்கண் வாணுளின் மாலா யயனுகி" என்ற போற்றிப் பஃருெடையாற் றெளியப்படும். முத்தொழிற்கும் பரமேசுரனே சுதந்திரர் என்பது, வேதம் புராணம் இதிகாசம் முதலியவற்றிற்கும் கருத்தென்பது. சதுர்வேத தாற்பரிய சங்கிரகம் சிவதத்துவவிவேகம் முதலியவற்றுட் கண்டுகொள்க,

**கந்தபுராணம் உபதேசப்படலம் செ, 31**

பதியரன் பாசந் தன்னிற் பட்டுழல் பசுநா மென்றே
விதியோடு மறைகள் கூறு மெய்ம்மையைத் தெளிய வேண்டின்
இதுவென வுரைப்பன் யாங்க ளிவ்வர சியற்ற வீசன்
அதிர்கழ லருச்சித் தேத்து மாலயம் பலவுங் காண்டி,

ளுடைமை, முடிவிலாற்றலுடைமை, வரம்பிலின்ப முடைமை என எட்டாம். [1] இவற்றுள்ளே, தன்வயத்தனு தலைச் **சுவதந்திரத்துவம்** எனவும், தூய வுடம்பினனுதலை **விசுத்ததேகம்** எனவும், இயற்கை உணர்வினனுதலை **நிராமயான்மா** எனவும் முற்றுமுணர்தலைச் **சர்வஞ்ஞத்துவம்** எனவும், இயல்பாகவே பாசங்களினீங்குதலை **அநாதிபோதம்** எனவும், பேரருளுடைமையை **அலுப்தசத்தி** எனவும், முடிவிலாற்றலுடைமையை **அநந்தசத்தி** எனவும், வரம்பிலின்பமுடைமையைத் **திருப்தி** எனவும் கூறுவர். இவ்வெண் குணங்களுள், இயற்கை உணர்வினனுதலை இயல்பாகவே பாசங்களினீங்குதலினும். தூயவுடம்பினனுதலைப் பேரருளுடைமையினும் அடக்கி ஆறெனவுங் கூறப்படும். இயல்பாகவே பாச நீக்கமிருப்பின் இயற்கையுணர்வுண்டாதலும், பேரருளுடைமையிருப்பின் ஞானத்திருமேனியிருத்தலும் கூடுமாறறிக. சிவபெருமானுக்கு இவ்வாறு குணங்களுமிருத்தலால் அவர் **சுத்தசாட்குண்யர்** எனப்படுவர்.

இனி, இவ்வெண்குணங்களும் **சத்து, சித்து, ஆனந்தம்** என்னும் மூன்றனுள் அடங்கும். எங்ஙனமெனில், எக்காலத்தும் ஒரே தன்மையாயிருக்கும் பொருள் சத்து. ஆகையினுலே தன்வயத்தனுதல் சத்திலடங்கும்; வரம்பிலின்பமுடைமை ஆனந்தத்தில் அடங்கும்; தூயவுடம்பினனுதல், இயற்கை உணர்வினனுதல், முற்றுமுணர்தல், இயல்பாகவே பாசங்களினீங்குதல், பேரருளுடைமை முடிவிலாற்றலுடைமை என்னும் ஆறும் சித்திலடங்கும் என்பதாம்.

இவ்வெண்குணங்களுமுடைய சிவபெருமானைக் ''குணாதீதன்'' ''நிர்க்குணன்'' என்று கூறுதல் எவ்வாறு பொருந்தும் எனில்; குணமானது மாயாகுணமும் ஞானகுணமுமென இருவகைப்படும். அவற்றுள் மாயையின் குணம் [2] சாத்துவீகம் இராசதம் தாமதம் என மூவகைப்

1. கோளில் பொறியிற் குணமிலவே யெண்குணத்தான் றாளை வணங்காத் தலை. —உத்தரவேதம்.
2. சாத்துவிகம் சாந்தத்தையும் இன்பத்தையும் தரும். இராசதம் பிரவிருத்தியையும் துன்பத்தையும் தரும். தாமதம் மோகத்தையும் மூடத்தையும் தரும்.

படும். இம் முக்குணங்களும் மாயாகாரியமாகிய தநுகரண புவனபோகங்களிற் கட்டுப்பட்டிருக்கும் ஆன்மாக்களிடத்து நிகழ்வனவாம். ஒன்றேடொன்று மாறுபட்ட இம்முக் குணங்களும் பந்தத்துக்கு ஏதுவாகும். இறைவர் மாயா குணங்களைக் கடந்தவராகையினுல் இம் முக்குணங்களையுங் கடந்தவரென்பது தோன்றக் ''**தணுதீதன்**'' ''**நிர்க்குணன்**'' என்பது பொருந்துவதாம். ஆகையால் பரமசிவன் ஞான குணமுடையவரென்பதே தேற்றம்.

இனி, இந்த ஞானகுணம் எட்டுவகைப்படுவது என்னை யெனில்; எட்டுத்தன்மை சிவனுக்கு இன்றியமையாது வேண்டப்படுதலால் எட்டுவகைப்பட்டனவாம்,

*(1)* உயிர்க்கு வினையின்பயனுகிய இன்ப துன்பங்களை ஊட்டுவித்தற்கும், இருவினையொப்புவந்த ஆன்மாக்க ளுக்கு மூத்தி கொடுத்தற்கும் எண்ணியதை எண்ணிய படி முடிக்குந்தன்மையாகிய தன்வயமென்னும் சுவதந் திரத்தன்மை வேண்டப்படும்.

*(2)* இவ்வாறு செய்யும் இறைவருக்கு, வடிவம் உரு வமாயின் வியாபகமாய் எல்லாவற்றையும் அறிதல் கூடாது; ஆதலின் வியாபகமாய் எல்லாவற்றையும் அறி யுந்தன்மையாகிய தூய உடம்பென்னும் விசுத்த தேகம் வேண்டப்படும். அது சித்துருவெனப்படும்.

*(3)* சித்துருவாயினும் ஆன்மாவாகிய சித்துப்போல அறிவிக்க அறியுமாயின் சுவதந்திரமாகிய தன்வயத்துக் கிழுக்காதலின் தானே அறியுந் தன்மையாகிய இயற்கை யுணர்வென்னும் [1] நிராமயம் வேண்டப்படும்.

*(4)* மலமில்லா திருப்பினும், மலநீங்கிய முத்தான் மாவைப்போல, ஏகதேச அறிவுடையதாயின், பஞ்சகிருத் தியம் கூடாதாகலின், முற்றுணர்தலாகிய சர்வஞ்ஞத் துவம் வேண்டப்படும்.

*(5)* சர்வஞ்ஞத்துவம் மலநீங்கிய முத்தான்மாவிடத் துக் காணப்படுதல் போலவாயின், இயற்கையுணர்வின

---

1. ஆமயம் - துன்பம் மலம். நிராமயம் – மலமில்லாமை.

னென்றல் பொருந்தாதாலின். இயல்பாகவே பாசங்களி னீங்குதலாகிய அநாதிபோதம் வேண்டப்படும்.

(6) பாசமில்லாதிருப்பினும் அருளுடையனுய் இருந் தாலன்றி அநுக்கிரகிக்க முடியாதாதலின் பேரருளுடைமை என்னும் [1] அலுப்தசத்தி வேண்டப்படும்.

(7) அருளுடையனுயினும் அளவிறந்த உயிர்களின் பொருட்டு அவரவர் கன்மத்துக்கேற்பப் பலவகைப் பட்ட தொழில் செய்யவேண்டுதலின், முடிவிலாற்றல் என்னும் அநந்தசத்தி வேண்டப்படும்.

(8) அநந்தசத்தியிருப்பினும் அதனுல் துன்பமில்லா மல் கொடுக்கக் குறையாத பூரண இன்பமுடையவனு யிருந்தாலன்றி உயிர்களுக்கு ஆனந்த பூர்த்திசெய்தல் கூடாதாதலின், வரம்பிலின்பமென்னும் திருப்தி வேண் டப்படும்.

சுந்தரமூர்த்திநாயனுர்

இரும்புயர்ந்த மூவிலைய சூலத்தி னுனை
யிறையவனை மறையவனை யெண்குணத்தி னுனைக்
கரும்புயர்ந்த கொன்றையொடு தூமதியஞ் சூடுஞ்
சடையானை விடையானைச் சோதியெனுஞ் சுடரை
யரும்புயர்ந்த வரவிந்தத் தணிமலர்க ளேறி
யன்னங்கள் விளையாடு மகன்றுறையி னருகே
கரும்புயர்ந்து பெருஞ்செந்நெ னெருங்கிவிளை கழனிக்
கானுட்டு முள்ளூரிற் கண்டுதொழு தேனே.

கந்தபுராணம்

நற்குண முடைய நல்லோரு நாடொறுஞ்
சிற்குண னுகுமச் சிவன்ப ராபரன்
சொற்குண மூவகைத் தொடர்பு மில்லதோர்
நிர்க்குண னவன்செய னிகழ்த்தற் பாலதோ.

இவ்வாற்ருல், இவ் வெண்குணங்களும் சிவபெரு மானுக்கு இயல்பாயுள்ள குணங்கள் என்பது தெளியப் படும்.

இவ்வாறு முற்றுணர்வு முதலிய [1] நிரதிசய குணங் களுடையவராய் ஆன்மாக்களிடத்துள்ள கைம்மா

---

1. லுப்தம் — கொடாமை; அலுப்தசத்தி — கொடுக்குஞ்சத்தி.
2. நிரதிசயகுணம் — மாறுதலடையாத குணம்; மிக மேலா கிய குணம்.

றில்லாத அளவுகடந்த திருவருளே திருமேனியாகவுடையவராய்த் தாம் செய்யுந் தொழில்களுள் ஒன்றுயினுந் தம்முடைய பிரயோசனத்தைக் குறியாது ஆன்மாக்களுடைய பிரயோசனத்தைக் குறித்துச் செய்பவராய், சகலலோகத்துக்கும் ஒரே நாயகராய்ச் [1] **சங்கரன்** என்னுந் திருநாமத்தை யுடையவராயுள்ள சிவபெருமானே ஆன்மாக்களுக்கு நிலையான சுகத்தைக் கொடுத்தருளவல்லவர்.

வைத்தியநாதராகிய சிவபெருமான் இடையருத மெய்யன்போடு தம்மை வழிபடுவோருக்குத் திருவருளென்னும் மருந்தையூட்டி, அநாதியே பிறவிக்குக் காரணமாயிருக்கும் ஆணவமலமென்னும் பிணியைப் போக்கி முத்திகொடுத் தருள்செய்வர். அந்த மோக்ஷ இன்பமே நிலையான செல்வம். பரமசிவனை அன்போடு வழிபடின் அந்த வீட்டின்பத்தை அடைதற்குச் சந்தேகமில்லை.

திருவருட்பயன்

உன்னுமுள தைய மில துணர்வா யோவாது
மன்னுபவந் தீர்க்கு மருந்து.

## பசு இலக்கணம்

உலகமானது காரியமாயுள்ளது. காரியங்களெல்லாம் பயன்படுதற்குரியன. காரியமான உலகத்திஞல் வரம்பிலின்பமுடைய பதிக்கு உபயோகமில்லை; மிகமேலாகிய குணங்களையுடைய கருத்தாவிஞற் செய்யப்பெற்றமையின் அஃது பயனற்றதுமன்று; ஆதலிஞல் அதஞலாய உபயோகத்தை அடைதற்குரியவர் உளர்; அவர்கள் பசுக்களெனப்படுவர்.

பசுக்களாவர் பாசங்களிஞற் பந்திக்கப்பட்ட ஆன்மாக்கள். அவ்வான்மாக்கள் அநாதியே பாசசம்பந்த

1. சலமிலன் சங்கரன் சார்ந்தவர்க் கல்லா
னலமில ஞடோறு நல்கு வானலன்
குலமில ராகினுங் குலத்துக் கேற்பதோர்
நலமிகக் கொடுப்பது நமச்சிவாயவே.

சங்கரன் — சுகத்தைச் செய்பவன், சம் – சுகம், கரன் — செய்பவன்

முடைமையிற் பசுக்கள் என்று சொல்லப்படுவர்.[1] ஆன்மா என்னுஞ் சொற்கு வியாபகம் என்பது பொருள்.

ஆன்மாக்கள் அனேகராய், [2]சேதனராய், [3]வியாபகராய், நித்தியராய், பாசத்தாற் றடைப்பட்டவராய், சுதந்திரத் தன்மை இல்லாதவராய், சார்ந்ததன் வண்ணமாய், சரீரந்தோறும் வெவ்வேறாய், வினைகளைச் செய்து வினைப் பயன்களை அனுபவிப்போராய், [4]சிற்றறிவுஞ் சிறுதொழிலும் உடையோராய், பதியினால் அனுக்கிரகஞ் செய்யத் தகுந்தவராய் உள்ளவர்.

கந்தபுராணம்

மூவகை யெனுந்தளை மூழ்கி யுற்றிடு
மாவிக ளுலப்பில வனாதி யுள்ளன
தீவினை நல்வினைத் திறத்தின் வன்மையா
லோவற முறைமுறை யுதித்து மாயுமே.

[5]பதியை யடைதற்கு உரிமையுடையனவாகிய ஆன்

---

1. பசு — பாசக்கட்டுடையவர். பச் — பந்தித்தல், உ—செயப்படு பொருள் விகுதி.

2. சேதனம் — அறிவுடைப்பொருள். தூலசித்து — பசு. சூக்குமசித்து — ஆன்மா. அதிசூக்குமசித்து — சிவம். தூலசித்து பிறிதொன்றின உபகாரத்தால் அறிவது. அதிசூக்குமசித்து — தானே அறிவது, உயிரின் பெத்தநிலை பசுவும் முத்திநிலை ஆன்மாவுமாம். முத்திநிலையில் அருளின் உபகாரமிருப்பினும், வேறு நில்லாமையால் உயிர் சூக்குமமாயிற்று,

3. உயிர் வியாபகமாயினும் ஒன்றனைப் பற்றுங்கால் பிறிதொன்றினைப் பற்றாது; அதாவது மண்ணுலகத்தைப் பற்றுங்கால், சுவர்க்கநரகங்களைப் பற்றாது, மண்ணுலகத்தும் ஓர் உடம்பைப் பற்றுங்கால், பிறிதோருடம்பைப் பற்றாது; ஒருஉடம்பைப் பற்றி நிற்குங் காலத்தும் ஒரு இந்திரியத்தைப் பற்றுங்கால், பிறிதொரு இந்திரியத்தைப் பற்றாது. ஆதலின் உயிர் ஏகதேச வியாபகம் எனப்படும்.

4. அநாதிமலசம்பந்தத்தினால் பசுசிற்றறிவுடையன்; அநாதி மலத்தினின்றும் நீங்கினமையால் சிவன் சர்வஞ்ஞர் — கிரணாகமம்

5. பசுக்களுக்குப் பதியாயிருத்தலின் பரமசிவன் பசுபதி எனப்படுவர். ''பாதி மாதொரு கூறுடையானே, பசுபதீ பரமா பரமேட்டி'' (சுந்தர்.) ''பாகம்பெண் ணாண்பாக மாய்நின்ற பசுபதியை'' (திருநா) எனத் தமிழ்வேதம் கூறும்.

மாக்கள் மலபந்த வேறுபாடுபற்றி விஞ்ஞானகலர் பிரளயாகலர், சகலர் என மூவகைப்படுவர். அம்மூவருள்ளும் விஞ்ஞானகலர் ஆணவ மலமாத்திரமுடையவர் என்றும், பிரளயாகலர் ஆணவம் கன்மமென்னும் இரு மலமுடையவர் என்றும், சகலர் ஆணவமலம் கன்மமலம் மாயாமலம் என்னும் மூன்று மலமுடையவர் என்றும் சொல்லப்படுவர்.

திருவருட்பயன்

திரிமலத்தா ரொன்றதனிற் சென்றார்க ளன்றி
யொருமலத்தா ராயு முளர்.

## பாச லக்கணம்

ஆன்மாக்கள் எதனாற் பந்திக்கப்பட்டுள்ளனவோ அதுவே பாசம் எனப்படும்,[1]

உலகத்திலே யாதாயினுமொரு கட்டுப்பாட்டுள் அடக்கப்படாதவனாகி இருப்பவன் சுவதந்திரமுடையவனாயும், கட்டுப்பாடுற்றவன் பரதந்திரனாயுமிருத்தல் காணப்படுகின்றது. ஆன்மாக்கள் வேண்டாதது பெறுதலும், வேண்டியது பெறாமையும் உடையராதலினாலே பரதந்திரர் என்பதும் பரதந்திரர் எனவே கட்டப்பட்டவர் என்பதும் இனிது துணியப்படும். அங்ஙனம் கட்டி நிற்பது யாது அதுவே பாசமாம்.

பாசம், மலம், தளை என்பன ஒரு பொருட்சொற்கள். பாசமானது **ஆணவம், மாயை, கன்மம்,** மாயேயம், **திரோதாயி** என ஐந்துவகைப்படும்.

இப் பஞ்சபாசங்களுள் முதலாவதாகியமலமானது, வியாபக உயிரின் அறிவிச்சை செயல்களை அணுத்தன்மையாக்குவதால் **ஆணவ**மெனப்படும். அதன் சொரூபம் மிக இருண்ட பேரிருள் வடிவமாம். அதன் செயல் ஆன்மாக்களுக்கு அஞ்ஞானத்தைச் செய்தலாம் கேவலத்தில் உயிர்களுக்கு அறியாமையைச் செய்வது ஆணவ பந்தத்தின் சிறப்பிலக்கணம் எனப்படும் சிறப்பிலக்கணம்

1. பச—பந்தித்தல் அ—கருவிப் பொருள் விகுதி.

எனினும் தன்னியல்பெனினும் ஒக்கும். சகலத்தில் கருவிகளோடு விபரீத உணர்வைச் செய்தல் அதன் பொதுவியல்பெனப்படும்.

ஆணவமானது நித்தியமாய், [1]வியாபகமாய், [2]செம்பிற்களிம்பு போன்றதாய், ஆன்மாக்களில் அநாதியே உடன் கலந்து நிற்பதாய், ஏகமாய், கன்மத்திற்குத் தக்கவாறு பந்திப்பதாய், ஆன்மாக்கள் தோறும் வெவ்வேருய், ஆன்மாவின் இச்சாஞானக்கிரியைகளை மறைப்பதாய், உயிர்கள் அவத்தை அடைதற்கு மூலகாரணமாய், தத்தங் கால எல்லையில் நீங்கும் சத்திகள் பல பலவுடைத்தாய்ச் சடமாயுள்ளது.

படலமாகிய மாசுபடர்ந்தகண், சூரியன் சந்நிதியில் நிற்பினும், படலத்தால் சூரியன் ஒளியையிழந்து இருளில் அழுந்தமாறுபோல, இவ்வாணவமலத்தாற் பந்திக்கப்பட்ட உயிர், இறைவனுரது சந்நிதியில் அநாதியே நிற்பினும், படிமுறையாக அறிவிக்க அறியுந்தன்மையுடையதாய், அநாதியே அறிவித்தால் அறியமாட்டாததாய், அவ்வாறு அறியமாட்டாமையினுல் சிவபெருமானுல் உண்டாம் அறிவையிழந்து ஆணவமலத்தினுலுண்டாம் அறியாமையால் அழுந்துதலின், அவ்வாணவமலம் உயிருக்குப் பந்தமாகும்.

[3]ஆணவத்தின் பரியாய நாமங்கள்:- பசுத்துவம்,

---

1. பல உயிர்களுடன் கலந்து நிற்குந்தன்மையால் வியாபகம் எனப்படும்.

2. ''செம்பிற்குக் களிம்புபோலென்றது மலம் அநாதியென்பதற்குத் திருஷ்டாந்தம். செம்பிற் களிம்பானது அநாதியாய் ஒன்ருய் சகஜமாயிருக்கும் மலமுமது போலாகும் செம்பிற் களிம்பு வந்ததற்குக் காரணமில்லை, அப்படியே யான்மாவும் அநாதியே மலசம்பந்தமுடைமையால் மலினனுனுன். சிவன் அநாதிமலமின்மையால் நிர்மலன்.'' (சித்தாந்த சாராவளி)

3. மிருகேந்திராகமம் பாசலக்ஷணபிரகரணம் முதலியவை காண்க. பசுத்துவம்—உயிருக்குப் பசுத்துவத்தைச் செய்தல். பசுநீ காரம் – பசுவின் அறிவை மூடல். மிருத்தியு – உயிரை சீவிக்கவொட்டாது செய்தல். மூர்ச்சை – மயங்கிக்கிடகச் செய்தல் மலம் — அசுத்தமாக்கல் அஞ்சனம் — இருள் போல நிற்றல். அவித்தை – அறியாமையைச் செய்தல். ஆவிருதி—மறைத்தல். ஆவரணம்—மூடுதல், மறைத்தல். தமசு இருள்போல நிற்றல்.

பசுநீகாரம் மிருத்தியு மூர்ச்சை, மலம், அஞ்சனம், அவித்தை, ஆவிருதி, ஆவரணம், தமசு, மோகம், மூலம், சடம், அஞ்ஞானம், முதலியன.

களிம்பு செம்புடன் சகசமாயிருந்தும் இரசகுளிகை யால் தீரும், அதுபோல ஆணவமலமும் ஆன்மாக்களு டன் கூடஉதித்தும் சிவசத்தியாற் போக்கப்படும்.

திருநாவுக்கரசு சுவாமிகள்
திருத்தாண்டகம்

மூலநோய் தீர்க்கு முதல்வன் கண்டாய்
முத்தமிழு நான்மறையு மானான் கண்டாய்
ஆலின்கீழ் நால்வர்க் கறத்தான் கண்டாய்
ஆதியு மந்தமு மானான் கண்டாய்
பால விருத்தனு மானான் கண்டாய்
பவளத் தடவரையே போல்வான் கண்டாய்
மாலைசேர் கொன்றை மலிந்தான் கண்டாய்
மறைகாட் டுறையு மணாளன் றானே.

ஆணவமலமானது சகலரெனப்பட்ட ஆன்மாக்களுக் குச் சகலாவத்தையில் அராகம் முதலிய கருவிகளுடன் கூடிநின்று மோகம் முதலிய எழுவகையான காரியங்களை யுஞ் செய்விக்கும். அவை **மோகம், மதம், இராகம், கவலை, தாபம், வாட்டம்** என்பனவாம். அவற்றுள்,

மோகமாவது: அதிபாதகம் முதலிய பஞ்சபாதங்க ளைக் குருவால் உணர்ந்திருப்பினும், அவ்வுணர்ச்சிகள் சிறிதும் விளங்காதபடி இழப்பித்து அவற்றை நன்றென்று செய்விப்பது.

மதமாவது: செல்வம் முதலியவைகளால் தமக்கு ஒருவரும் நிகரில்லையென மதித்தல்.

இராகமாவது: சிவத்திரவியம் முதலியவற்றைக் கவர் தற்கு வாஞ்சையைச் செய்விப்பது.

கவலையாவது: கிட்டியபொருள் பிரிந்தபொழுது வருந்துதல்.

தாபமாவது: சுற்றத்தைவிட்டுப் பிரிவதற்கும் பிரிந்த தற்கும் ஆற்றாமை.

வாட்டமாவது: அவ்வாற்றாமையால் முகமலர்ச்சியின்றி வாடுதல்.

விசித்திரமாவது: நமக்குப் பரமசிவன் எல்லாவிதமான இருவினைப் பயன்களையும் தைவிகம் முதலிய மூவகையாலே தருவன் என்னும் உணர்வையிழப்பித்து, இவன் என்னைத் தாழ்வித்தான் வாழ்வித்தான்; யான் இவனைத் தாழ்வித்தேன், வாழ்வித்தேன் என்று எண்ணுதல்,

## திரோதான சத்தி

[1] ஆன்மாவின் இச்சாஞானக்கிரியைகளை மறைக்கும் ஆணவ மல சத்தியைச் செலுத்திநிற்றலால், பராசத்தி **திரோதானசத்தி** எனப்படும். மலங்களைத் தொழிற்படுத்துந் திரோதானசத்தி பராசத்தியில் அடங்குமாயினும், தொழில் வேற்றுமைபற்றி வேறுவைத்தெண்ணப்படும்.

வேற்றுமையாவது பராசத்தி கருணையொன்றே செய்து நிற்கும். திரோதானசத்தி[2] கருணை காரணமாக அவரவர் செய்த கன்மத்துக்கு ஏற்றவாறு ஆன்ம அறிவை மறைத்து, தானும் மறைந்து நின்று மாயாகாரியங்களை விரித்துக் கலாதி அறிவுகளைக் கொடுக்கும். ஆன்மாக்கள் அவ்வறிவைப் பொருந்தி வேத முதலிய நூல்களை ஓதியுணர்ந்தாராயினும், அவர்களுடைய கன்ம அளவிற் சிவபெருமானை அறியவொட்டாது மறைத்து நிற்கும்.

இப்படி மலத்தோடு கூடிநின்று காரியப்படுத்தி வேண்டுமுபாயங்களைச் செய்தலால், சிவசத்தியாகிய அதனை மலத்தோடுங்கூட்டி மலமென்று பெரியோர்கள் சொல்லுவார்கள். ஆயினும் அது மலமன்று; உயிர்கள்மேல் இரங்கிச் சிவபெருமானுடைய திருவடிகளை அடையும்படி அதற்கேற்ற வகைகளைச் செய்துகொண்டு, மிகுந்த பேரருளாகவே விளங்கும்.

---

1. சிவப்பிரகாசம் இரண்டாம் சூத்திரம் செ. உ. தத்துவப் பிரகாசம் 37.

2. திரோதானம் – மறைப்பு,

இருவினையொப்பும் மலபாகமும் உண்டான அளவில் திரோதானசத்தி அறக்கருணைகொண்டு ஆன்மா சிவ பெருமானை அடையுமாறு செலுத்தி நிற்கும். இதனை மலமென்பது உபசாரமாம் இச் சத்தி. ஆதிசத்தியென் றும் பெயர் பெறும்.

## மாயை

மா—ஒடுங்குதல், யா—தோன்றுதல் எனவே, பிர பஞ்சமெல்லாந் தன்னிடத்து ஒடுங்குதற்கும், தன்னிடத் தில் தோன்றுதற்குங் காரணமாயுள்ளது மாயையாம். மாயையானது **சுத்தமாயை, அசுத்தமாயை, பிரகிருதி மாயை** என மூவகைப்படும்.

## சுத்தமாயை

சுத்தமாயையாவது, நித்தியமாய், வியாபகமாய், அருவமாய், சடமாய், மயக்கஞ் செய்யாததாய், சொல் வடிவும் சுத்தமாகிய பொருள்வடிவுந் தோன்றுதற்கு முதற்காரணமாய், மூவகை யான்மாக்களிடத்தும் நிறை வுடையதாய், விஞ்ஞானகலருக்கும் பிரளயாகலருக்கும் தன்காரியமாகிய விந்துவிலிருந்து சுத்த தனு கரண புவன போகங்களை உண்டாக்கிக் கொடுப்பதாய் உள்ளது.

இதிலிருந்து சொல்வடிவும் பொருள் வடிவுமாகிய இருவகைப் பிரபஞ்சங்களையுந் தோற்றுவித்தற்பொருட்டு ஆதிசத்தி தொழிற்படுங்கால் இச்சாசத்தி ஞானசத்தி கிரியாசத்தி என முத்திறப்படும்.

அவற்றுள், ஞானசத்தி சுத்தமாயையைப் பொருந்தி வியாபரித்தலால் அம்மாயையிலிருந்து **சிவதத்துவ** மெனப்படும் நாததத்துவந் தோன்றும்.

அந்த நாததத்துவத்திலே கிரியாசத்தி பொருந்தித் தொழில் செய்தலால், **சத்தி**தத்துவம் எனப்படும் **விந்து** தத்துவம் தோன்றும்.

அவ்விந்துவில் ஞானசத்தியும் கிரியாசத்தியும் சம மாக வியாபரித்தலால், **சாதாக்கிய** தத்துவந் தோன்றும்.

சாதாக்கிய தத்துவத்திலே கிரியை ஏறி ஞானங் குறைந்து தொழில் செய்தலால் **மகேசுவர** தத்துவந் தோன்றும்.

மகேசுவரதத்துவத்திலே ஞானமேறிக் கிரியை குறைந்து வியாபரித்தலால் **சுத்தவித்தியா**தத்துவந் தோன்றும்.

நாததத்துவத்திற் சிவமும், விந்துதத்துவத்தில் சத்தியும், சாதாக்கிய தத்துவத்திற் சதாசிவமும், மகேசுவர தத்துவத்தில் மகேசுவரனும். சுத்தவித்தியாதத்துவத்தில் உருத்திரனும் என்னும் ஐவரும் அதிபராய் நின்று தொழில் செய்வர்.

இவ்வைந்து தத்துவங்களிலும் முதல்வனது ஞானசத்தியும் கிரியாசத்தியும் அதிட்டித்தலாலும், சிவதத்துவ புவனவாசிகளுக்கு [1] சர்வஞ்ஞத்துவம் [2] சர்வகர்த்திருத்துவங்களை விளக்குதற்குச் சாதனங்களாகையாலும் இவை சுத்ததத்துவம் என்றும், சிவதத்துவம் என்றும் 3 பிரேரக காண்டம் என்றும் பெயர்பெறும்.

இத் தத்துவங்களேயன்றிச் சாந்தியதீதை, சாந்தி வித்தை, பிரதிட்டை, நிவிர்த்தி என்னும் ஐந்து கலைகளும், சுத்தமாகிய புவனங்களும் சுத்தமாயையிலிருந்து தோன்றும்.

விந்துதத்துவத்தில் சூக்குமை, பைசந்தி, மத்திமை, வைகரி என்னும் நான்கு வாக்குக்களும், ஐம்பத்தோரக்கரங்களும், எண்பத்தொரு பதங்களும், பதினொரு மந்திரங்களும், சத்தகோடி மகாமந்திரங்களும், விஞ்ஞான கலர் பிரளயாகலருக்குத் தனு கரண புவனபோகங்களுந் தோன்றும். இவைகள் சுத்தமாயாகாரியங்களாம்.

அக்கரம், பதம், மந்திரம் என்னும் மூன்றும் சொற்பிரபஞ்சங்களாம். கலை, தத்துவம், புவனம் என்னும் மூன்றும் பொருட்பிரபஞ்சங்களாம்.

---

1. சர்வஞ்ஞத்துவம் – எல்லாவற்றையும் அறியுந் தன்மை.
2. சர்வகர்த்திருத்துவம் – எல்லாத் தொழிலுமுடைமை.
3. பிரேரகம் – ஏவுதல். இவை அசுத்தமாயா தத்துவங்களைப் பிரேரகஞ் செய்தலாற் பிரேரக காண்டம் எனப்படும்.

## நால்வகை வாக்கு.

ஆணவமல மறைப்பை நீக்குதற்பொருட்டுச் சிவபெருமானுடைய திருவருளால் சுத்தமாயா காரியமான [1] வாக்குகள் ஆன்மாவை வந்துபொருந்தும். ஆன்மாக்களின் அறிவு இவ்வாக்குக்களோடு கூடி விளக்கமுறும். இவ்வாக்குகளைக் கூட்டி அறிவைத் தருகின்ற திருவருளை ஆன்மாக்களறிந்து பொருந்தாதபடி ஆணவம் மறைத்து நிற்கும்.

ஆன்மாக்கள் அறிவைப் பொருந்தும் முறையும், அம்மாயா காரியங்களின் செயலும் என்னவெனில்: ஞானமாத்திரைக் கேதுவாகியும், பரசரீரத்தினுள்ளாகப் பிரகாசமாய் விளங்கியும் ஆன்மா அறியும் அறிவுக்கீடாக, மூலாதாரத்தில் விளங்கும் பிந்துத் தானத்திலிருந்து, நாதமயமான சூக்குமைவாக்குத் தோன்றி உந்தித் தானத்திற் செல்லும். அங்கே எழுத்துக்களை வெவ்வேருகப் பிரியவிடாமல் அடக்கிக்கொண்டு மீளவுஞ் சூக்கும ரூபமாய், நிர்விகற்ப உணர்விற்கேதுவாய் இருக்கும். இந்நிலையில் அது பைசந்திஎனப்படும்.

பின்பு அவ்வாக்கு அங்கிருந்து உதானவாயுவாலுந்தப்பட்டு, இருதயத்தானத்தை அடையும். அங்கே உதான வாயுவின் தொழிலால் எழுத்துக்கள் வெவ்வேருகப் பிரிவுபட்டுச் சூக்கும ரூபமாய் விளங்கி, மெல்லோசையாய்ச் சொல்வோன் உள்ளே உணரும் விகற்ப உணர்விற் கேதுவாய், கண்டத்தானம் வரையில் நிற்கும் அந்நிலையில் அது மத்திமை எனப்படும்.

பின்பு அவ்வாக்குப் பிராணவாயுவினுல் உந்தப்பட்டு எழுந்து பல், இதழ், நா, அண்ணம் என்னும் உறுப்புக்களிற்பட்டு விகாரமடைந்து சிதறித் தன்செவிக்கும் பிறர்

---

1. "அந்த எழுத்தோசை வைகரி, மத்தியமை, பைசந்தி, சூக்குமை என் நான்குவிதப்படும்" என்பது பௌஷ்கரம். இவற்றின் இலக்கணம் பௌஷ்கரவிந்துப்படலத்து 19 — 29 சுலோகங்களாகும், இரத்தினத்திரயத்து 76-85சுலோகங்களாகும், சித்தியாரிலும் (சூ-க, அதி1, செ20 — 21) அறியத்தக்கது.

செவிக்கும் கேட்கப்பட்டுச் சவிகற்பஉணர்வுண்டாதற் கேதுவாய் இருக்கும். அந்நிலையில் அது **வைகரி** எனப்படும்

வைகரி தன் செவிக்குக் கேட்கப்படும் **சூக்குமவைகரி** என்றும், தன்செவிக்கும் பிறர்செவிக்கும் கேட்கப்படும் **தூலவைகரி** என்றும் இருதிறப்படும்.

சூக்குமை, பைசந்தி, மத்திமை, வைகரி என்னும் நான்கு வாக்குகளும் கிரியாசத்தியாற் செலுத்தப்பட்டு, சூக்குமை சாந்தியதீதகலையையும், பைசந்தி சாந்திகலையையும், மத்திமை வித்தியாகலையையும், சூக்குமவைகரி பிரதிட்டாகலையையும், தூலவைகரி நிவிர்த்திகலையையும் பற்றுக்கோடாகச் சார்ந்து நிற்கும்,

இங்ஙனம் நான்கு வாக்குக்களும் ஐவகைப்பட்டுச் சூக்குமை சிவதத்துவத்திலும், பைசந்தி சத்திதத்துவத்திலும், மத்திமை சாதாக்கிய தத்துவத்திலும், சூக்குமவைகரி மகேசுவர தத்துவத்திலும், தூலவைகரி சுத்தவித்தை என்னுந் தத்துவத்திலும் சத்தவடிவமாய் விளங்கும்.

இந்தவாக்குகள் பகுத்துணர்வதாகிய சவிகற்பஞானத்துக்கேதுவாதலால், ஆன்மாக்களுக்கு இன்றியமையாது வேண்டப்படும். இவ்வாக்கு இல்லையாயின் விளங்கிய ஞானமில்லையாம். இதனுலுண்டாம் ஞானம் உலகப்பொருளை அறியும் ஞானமாம். ஆகலின் சவிகற்பவுணர்விற்கேதுவாகிய இவ்வாக்குகள் மேலான பந்தமாம். ஆகலின் இவ்வாக்குகளைத் தன்னின் வேருகக் கண்டு நீக்கி, அவற்றிற்கு மேலாகிய பேரறிவு ஒருவனுக்கு விளங்குமாயின் அப்பொழுதே சிவபெருமான் திருவடியாகிய பரமுத்தியை அவன் தலைப்படுவன்.

சதாசிவதத்துவத்தில் அபரநாதமும்அபரவிந்துவுமிருக்

கும். ஈசுவரதத்துவத்தில் பிரணவம் இருக்கும். [1] சுத்த வித்தியாதத்துவத்தில் அகாராதி க்ஷகாராந்த ஐம்பத்தோ ரக்கரமும். காமிகாதி இருபத்தெட்டாகமங்களும் வைகரி வடிவாயிருக்கும்.

சிவதத்துவம் முதலிய ஐந்தும் பரமசிவனுக்கு முறை யேஇலயத்துவம் போகத்துவம் அதிகாரத்துவம் எனப் பெயர் பெறுதற்கு நிமித்தமாயிருக்கும். இத்தத்துவங்கள் ஐந்தினும் சிவபெருமான் தாமாகவே பஞ்சகிருத்தியம் செய்தருளுவர். இலயம் போகம் அதிகாரம் என்னும் பதவிகளை விரும்பிச் சாதகதீக்கைபெற்று மந்திரங்களைச் சாதித்தசாதகர், பின்பு பரமசிவன் அருளால் அந்தப் புவனத்தை அடைந்து போகம் நுகர்ந்து வைராக்கியம் வருமளவாதல், மகாசங்காரம் வருமளவாதல் இருந்து பின்பு வித்தியேசுவரருடனே கூடப்பரமுத்தி அடைவர்.

இதுவரையுங் கூறியது சாக்ஷாத் சிருஷ்டியாகும். இனிக் கூறப்பெறுவது பரம்பரா சிருஷ்டியாகும்.

## அசுத்தமாயையின் இலக்கணம்.

**அசுத்தமாயையாவது** நித்தியமாய், வியாபகமாய் அருவமாய், ஏகமாய், பலசத்திகளை யுடையதாய் உல கத்தோற்றத்திற்கு முதற்காரணமாய், சடமாய், விபரீத உணர்வை உண்டாக்குவதாய், கன்மாதிகாரமுள்ள ஆன் மாக்களைத் தன் காரியங்களாயுள்ள கலாதிகளின் வழி யாய்ப் பந்திப்பதாய், சகலருக்குத் தநு கரண புவன போகங்களைத் தோற்றுவிப்பதாய், சங்கார காலத்தில் ஆன்மாக்கள் வந்து பொருந்துமிடமாய், மும்மலங்களுள்

---

1. சுத்தவித்தியாதத்துவத்தில் சத்தகோடி மகா மந்திரர்களும் கர்மிக முதலிய இருபத்தெட்டாகமங்களும் நந்தி முதலிய கண நாதர் எண்மரும் இந்திரன் முதலிய உலகபாலகரும் வச்சிர முத லிய இவர்கள் ஆயுதமுமிருக்கும். ஈசுரதத்துவத்தில் அநந்தர் முதலிய வித்தியேசுரர் எண்மரும் இருப்பர். (இவை சித்தாந்தப் பிரகாசிகையிற் காணப்பட்டவை.) இங்கே கூறப்பட்ட இந்தி ராதியர் பிரகிருதியின் கீழுள்ள திக்குப்பாலகரின் வேறுவர். பிர கிருதியின் கீழுள்ளவர் இவர்களாற் செலுத்தப்படுபவர்.

ஒன்ருய், திரோதானசத்தியாற் காரியப்படுவதாயிருக்கும்[1]

அசுத்தமாயையிற்ருேன்றிய பிரகிருதிமாயை அநித்தியமெனப்படும்.

மாயை பிரபஞ்சமாய்த் தோன்றுதலும் ஒடுங்குதலும், உயிர்களுக்குக் கருவியாய் நின்று அறிவை விளக்குதலும், போகந்தருதலுமாகிய இவையெல்லாம் செய்தற்கு அறிவில்லாத சடமாகையால் அதனுல் இயலாது. கன்மத்துக்கேற்ப இவற்றைக்காரியப்படுத்துந்தன்மை சிவபெருமானுடைய அருளாகிய திரோதான சத்தியால் நிகழ்வனவாம்.

## கன்மத்தினியல்பு

[2] **கன்**மமானது ஆன்மாக்கள் முற்பிறப்பிற்செய்த இதம் அதிகங்களுக்கீடாக எடுக்கும் உடம்புகளுக்குக் காரணமாய், அவ்வுடம்புகளால் அனுபவிக்கப்படும் பலவிதமான சுகதுக்கங்களைத் தருவதாய், [3] பிரவாகாநாதியாய், பல பேதங்களாய், ஆன்மாக்களை விட்டு நீங்காததாய், மனம் வாக்குக்காயங்களினுற் செய்யப்படும் இயல்பினையுடையதாய், புத்திதத்துவம் பற்றுக்கோடாய், இன்ப துன்பங்களைத்தரும் புண்ணிய பாவவடிவாய்ச் சங்கார காலத்தில் உயிர்கள் மாயையில் ஒடுங்கும்பொழுதும் அவ்வுயிர்களை விட்டு நீங்காது அம்மாயையில் ஒடுங்கும் இயல்புடையதாயிருக்கும் என்று ஆகமங்கள் சொல்லும்.

இக்கன்மமானது சஞ்சிதம், பிராரத்தம், ஆகாமியம் என மூவகைப்படும் அம்மூவகைவினைக்கும் முதற்காரணமாயுள்ளது ஆணவமலமாம்.

---

1. சிவப்பிரகாசம் — பொது — 22: தத்துவப்பிரகாசம் — பாசவிலக்கணம் — 31 – 33. 2 சிவப்பிரகாசம் — பொது 28.

3. பிரவாகாநாதி — இடையருதோடும் நீர்ப்பெருக்குப் போலத் தொன்றுதொட்டு வருதல்.

## சஞ்சிதமும், பிராரத்தமும்

[1] கன்மம் பயன்தரும் முறை மூன்றுவிதமாம். அவை சாதி, ஆயுள், போகம் என்பன. முற்பிறப்பிலே செய்யப்பட்ட நல்வினை தீவினைகள் இப்பிறப்பிற் சாதி, ஆயுள் போகம் என்பவற்றிற்குக் காரணமாய். அவை பிறக்குமுன் சூக்குமமாய்க் கருவினுள் அமைந்து கிடந்து, பிறந்தபின் அனுபவத்துக்கு வருவனவாகும்.

சாதி, ஆயுள், போகம் என்னும் மூன்றும், நல்வினை தீவினைகளுக்குத் தகுந்தபடி உயர்ந்தசாதி, தாழ்ந்தசாதி, அதிகஆயுள் அற்பாயுள், அதிகபோகம் அற்பபோகம் என ஒவ்வொன்று இவ்விரண்டாய் அறு வகைப்படும் அவற்றுள்ளும் பல பேதங்கள் உண்டு. இவைகளெல்லாம் கன்மத்தின் பயனாக வருவனவாம்.

இவ்வுடம்புண்டாதற்குக் காரணம், முற் பிறவியிலே செய்யப்பட்ட கன்மம். அவ்வுடம்புக்குக் காரணம் அதற்கு முந்திய உடம்பில் நின்று செய்யப்பட்ட கன்மம். இப்படியே வித்துக்கு மரமும் மரத்துக்கு வித்தும் காரணமாதல்போல, ஒன்றுக்கொன்று காரணமாயிருக்கும். இப்படி எதுமுதல் உண்டாகிவருமென்பது சொல்ல முடியாததாய்த் தொன்றுதொட்டு வரும். இப்படி வருதல் பிரவாகாநாதி எனப்படும். பிரவாகம் என்பது நீர்ப்பெருக்கு.

---

**சிவஞானசித்தியார்**

1. பேறிழ வின்ப மோடு பிணிமூப்புச் சாக்கா டென்னு
மாறுமுன் கருவுட் பட்ட தவ்விதி யனுப வத்தா
லேறிடு முன்பு செய்த கன்மமிங் கிவற்றிற் கேது
தேறுநீ யினிச்செய் கன்ம மேலுடற் சேரு மென்றே.

**சிவப்பிரகாசம்**

கன்மநெறி திரிவித நற்சாதி யாயுபோகக்
கடனதென வருமூன்று முயிரொன்றிற் கலத்தல்
தொன்மைய தூழல்ல துணவாகா தானுந்
தொடங்கடைவி னடையாதே தோன்று மாறித்
தன்மைதரு தெய்விகமுற் பவுதிகமான் மிகமாந்
தகையிலுறும் சேதனசே தனத்தாலுஞ் சாரு
நன்மையொடு தீமைதரு சேதனனுக் கிவனூ
ணுடிலத னூழ்வினையா நனுகுந் தானே.

ஆற்றுநீர் ஓடும்பொழுது ஒன்று போகஒன்றாய்ப் பெருகி வந்துகொண்டிருப்பதுபோல, உடம்பும் வினையும் ஒன்றுபோக ஒன்றாய்த் தொன்றுதொட்டு அநாதியாக வந்துகொண்டிருக்கும். அநாதி – தொடக்கமும் ஈறுமின்றி என்றும் ஒரு தன்மையாயிருப்பது. பிரவாகாநாதி- தோன்றி அழிந்து தொடர்பாய் வருதல்.

## மும்மலங்களும் அநாதி

ஆன்மாக்கள் அநாதியாயுள்ளன. அவை உள்ள வன்றே ஆணவமலமும் அவைகளோடு சகசமாயுள்ளது. அம்மலமுள்ளவன்றே மாயையுங் கன்மமும் அவைகளோடு கூடியிருக்கும். ஆகையால் மும்மலங்களும் அநாதியா யுள்ளன. அவை நெல்லிடத்துள்ள உமியும் தவிடும் முளையும் போல்வன என்பர்.[1]

நெல்லிலுள்ள முளைத்தற்சத்தி முளையைத் தோற்று விக்குமாறுபோல, கன்மமும் ஆன்மாக்களுக்குச் சுக துக் கங்களை முதற்காரணமாய் நின்று தோற்றுவிக்கும். தவிடு முளைத்தற்கு அனுகூலஞ்செய்து உடனிற்குமாறுபோல மாயாமலமும் அச் சுக துக்கங்கள் தோற்றுதற்குத் துணைக் காரணமாய்த் தன் காரியமாகிய தனு கரணம் முதலிய வற்றையும் ஆன்மாக்களையும் இயைவித்து நிற்கும். உமி முளை தோன்றுதற்கு நிமித்த காரணமாயிருப்பதுபோல ஆணவமலமும் அச் சுகதுக்கத் தோற்றத்துக்கு நிமித்த காரணமாய் நின்று நிலைபெறச்செய்யும்.

திருமந்திரம்.

ஆணவ மாயையுங் கன்மமு மாமலங்
காணு முளைக்குத் தவிடுமி யான்மாவுந்
தாணுவை வொவ்வாமற் றண்டுலமாய் நிற்கும்
பேணு வாய்மற்று நின்பாசம் பிரித்தே.

## இருவினை விளையும் முறைமை

ஒருவன் பூமியில் விதைத்து விளைந்த தானியம் முதலியவை வருகிற வருடத்துக்கு உணவுமாய் வித்துமாய்

---

[1] சிவப்பிரகாசம் – பொது 25. முளை–கன்மம். தவிடு–மாயை உமி–ஆணவம். அரிசி–ஆன்மா.

உபயோகத்துக்கு வருமாறுபோல நான் என்னும் முனைப்போடு செய்யப்படும் இதம் அகிதங்கள் புண்ணிய பாவங்களாய் விளைந்து பின்னர் இன்ப துன்பங்களைத் தருவதாயும், அவற்றை அனுபவிக்குமிடத்து உண்டாகும் இதமகிதங்களுக்குக் காரணமாயுமிருக்கும்.

எல்லாச்செயலும் சிவன்செயலெனக் காணுபவர்களுக்கு மேல்வினையேறுமாறின்றிப் பிறவியறும்.

தாயுமானசுவாமிகள்.

சிவன்செய லாலே யாதும் வருமெனத் தேறே னுளு
மவந்தரு நினைவை யெல்லா மகற்றிலே னுசை வெள்ளங்
கவர்ந்துகொண் டிழுப்ப வந்தக் காட்டிலே யகப்பட்டையோ
பவந்தனை யீட்டி யீட்டிப் பதைக்கின்றேன் பாவியேனே.

## புண்ணிய பாவங்கள் வரும் வழியும் பாவம் போகும் வழியும்

நல்வினை தீவினைகள் மனம் வாக்குக்காயங்களினுல் வருவனவாம். நல்வினையாற்றீவினையும் தீவினையால் நல்வினையும் அழியமாட்டா. இவ்விரண்டு வினைகளும் அனுபவித்தே ஒழியவேண்டும். ஆயினும் வேதாகமங்களில் கன்மகாண்டமுறைப்படி பிராயச்சித்தஞ்செய்தால் பாவகன்மம் நீங்கும். தானுகச் சாந்தி செய்து கொள்ள இயலாதவிடத்துத் திரவியங்கொடுத்து வல்லவரைக்கொண்டு செய்வித்தலுமாம்.

ஒரு பிராயச்சித்தமுஞ் செய்யாது ஆகமங்களிற் சொல்லிய முறைப்படி சரியை கிரியை யோகங்களைச் செய்துவரின் அதிகப்பற்றுன பாவங்சள் நீங்கும். அந்த வழியால் நீங்காதுஎஞ்சியவை மேல்வரும் பிறவியில் தொடர்ந்து பயன்தரும்.

நல்வினை தீவினையென்னும் கன்மங்கள் மனம் வாக்குக் காயங்களினுற் செய்யப்பட்டுத் தூலகன்மமாய் ஆகாமியமெனப் பெயர்பெறும்.

---

1. சிவப்பிரகாசம்—பொது 31.

## மனத்தின் நினைவாலுண்டாகும் புண்ணிய பாவங்கள்,

அருளுடைமை, பொறை, பிறர்பொருள் விரும்பாமை, செய்நன்றி மறவாமை, நடுநிலை நிற்றல், வஞ்சகமின்மை, அபிமானம்பேணல், அழுக்காறின்மை, அவாவறுக்கை, பிறர்துயர்கண்டிரங்கல், சிவத்தியானம் முதலியன மன நினைவாலுண்டாகும் புண்ணியங்கள். இவற்றுக்கு மாறுன நினைவுகள் பாவங்கள்.

## வாக்கினலுண்டாகும் புண்ணிய பாவங்கள்.

புறங்கூறுமை, உண்மை பேசுதல், தருமம் போதித்தல், இனியன சொல்லுதல், 'வேதாகமங்களையோதல், புராணபடலம், தமிழ்மறையோதல் முதலியன வாக்கினுலுண்டாகும் புண்ணியங்கள். இவைகளுக்கு மாறுன சொற்கள் பாவங்கள்.

## காயத்தினற் செய்யப்படும் புண்ணிய பாவகங்ள்.

அரிய தவங்களைச் செய்தல், பூசை ஓமங்கள் செய்தல் பகுத்துண்ணல், நந்தனவனம் சோலைகள் உண்டாக்குதல், பிறர்மனை விழையாமை. குளந்தோண்டல், கூவல்தோண்டல், ஆதுலர்சாலை வித்தியாசாலை திருக்கோயில் திருமடம் கட்டுவித்தல். சிவாலயசேவை, குருசேவை, அடியார் சேவை முதலியன செய்தல் காயத்தினுற் செய்யப்படும் புண்ணியங்களாம் இவைகளுக்குமாறு செய்தல்பாவங்கள்.

மனம் வாக்குக் காயங்களினுல், நான் என்னும் முனைப்போடு செய்யப்படும் நல்வினை தீவினைகள் **ஆகாமியம்** எனப்படும். பின்பு அவ்வினைகள் பக்குவமாகுமளவும் சூக்குமமாய்ப் புத்திதத்துவம் பற்றுக்கோடாக மாயையிற் கிடக்கும். அப்பொழுது அதுபுண்ணிய பாவங்கள் எனவுஞ் **சஞ்சிதம்** எனவுஞ் சொல்லப்படும். இச்சஞ்சித வினை பக்குவமாகி மறுபிறப்பிற் செய்யப்படும் நல்வினை

தீவினைகளுக்குக் காரணமாயும், இன்பதுன்பங்களாய் அனுபவத்திற்கு வருவதாயும் இருக்கும். இன்பதுன்ப அனுபவம் **பிராரத்தம்** எனப்படும். இன்பதுன்பங்கள் பயன் படும் பொழுது ஆதிதைவிகம், ஆத்தியான்மிகம், ஆதி பௌதிகம்என முத்திறத்தாற் பலவகைப்பட்டுப் **பிரா ரத்தம்** எனப்படும் பிராரத்தம் – பிறவிக்குத் தொடக்க முடையது.

## ஆதிதைவிகம்.

ஆதிதைவிகமாவது தெய்வங் காரணமாக வருவது. அது மாதாவின் கருப்பத்திலிருக்கு மிடத்துண்டான விதனம். சனன மரணத்திலுண்டான விதனம், இயமதண் டனை, நரகவேதனை முதலியவற்றால் வருந் துக்கம்.

## ஆத்தியான்மிகம்,

ஆத்தியான்மிகமாவது உயிர்களால் வருவது. அது சரீரத்தோடு சம்பந்தப்பட்டதும், மனத்தோடு சம்பந்தப் பட்டதுமென இருவகைப்படும். தத்தம் சரீரத்திலுண் டான, வியாதிகளினாலும், மிருகங்களினாலும், அரசராலும் பசாசுகளாலும்: கள்வராலும், மனிதராலும் உண்டாகும் துக்கம் சரீரசம்பந்தமானதுக்கமாம். பிறருடைய கல்வி செல்வம் சௌந்தரியங்களைக்கண்டு பொறாமை கொள்ளல் முதலியவற்றால் வருந்துக்கம் மனோதுக்கமாம்.

## ஆதிபௌதிகம்.

ஆதிபௌதிகமாவது பஞ்சபூதங்கள்வாயிலாக வரு வது. அது குளிர், வெப்பம், மழை, காற்று, மின்னல், இடி, சுவர்விழுதல், கல்விழுதல் முதலியவற்றால் வருந் துக்கம்.

## பயன்றருதல்.

கன்மமானது செய்த முறையினன்றிப் பக்குவமான முறையிற் பயன்தரும். அதனால் முன்செய்த வினைப்பயன் பின்னும், பின்செய்த வினைப்பயன் முன்னுமாக மாறி

வரும். சிலகன்மங்கள் இந்தச் சன்மத்திலே செய்யப்பட்டு முன்னுள்ளவைகளோடு இம்மையிலே சேர்ந்து அனுபவிக்கப்படுவனவாயும், இம்மையிற் செய்தவை அடுத்துவரும் சன்மத்திற் பலிப்பனவாயும், சிலவினைகள் பக்குவமின்மை காரணமாக அடுத்த சன்மத்தில் அனுபவத்துக்குவராது இன்னகாலத்தில் பக்குவமாகுமென்றும், இன்னகாலத்துக்கு அனுபவமாகும் என்றும் சொல்லமுடியாது நின்று காலாந்தரத்திற் பக்குவமுற்று ஏதேனுமொரு சன்மத்தில் அனுபவத்திற்கு வரநிற்பனவாயுமிருக்கும். அது எங்ஙனமெனில் ஒருவன் செய்த பயிர்களுள் கீரை, கத்தரி, வாழை, தென்னை என்பன செய்தமுறையினன்றி விளைவு பெற்ற முறையில் முன்பின்னாகப் பயன் தருதல் போலாம்.

சிவபெருமான் உயிர்கள்மேல் வைத்த பெருங்கருணையினால் அவர்கள் செய்யும் நன்மை தீமைகளை ஏற்று நல்வினை செய்வோருக்கு அநுக்கிரகத்தையும், தீவினை செய்வோருக்குத் தண்டனையையும் செய்தருளுவர், பாவஞ் செய்தாரைத் தண்டித்தல் அவர்களை நல்வழிப்படுத்தல் காரணமாகலின், அதுவுங் கிருபையேயாம். அது எது போலுமென்னில்: பிதாமாதாக்கள் பெற்ற தமது புதல்வர்கள் தம்முடைய சொற்படி நடவாராயின் கண்டித்துத் திருத்துதல் போலாம்.

## இன்பதுன்பங்கள் முதல்வன் ஆணையால் அணையும்

[1]அரசன் தனது கட்டளைப்படி நடவாதவர்களை அதி

---

1. சிவஞாசித்தியார். 2, 2, 31, 2, 2, 30 அபுத்திபூருவமானவினையும் புத்திபூருவமான வினையும் என வினைகள் இரண்டு வகையாம். அவை அபுத்திபூருவநல்வினையும் தீவினையும் புத்திபூருவநல்வினையும் தீ வினையும் என ஒவ்வொன்று இவ்விரண்டாய் நான்கு வகைப்படும். (சிவப்பிரகாசம்பாச இலக்கணம் 30 ''இந்த ராசதண்டம் பட்டவர்களுக்கு நரகயாதனையில்லை; அதெவ்வாறெனில் ஆதியிலே கர்த்தாவானவர் பூமியின்கண் தான் அருளின வேதநீதி வழுவினோர்க்கு மூவகையாகப் பிராயச்சித்தங் கற்பித்தார். வர்ணாச்சிரம தர்மத்திலே நடக்கிற பேர்க்குப் பிரமாதாத் (அபுத்திபூர்வமாக) பாவம்வந்தால் குருவினாலே பிராயச்சித்தாதி யனுட்டானத்தினாலே சுத்தி. துர் ஆன்மாக்களாயிருக்கிறபேர்கள் பண்ணின பாவத்திற்கு ராசதண்டத்தினாலே சுத்தி, ராசாவினாலறியப்படாத பாபத்திற்கு யமதண்டத்தினாலே சுத்தி.'' (சிவஞானசித்தியார் சிவாக்கிரயோகிகள் உரை.)

கார சத்தியினுலே தண்டித்தும் சிறைச்சாலையில் இட்டும் வைப்பன். கட்டளைப்படி நடப்பவர்களுக்கு ஊர்களும் செல்வமுங் கொடுத்துத் தனக்குக்கீழ் அதிகாரமுஞ் செய்ய வைப்பன். இராச்சிய முழுவதும் தனது அதிகாரசத்தியினுல் யாவரையும் வாழ்வித்தலும் தண்டித்தலும் செய்வன். அதுபோல வேதாகமங்கள் சிவபெருமான் அருளிய கட்டளைகளாம். அக்கட்டளைப்படி நடவாத உயிர்களைத் தண்டித்தற்பொருட்டுக் கடவுளால் அமைக்கப்பட்ட சிறைக்களம் இருபத்தெட்டுக்கோடி நரகங்களாம். அவ் வேதாகமங்களில் விதித்த கட்டளைப்படி நடப்போர் இன்பத்தோடு வாழ்கின்ற இடங்கள் சுவர்க்கம் முதலிய மேலுலகங்களாம். இச்சுவர்க்க நரகமடையும் உயிர்களுக்கேயன்றி எல்லாஉயிர்களுக்கும் இன்பதுன்பங்கள் இறைவனுணையாற் பொருந்துவனவாம்.

## மாயேயம்

அசுத்த மாயாகாரியங்கள் மாயையாலாகிய தத்துவங்களும், அவைகளாலாகிய தநு கரண புவன போகங்களுமாம்.

ஈசுவரதத்துவத்தில் வசிக்கின்ற அட்டவித்தியேசுவரரின் தலைவராகிய அநந்தேசுவரர் சிவபெருமானது அதிகாரத்தைப் பெற்று, வாயுவானது சமுத்திரத்தில் ஒரு பகுதியை விகாரப்படுத்துவது போல அசுத்தமாயையின் ஏகதேசத்தைக் கலக்க அதிலிருந்து காலதத்துவமும், நியதிதத்துவமும், கலாதத்துவமும், முறையே தோன்றும்.

## காலதத்துவம்

காலம் சடமாகையாற் சிவபெருமானுடைய கிரியா சத்தி சத்திதத்துவ வாயிலாகக் காலதத்துவத்தை அதிட்டிக்க, காலம் ஆன்மாக்களுக்கு முக்காலங்களிலுமுள்ள புசிப்பைக் கூட்டும்.

## நியதிதத்துவம்

கிரியாசத்தி சத்திதத்துவ வாயிலாக நியதியை அதிட்

டிக்க, **நியதி** தத்துவம் அவரவர் செய்த கன்மம் அவ்வவ் வான்மாக்களே நுகருமாறு நிச்சயிக்கும்.

## கலாதத்துவம்

கிரியாசத்தி சத்திதத்துவ வாயிலாகக் கலையை அதிட்டிக்கக் **கலா**தத்துவம் ஆணவமலத்தைச்சிறிது நீக்கி, ஆன்மாவின் கிரியாசத்தியை விளக்கும்.

கலா என்பதற்கு நீக்கலும் நியமித்தலும் அர்த்தமாகையால், அந்தக் கலையானது ஆணவ இருளைச் சிறிது நீக்கி, நியதிரூபமான போகநியமனத்தைச் செய்யும். அது எங்ஙனமெனில்; எங்கும் மூடிக்கொண்டிருக்கும் அந்தகாரத்தில் தீபமானது அந்த இருளை ஒருபக்கத்திலொதுக்கி, விஷயத்தைக் காட்டுவதுபோல, ஆன்ம அறிவை மறைத்துக் கொண்டிருக்கும் மலத்தை ஒருபக்கத்தில் தள்ளி அறிவையுண்டாக்கும்.

## வித்தியாதத்துவம்

கலாதத்துவததில் **வித்தியாதத்துவந்**தோன்றும் இறைவனது ஞானசத்தி சுத்தவித்தியாதத்துவ வாயிலாக வித்தியாதத்துவத்தை அதிட்டிக்க, வித்தை ஆன்மாவின் ஞானசத்தியைச் சிறிது விளக்கி அப்போகங்களை அறியச் செய்யும்.

## அராகதத்துவம்

வித்தியாதத்துவத்தில் **அராக**தத்துவந் தோன்றும். சிவபெருமானது இச்சாசத்தி ஈசுவரதத்துவ வாயிலாக அராகதத்துவத்தை அதிட்டிக்க அராகம் ஆன்மாவின் இச்சாசத்தியை விளக்கி, வினைக்கீடாகவரும் போகங்களிலே இச்சையை உண்டாக்கி நிற்கும்.

இங்ஙனம் காலம், வித்தை, அராகம், என்னுந் தத்துவங்களினுல் கிரியை, ஞானம், இச்சைகள் விளங்கப்பெற்றுப் போகங்களை அறியத்தக்க வல்லமை உடையதாயிருக்கும்.

காலம், நியதி, கலை, வித்தை, அராகம் என்னும் ஐந்து தத்துவங்களையும் ஆன்மாப் பொருந்துதலினால் **பஞ்சகஞ்சுகன்** எனப்படுவன்.

## புருடதத்துவம்

காலம் முதலிய ஐந்து தத்துவங்களும் கூடிய சங்கத்தில் **புருடதத்துவந்** தோன்றும். புருடதத்துவத்தைச் சாதாக்கிய தத்துவம் காரியப்படுத்தும்.

இவ்வேழு தத்துவங்களும் வித்தியா தத்துவம் என்றும், சுத்தாசுத்ததத்துவம் என்றும், போககாண்டம் அல்லது போகசயித்திருகாண்டம் என்றும் கூறப்படும். இவை ஆன்மாக்களுக்குச் சிற்றறிவை எழுப்புந் தத்துவங்கள் ஆதலால் **வித்தியாதத்துவம்** எனப்படும் இவ்வேழு தத்துவங்களும் ஆன்மாக்களுக்குச் சிறிது அறிவை விளக்குதற்குச் சாதனமாகையால் சுத்தமும், சுகதுக்க மோகங்களை உண்டாக்குவதற்குச் சாதனமாகையால் அசுத்தமுமாம்- ஆகையால் சுத்தாசுத்தம் எனப்படும். ஆன்மாக்களுக்குச் சகாயமாய் நின்று போகங்களையுண்டாக்குதலால் போககாண்டம் என்றும், அவைகளைப் புசிப்பித்தால் [1] போகசயித்திருகாண்டம் என்றும் கூறுவர்.

இவைகள் அநந்ததேவராற் காரியப்படும். இந்த அநந்ததேவர் அசுத்தமாயாகரிய அதிகாரியாவர்.

## பிரகிருதி மாயை

சிவபெருமான் அநந்தேசுவரர் வாயிலாகப் பிரளயாகலருள் தலைவராகிய ஸ்ரீகண்டருத்திரரை அதிட்டித்துக் கலாதத்துவத்தைக் கலக்க, அரும்பினிடத்து மணம் விளங்காமல் அடங்கிநின்றாற்போலத் தன்னிடத்துண்டாகிய குணங்கள் சிறிதும் விளங்காமல் [2] அவ்வியத்தகுணமாகக் கலாதத்துவத்திற் **பிரகிருதி** மாயை தோன்றும்.

---

1 போகசயித்திரு – புசிப்பிக்கிறது. காண்டம்—கொத்து.

2 அவ்வியத்தம்—வெளிப்படாதது வியத்தம்—வெளிப்பட்டது.

பின்பு ஆலம்வித்தில் முளைதோன்றியதுபோல, பிரகிருதியில் **சாத்துவிகம், இராசதம், தாமதம்** என மூன்ருய்த் தோன்றும் இக்குணங்கள் வியத்தமாயும் பிரிந்து தோன்ருதும் சமமாய் இருக்கும் நிலையில் குணதத்துவம் எனப்படும்.

பிரகிருதி தத்துவத்திற்கும் குணதத்துவத்திற்கும் சொரூபத்தால் வேறுபாடு இன்மையாலும் பிறவாற்ருலும் இவற்றைப் பகுக்காது ஒரு தத்துவமாகவைத் தெண்ணுவர்.

### சாத்துவிக குணவிருத்திகள் — 16

சாத்துவிககுண விருத்திகள்:— சாதிநெறிநிற்றல், பெரியோரைப் பேணல், புண்ணிய முயற்சி, கற்றறிவுடைமை, இனியவை கூறல், தற்புகழாமை, உள்ளதே வருமென மகிழ்ந்திருத்தல், நடுவு நிலைமை, நித்தியநியமம், பொறை, பிறர்க்கிதஞ்செய்தல், மோக்ஷஇச்சை, பிறர் தன்னைப் புகழுங்கால் தான் தன்னை இகழ்தல் அடக்கமுடைமை, தன்பால் இரந்தார்க்கிரங்குதல், அந்தக்கரண புறக்கரணங்களை அடக்குதல் என்பன.

### இராசதகுண விருத்திகள் —9

இராசதகுணவிருத்திகள்— யான் எனது என்னும் அபிமானம், வீரத்தன்மை குரூரமுடைமை, ஊக்கமுடைமை, மானமுடைமை, வைராக்கியம், போகமுடைமை, இடம்பமுடைமை, பலமுடைமை என்பன.

### தாமதகுண விருத்திகள் — 9

தாமதகுணவிருத்திகள்— சோம்பல்,உலோபமுடைமை, கோட்சொல்லுதல், தன்னைக் கௌரவமாய்மதித்தல், அதிகநித்திரை, கேடுசெய்தல், மூடத்தன்மை, குலம் குணம் ஈகைகளாலே தனக்கு ஒருவரும் நிகரில்லை என்கை, திருடுதல், என்பன.

சாத்துவிக குணம் விடயபோகங்களை அறியச் செய்யும்; தமோகுணம் அப்போகங்களில் இச்சையுண்டாக்கும். இராசதகுணம் அப்போகங்களைப் பற்றச்செய்யும் பிரகிருதி குணவடிவாய் நிற்றலேயன்றிச் சித்தவடிவாயும் நிற்கும். குணவடிவாய் நின்று முக்குணங்களையும் தோற்றுவிக்க ஆன்மா அவற்றைப் பொருந்தி, அக் குணங்களின் மயமாய் நிற்கும். பிரகிருதி சித்தவடிவாய் நின்று போகசிந்தனையை யுண்டாக்கக், குணங்களின் மயமாய் நிற்கும் ஆன்மா விடய போகங்களை அறிந்து இச்சித்து அவற்றில் அழுந்தும்.

## புத்தி தத்துவத் தோற்றமும் தொழிலும்

**புத்திதத்துவம்** பிரகிருதியிலே தோன்றி அவ்வவ்வுயிர்கள் செய்த புண்ணிய பாவங்களுக்கேற்ற விடயங்களைத் தீர்மானிக்கும். அவ்விடயங்களால் வரும் சுக துக்க மோகங்களாகிய மயக்கத்தில் அழுந்தி ஆன்மாவின் அறிவு தொழிலை விருத்திசெய்து நிற்கும். புத்தியின் குணங்கள் எட்டு அவை தருமம், ஞானம், வைராக்கியம், ஐசுவரியம், அதன்மம், அஞ்ஞானம், அவைராக்கியம், அனைசுவரியம் என்பன. இராசதமுந் தாமதமுங் குறைந்து, சாத்துவிகம் மேலிட்டநிலை புத்திதத்துவமாம்.

## அகங்காரதத்துவத் தோற்றமும் தொழிலும்

புத்திதத்துவத்தில் **அகங்காரதத்துவந்** தோன்றும். அது அகந்தையுறுதற்கு மூலகாரணமாய் என்னோடு ஒப்பானவர்கள் ஒருவருமில்லையென்று செருக்குற்றும், நான் எனது என்று அபிமானித்தும் ஆன்மாவை விட்டு நீங்காது நிற்கும்.

அகங்காரதத்துவமானது குண வேற்றுமைபற்றிப் பூதாதியகங்காரம், வைகாரிகாகங்காரம், தைசதவகங்காரமென மூவகைப்படும். [1]பூதாதி தாமதகுணத்தான் மிக்கிருப்பது என்றும், வைகாரிகம் இராசத குணத்தான்

1. பூதாதி–உருமம், வைகாரிகம்–தொழில், தைசதம்–அறிவு.

மிக்கிருப்பது என்றும், தைசதம் சாத்துவிககுணத்தான் மிக்கிருப்பது என்றும் கூறுவர்.

## மனத்தத்துவத் தோற்றமும் தொழிலும்

மனத்தத்துவமானது தைசதவகங்காரத்திற் றோன்றும். மனமானது 'இச்சையே தனக்கொருவடிவாய்' ஒன்றைச் சங்கற்பம் பண்ணுவதும் சலனப்படுவதுமாயிருக்கும். சித்தமானது மனம் நினைத்த பொருளிலே துணிவுபிறவாமல் இது யாது எனச் சிந்தித்து நிற்கும். இச் சித்தமானது மனதின் தொழிலாகிய ஐயநிலையே யன்றி ஒரு தனித் தத்துவமன்று.

திருஞானசம்பந்தமூர்திநாயனூர்
பண்—வியாழக்குறிஞ்சி.

பத்திப்பேர்வித்திட்டேபரந்தவைம்புலன்கள்வாய்ப்
பாலேபோகாமேகாவாப்பகையறும்வகைநினையா
முத்திக்கேவிக்கத்தேமுடிக்குமுக்குணங்கள்வாய்
மூடாவூடாநாலந்தக்கரணமுமொருநெறியாய்ச்
சித்திக்கேயுய்த்திட்டுத்திகழ்ந்தமெய்ப்பரம்பொருள்
சேர்வார்தாமேதானாகச்செயுமவனுறையுமிடங்
கத்திட்டோர்சட்டங்கங்கலந்திலங்குநற்பொருள்
காலேயோவாதார்மேவுங்கழுமலவளநகரே

## ஞானேந்திரியங்களின் தோற்றமுந் தொழிலும்,

தைசதவகங்காரத்தில் சுரோத்திரம், துவக்கு, சட்சு, சிங்குவை ஆக்கிராணம் என்னும் ஞானேந்திரிய மைந்துந் தோன்றும்.

[1] ஞானேந்திரியங்களுக்கு விடயமாக முறையே சத்தம், பரிசம், உருவம், இரசம், கந்தமாகிய பூதகுணமைந்தும் பொருந்தும் சத்தம் முதலிய ஐந்தும் விடய

1. தன்மாத்திரை காரண தன்மாத்திரை எனவும் விடயதன் மாத்திரை எனவும் இருவகைப்படும். சுரோத்திராதிகளுக்கு விடயமாயிருப்பது விடயதன்மாத்திரை. தூலபூதங்கட்குக் காரணமாயிருப்பது காரண தன்மாத்திரை.

தன்மாத்திரைகள் என்றும், காரிய தன்மாத்திரைகள் என்றும், பூதகுணங்கள் என்றும் சொல்லப்படும். சத்தாதி விடயங்களை யறிதலே ஞானேந்திரியங்களின் தொழிலாம்.

## கன்மேந்திரியங்களின் தோற்றமும் தொழிலும்.

வைகாரிகாகங்காரத்தில் வாக்கு, பாதம், பாணி' பாயு, உபத்தம் என்னுங் **கன்மேந்திரியங்கள்** ஐந்துந் தோன்றும். இவை தொழில் செய்யுங் கருவிகள். வசனம். கமனம், தானம், விசர்க்கம், ஆநந்தம் என்னும் ஐந்தும் முறையே கன்மேந்திரியங்களின் தொழில்களாம்.

## தன்மாத்திரைகளின் தோற்றம்.

பூதாதியகங்காரத்தில் சத்தம், பரிசம் உருவம், இரசம், கந்தம் என்னுந் **தன்மாத்திரைகள்**[1] ஐந்துந் தோன்றும். தத்தம் குணவிசேடங்களைக் காட்டாமல் சூக்குமங்களாய் இருத்தலால் தன்மாத்திரைஎன்னும் பெயருடையதாயிற்று. இவை காரண தன் மாத்திரை எனவும் சூக்குமபூதம் எனவும் கூறப்படும்.

## பஞ்சபூதங்களின் தோற்றமும் குணமும்.

சத்ததன்மாத்திரையில் ஆகாசமும், பரிசதன்மாத திரையில் வாயுவும், உருவதன்மாத்திரையில் தேயுவும், இரசதன்மாத் திரையில் அப்புவும், கந்ததன்மாத்திரையில் பிருதுவியுந் தோன்றும்.

---

1. மரத்தின் வடிவெல்லாம் சத்திருபமாக வித்திலடங்கியிருப்பதுபோல, தங்குணங்களெல்லாம் சத்திருபமாக வெளியிலே தெரியாது அதனதன் அளவில் அடங்கியிருப்பதால் தன்மாத்திரை எனப்பட்டது. தத்–அது. மாத்திரை–அளவு.

[1] ஆகாசத்துக்குச் சத்தமென்னும் ஒரு குணமும் வாயுவுக்குப் பரிசம் சத்தமென்னும் இரண்டு குணங்களும், தேயுவுக்கு உருவம் பரிசம் சத்தம் என்னும் மூன்று குணங்களும், அப்புவுக்கு இரசம் உருவம் பரிசம் சத்தம் என்னும் நான்கு குணங்களும், பிருதுவிக்குக் கந்தம் இரசம் உருவம் பரிசம் சத்தம் என்னும் ஐந்து குணங்களும் உள்ளன.

## கருவிகளின்வகை.

ஞானேந்திரிய கன்மேந்திரியங்கள் உடம்பின் புறத்தே நின்று தொழிற்படும் புறக்கருவிகளாம். மனம் முதலிய அந்தக்கரணங்கள் இந்திரியங்களாலே தரப்பட்ட விஷயங்களை உடம்பின் அகத்தேநின்று விடயிக்கும் உட்கருவிவிகளாம்.

அந்தக்கரணங்களினுல் விடயிக்கப்பட்டவற்றைக் கலை வித்தை அராகம் என்னுந்தத்துவங்கள் ஆன்மாவின் இச்சாஞானக் கிரியைகளுக்குப் பொருத்தும். ஆதலின் அவை உள்ளந்தக்கரணம் எனப்பட்டன.

## பஞ்சபூதங்களின் வகை

பஞ்சபூதங்கள் அகப்பூதம், அகப்புறப்பூதம், புறப்பூதம், என மூவகைப்படும். அவற்றுள் அகப்பூதம் சூக்கும தேகத்தில் இந்திரியங்களுக்கு ஆதாரமாய் இருப்பன. இவை சூக்குமபூதமெனவும்படும்.

---

**திருநாவுக்கரசுசுவாமிகள்**

1 ''மண்ணதனி லைந்தை மாநீரி ஞன்கை
வயங்கெரியின் மூன்றை மாருதத்தி ரண்டை
விண்ணதனி லொன்றை விரிகதிரை''

**திருவாசகம்**

''பாரிடை யைந்தாய்ப் பரந்தாய் போற்றி
நீரிடை நான்காய் நிகழ்ந்தாய் போற்றி
தீயிடை மூன்றாய்த் திகழ்ந்தாய் போற்றி
வளியிடை யிரண்டாய் மகிழ்ந்தாய் போற்றி
வெளியிடை யொன்ருய் விளைந்தாய் போற்றி.''

அகப்புறப்பூதமாவது சரீரத்தை வளர்த்தல், உள்ளிடங்கொடுத்தல் முதலிய தொழில்களை இயற்றிக்கொண்டு, தூலதேகத்தில் இருப்பன.

புறப்பூதங்கள் அண்ட புவன போக்கியப் பொருள்களுக்கு ஆதாரமாய் இடங்கொடுத்தல் முதலியதொழில்களை இயற்றுவன.

மேலும் இவை பொதுவும் சிறப்பும் பொதுச்சிறப்புமென முத்திறப்படும். புவன வடிவாகிய தத்துவங்கள் எல்லோருக்கும் பயன்கொடுத்தலில் பொதுவாம். சூக்கும தேக வடிவாகிய தத்துவங்கள் போகநுகர்ச்சியின்பொருட்டுத் தனக்குப் பயன்படுத்தலில் சிறப்பாம் தூலதேக வடிவாகிய தத்துவங்கள் தனது போகநுகர்ச்சிக்கும் மனைவி முதலியோர் அனுபவித்தற்கும் வாய்த்தமையின் பொதுச் சிறப்பாம்.

இதனால், புவனவடிவாகிய தத்துவங்கள் முப்பத்தாறுய்ப் பொதுவாய்ப் புறத்தே நிற்றல்போல, அகத்தே ஆன்மாவைப் பற்றி, முப்பத்தாறுதத்துவங்களும் சூக்குமமாய் நிற்குமென அறிக. இந்த முப்பத்தாறு தத்துவங்களுள்ளே சுத்த தத்த தத்துவம் ஐந்தும் சடமாயினும் சிற்சத்திக்குச் சுதந்திர வடிவாதலின் சேதனம் எனப்படும். ஏனைய முப்பத்தொரு தத்துவங்களும் அசித்து எனப்படும்

திருநாவுக்கரசுசுவாமிகள் (திருநேரிசை)

முப்பதுமுப்பத்தாறுமுப்பதுமிடுகுரம்பை
அப்பர்போலைவர்வந்துவருதருகிதுவிடென்று
ஒப்பவேநலியலுற்றுலுய்யுமாறறியமாட்டேன்
செப்பமேதிகழுமேனித்திருப்புகலூரனீரே.

இங்ஙனம் பிரகிருதி முதல் பிருதிவியீறுகக் கூறப்பட்ட தத்துவங்கள் இருபத்துநான்கும் [1] ஆன்மதத்துவம் எனவும், அசுத்த தத்துவம் எனவும் போக்கியகாண்டம் எனவும் பெயர் பெறும். இவைகள் ஸ்ரீகண்டருத்திரராலே காரியப்படும்.

## காரியபூதங்கள்.

### புறக்கருவிகள் அறுபது

ஐம்பெரும் பூதங்களும் தன்மாத்திரையோடு கூடி நின்று இந்திரியங்களைத் தொழிற்படுத்துவதற்கு இப் பூதங்

1. ஆன்மாவோடு சம்மந்தப்பட்டிருத்தலால் ஆன்மதத்துவம் எனவும், ஆன்மாக்களுக்குச் சாத்வீகம் முதலிய குணங்களினாலே சுக துக்க மோகங்களை உண்டாக்குவதால் அசுத்தம் எனவும், புசிப்பிக்கப்படும் வஸ்துவாயிருத்தலினால் போக்கிய காண்டமெனவும் சொல்லப்படும்.

களில் நின்று காரியபூதங்களாகிய அறுபது தாத்துவிகங் களுந் தோன்றும். அத்தாத்துவிகம் அங்கமாகவும், இத் தூல பூதங்கள் அங்கியாகவும் நிற்கும்.

**பிருதுவின் காரியம்:**

மயிர், தோல், எலும்பு, நரம்பு, தசை 5

**அப்புவின் காரியம்**

மூத்திரம், உதிரம், சிலேட்டுமம், வியர்வை, சுக்கிலம் 5

**தேயுவின் காரியம்:**

ஆகாரம். நித்திரை, பயம், மைதுனம், சோம்பல் 5

**வாயுவிற்றோன்றும் வாயுக்கள்:**

பிராணன், அபானன், வியானன், உதானன், சமானன், நாகன், கூர்மன், கிருகரன், தேவதத்தன், தனஞ்சயன் ... ... ... ... 10

**வாயுவின் காரியம்:**

கிடத்தல், ஓடல், இருத்தல், நடத்தல், நிறுத்தல் 5

**பிருதுவியிற்றோன்றும் நாடிகள்:**

அத்தி, அலம்புடை, இடை, பிங்கலை, சுழுமுனை, காந்தாரி, குகு, சங்கினி, சிகுவை, புருடன், என்னும் நாடிகள் ... ... ... 10

**ஆகாயத்தின் காரியம்:**

காமம், குரோதம், மதம். லோபம், மோகம் 5

**கன்மேந்திரியத்தின் தொழில்:**

வசனம், கமனம், தானம், விசர்க்கம், ஆனந்தம் 5

**மூலாதாரத்திற் பிறக்கும்வாக்குகள்:**

சூக்குமை. பைசந்தி, மத்திமை, வைகரி ... 4

**பிரகிருதியிற்றோன்றும் குணங்கள்:**

சாத்துவிகம், இராசதம், தாமதம்... ... 3

**ஏடணைகள் மூன்று:**

[1] தாரஏடணை, புத்திர ஏடணை, அர்த்த ஏடணை ... 3

இவை ஆகாயத்திற் றோன்றுவன-

இவ்வாறுபுறக்கருவிகள் அறுபதாம் ... ... 60

---

1. ஏடணைகளைநீக்கி தைசதம் வைகாரிகம் பூதாதி என்னும் அகங்காரங்களைக் கொள்வதும் உண்டு. ஏடணை—விருப்பம்:

தத்துவப்பிரகாசம்.

பூதங்களிளுற்ருேன்றுங்காரியமைந்தும்
புகலும்வாக்காதிகளிற்ருேன்றுதொழிலைந்தும்
நீதிவாயுவிற்ருேன்றும்வாயுப்பத்தும்
நிகழ்பூதந்தனிற்ருேன்றும்புகழ்நாடிபத்துங்
கோதில்விந்துவிற்ருேன்றும்வாக்குநாலுங்
குலவுமூலந்தோன்றுங்குணங்கள்மூன்றும்
பேதவாகாயத்திலேடணைகண்மூன்றும்
பிறங்குமறுபதுமிவைகள்புறக்கருவியெனுமே.

ஆன்மா இங்ஙனம் பொருந்திய தத்துவங்களோடு கூடி மயங்கி வினைப்பயனை அனுபவிக்கும்.

---

## மலங்களின் தொகை

உயிர்கடோறும் அநாதியே கூடிநிற்கும் மூலமாகிய ஆணவமும், அந்த ஆணவத்தை பொருந்தி நின்று பக்கு வத்தை மிக உண்டாக்குகின்ற திரோதான சத்தியும், தநு வாதிகட்குக் காரணமாகச் சொல்லப்பட்ட மாயாமலமும், புண்ணியபாவங்களாய்விரிந்த கன்மமலமும்,தனுவும்கரண மும் புவனமும் போகமுமாய் நடக்கும் மாயாகாரியமான மாயேய மலமும் என மலம் ஐந்தாம். இவ்வைந்துமலமும் ஒழியாமல் அருள்பெறுதல் கூடாதென்று சொல்லுவர் அறிவுடையர்.

சுத்தமாயா காரியங்கள், ஆணவமலம் விரவாது சுத் தமாயிருத்தலின், மலங்களுள் வைத்தெண்ணப்படா வாயின. அசுத்தமாயையின் காரியம் கலாதத்துவமுதல் பிரு திவியீருன தத்துவங்களும் புவனங்களும் புவனத்திற் பொருள்களுமாம். மாயாகாரியங்கள் மாயையில் அடங்கு மாயினும், பந்தப்படுத்தும் வேற்றுமைபற்றி, வேறு வைத்தெண்ணப்பட்டனவாம். மாயை ஆன்மாவின் அறி வோடு கூடிநின்று அவ்வறிவை மயக்கும். மாயாகாரியம் மயக்கத்துக்கு முன்னிலைப் பொருளாய் இருக்கும் இவையே வேற்றுமையாம்.

இப்பஞ்சமலங்களையும் மூன்றாக அடக்கிக்கூறுங்கால், மாயேயத்தை மாயாமலத்தினும், திரோதானசத்தியை மறைக்குந் தொழிலொப்புமைபற்றி, ஆணவமலத்தினும் அடக்கிக் கூறுவர்.

## ஆன்மா வினைப்பயனை அனுபவிக்கும் வகை

ஆன்மாவானது பஞ்சபாசங்களையும் பொருந்தி இரு வினை காரணமாகப் பிறப்பிறப்பிற்பட்டுக் கொள்ளிவட்டமும் காற்றாடியும் போல, பூமி நரகம் சுவர்க்கம் என்னும் மூவுலகங்களிலும் சிவாஞ்ஞைப்படி போக்குவரவுடையதாய்த் திரியும்.[1]

நல்வினைசெய்த ஆன்மாக்கள் தூலசரீரத்தை விட்டவுடனே சூக்குமசரீரத்தோடு பூதசாரசரீரமாகிய தேவசரீரத்தை எடுத்துக் கொண்டு, சுவர்க்கத்திலேபோய் அந் நல்வினைப் பயனாகிய இன்பத்தை அனுபவித்துத், தொலையாது எஞ்சிநின்ற கன்ம சேடத்தினாலே திரும்பப் பூமியில்வந்து, மனிதர்களாய்ப் பிறக்கும்.

தீவினைசெய்த ஆன்மாக்கள் தூலவுடம்பை விட்டவுடனே சூக்குமசரீரத்தோடு பூதசரீரமாகிய யாதனா சரீரத்தை எடுத்துக்கொண்டு நரகங்களிற்போய், அத் தீவினைப் பயனாகிய துன்பத்தை அநுபவித்துத் தொலையாது எஞ்சிநின்ற கன்மசேடத்தினாலே திரும்பப் பூமியில் வந்து பிறக்கும். இப்படியன்றி, ஒரு தூலசரீரத்தை விட்டவுடனே பூமியிலேதானே ஒரு யோனி வாய்ப்பட்டு மற்றொரு தூலசரீரத்தை எடுப்பதும் உண்டு.[2]

---

1. சித்தியார் 2—4—88.
2. சிவப்பிரகாசம் பொது—46. பூமியில் வருவது—பூதபரிணாமம். நரகத்தில் எடுப்பது பூதம். சுவர்க்கத்தில் பூதசாரம். இவை மூன்றும் பஞ்சபூதமயமான உடம்புகளேயாம்.

## உடல்களின் தோற்றமும் யோனிபேதத்தின் தொகையும்.

இப்படி ஆன்மாக்கள் தாம் தாம் செய்துகொண்ட நல்வினை தீவினைகளுக்கீடாகப் பிறக்கும் பொழுது அண்டசம், சுவேதசம், உற்பிச்சம், சராயுசங்கள் என்னும் நான்கினுந் தோற்றியிடும் தேவர், மனிதர், விலங்கு, பறவை, ஊர்வன, நீர்வாழ்வன, தாவரமென்னும் எழு வகைப் பிறப்புக்களின் [1] யோனிபேதம் எண்பத்துநான்கு நூறாயிரம் என்று எடுத்துக் கூறுவர் பெரியோர்.

நால்வகைத் தோற்றத்தினுள் [2] அண்டசங்கள் முட்டையிற் றோன்றுவன. அவை அரவு, தவளை, முதலை, ஆமை, உடும்பு, மீன், ஓந்தி, பறவை, பல்லி, இப்பி முதலியனவாம். [3] சுவேதசங்கள் வேர்வையிற் றோன்றுவன. அவை கிருமி, கீடம் விட்டில், பேன் முதலியனவாம். [4] உற்பிச்சங்கள் வித்து, வேர், கிழங்கு, முதலியனவைகளை மேற் பிளந்து தோன்றுவன. அவை மரம், பூண்டு கொடி முதலியனவாம்- [5] சராயுசம் கருப்பையிலே தோன்றுவன. அவை மனிதர்களும், தேவர்களும், நாற்கால் விலங்குகளுமாம்.

தேவர்கள் பதினொரு நூறாயிர யோனி பேதமும், மனிதர் ஒன்பது நூறாயிர யோனிபேதமும், நாற்கால் விலங்கு பத்துநூறாயிரயோனிபேதமும், பறவை பத்து நூறாயிரயோனிபேதமும், ஊர்வன பதினைந்து நூறாயிர யோனிபேதமும், நீர்வாழ்வன பத்துநூறாயிரயோனிபேதமும், தாவரம் பத்தொன்பது நூறாயிரயோனி பேதமுமாக யோனிபேதம் எண்பத்துநான்கு நூறாயிரமாம். [6]

---

1. யோனி— சரீரம். சாதி.
2. அண்டம்—முட்டை, ஜம்—பிறப்பது. 3. சுவேதம்—வேர்வை
4. உற்பித்—மேற்பிளத்தல், ஜம்—தோன்றியது.
5. சராயு—கருப்பாசயப்பை.
6. சிவப்பிரகாசம் சூத்திரம் 2, பொது 29

திருஞானசம்பந்தசுவாமிகள்
பண்—மேகராகக்குறிஞ்சி.

**உரைசேரு மெண்பத்து நான்குநூ**
**றாயிரமாம் யோனி பேத**
நிரைசேரப் படைத்தவற்றி னுயிர்க்குயிரா
யங்கங்கே நின்றான் கோயில்
வரைசேர முகின்முழவ மயில்கள்பல
நடமாட வண்டுபாட
விரைசேர்பொன் னிதழிதர மென்காந்தன்
கையேற்கு மிழலையாமே.

---

## உயிருடற் சம்பந்தம் [1]

### காரணசரீரம்

ஆணவமலத்தால் மறைப்புண்டு பசுவென நின்ற ஆன்மாவுக்கு அந்நிலை கேவலம் எனப்படும். அதன்பின் அவ்வான்மா அறியாமையால் துன்பமடைந்து வருந்து வதற்கிரங்கி அனந்ததேவரருளால் தரப்பட்ட அசுத்த மாயையிற் கலக்குண்ட பாகமாகிய காரணசரீரத்தைப் பொருந்தும். எல்லாச் சரீரங்களும் தோன்றுவதற்குக் காரணமாகையால் மாயை **காரணசரீரம்** எனப்படும்.

அதனைப் பொருந்தியபொழுது மறைக்கப்பட்ட அறி விச்சை செயல்கள் பொதுவகையால் விளங்கப்பெறும். அதாவது உணர்வும், விருப்பமும், செய்யுந்திறமுந்தோன்றி, நல்லது தீயது என்ற உணர்வின் பகுப்பும், வேண் டும் வேண்டாமென்ற விருப்பின்பகுப்பும், செய்யுமுறை இவ்வாறென்ற தொழிலின் பகுப்பும் விளங்காத நிலையாம். இது மூர்ச்சையாய்க் கிடந்த உயிருக்குத் தெளிவுபெற்ற முதல்நிலைபோலாம்.

### கஞ்சுகசரீரம்.

அதன்பின் அவ்வசுத்தமாயையினின்றும் தோன்றும் கலா தத்துவம் முதலிய சட்டையாகிய கஞ்சுகசரீரத்

1. சிவஞானசித்தியார் சூ 4.—அதி. 2.

தைப் பொருந்தும். பொருந்தவே, முன் பொதுவகையால் விளங்கிய அறிவிச்சை செயல்கள் பிரிந்து தோன்றிச் சிறப்பு வகையால் விளங்கப்பெறும்.

## குணசரீரம்.

அதன்பின் சாத்துவிகம். இராசதம், தாமதம் என்னும் முக்குணங்களாலாகிய **குணசரீரத்தைப்** பொருந்தும், முக்குணங்களுள் யாதானும் ஓர் குணத்துடன் கூடாமல் தொழில் செய்ய முடியாதாதலால் அந்தக் குணத்துடன் கூடுதலே **குணசரீரத்தைப்** பொருந்துதலாம். இம் மூன்று சரீரங்களும் பரசரீரம் எனப்படும்.

## சூக்குமசரீரம்.

அவ்வாறு பரசரீரம் மூன்றையும் எய்திய ஆன்மா **சூக்குமசரீரத்தைப்** பொருந்தும். சூக்குமசரீரமாவது சத்தம் பரிசம், ரூபம் இரசம், கந்தம் என்னும் காரணதன்மாத்திரை ஐந்தும், மனம் புத்தி அகங்காரம் என்னும் அந்தக் கரணம் மூன்றுமாகிய எட்டினுலும் உண்டாக்கப்பட்டு ஆன்மாக்கள் தோறும் வெவ்வேருய், அவ்வான் மாக்கள் போகமனுபவித்தற்குக் கருவியாய், ஆயுள்முடிவில் முன்னுடம்பு விட்டு மற்ருேருடம்பு எடுத்தற்கு எதுவாயிருக்கும் அருவுடம்பு.

## தூலசரீரம்.

அதன்பின் **தூலதேகத்தைப்** பொருந்தி எவ்விடத்தும் போக்கு வரவுகள் செய்து, தூலரூபமாகிய வினைகளைச் செய்து அவ்வப் பயன்களை அனுபவிக்கும்.

தூலவுடம்பாவது' சாதி குலம் பிறப்பு முதலியவைகளால் அபிமானஞ் செய்தற்கு இடமாய் பிருதிவி, அப்பு. தேயு, வாயு, ஆகாசம் என்னும் பஞ்சபூதமும் கூடிப் பரிணமித்த உரு உடம்பு.

## பஞ்சகோசங்கள்,

இவ்வாறு ஆன்மாக்கள் பொருந்தும் ஐந்து சரீரங்களும் ஐந்து கோசம் எனப் பெயர்பெறும். ஆன்மாவுக்கு

ஐந்து சரீரங்களும் வடிவமாம். வடிவாய் நிற்குங்கால் காரணசரீரம் ஆனந்தமயகோசம் எனவும், கஞ்சுகசரீரம் விஞ்ஞானமயகோசம் எனவும், குணசரீரம் மனோமய கோசம் எனவும், சூக்குமசரீரம் பிராணமயகோசம் எனவும் தூலசரீரம் அன்னமயகோசம் எனவும் பெயர் பெறும்.[1]

கேவலத்தில் அறிவிச்சை செயல்கள் விளங்கப்பெறாது நின்ற ஆன்மா, மாயையிற் கலக்குண்டபாகத்தைப் பொருந்திய பொழுது அறிவிச்சை செயல்கள் பொது வகையால் விளங்கப் பெற்ற மாத்திரையே ஓரானந்த முண்டாகப்பெற்று, அம்மயமாய் நிற்றலின், காரணசரீரம் **ஆனந்தமயகோசம்** எனப்படும்.

அதன்பின் கலை முதலிய ஐந்து தத்துவங்களாலாகிய கஞ்சுக சரீரத்தைப் பொருந்தி, அறிவிச்சைசெயல்கள் சிறப்புவகையால் விளங்கப்பெற்று அம்மயமாய் நிற் றலின் கஞ்சுகசரீரம் **விஞ்ஞானமய கோசம்** எனப்படும். விஞ் ஞானம் என்பது விசேட ஞானம். அது சிறப்புவகையால் அறிவு முதலியன விளங்குதலை உணர்த்தி நின்றது.

அதன்பின் குணசரீரத்தைப் பொருந்தி அந்தக்கர ணத்தின் தன்மை விளங்கப்பெற்று, அம்மயமாய் நிற்ற லால் குணசரீரம் **மனோமய கோசம்** எனப்படும்.

அதன்பின் சூக்கும சரீரத்தைப் பொருந்திப் பிராண வாயுவின் சம்பந்தம் பெற்று அதன்மயமாய் நிற்றலால் சூக்கும சரீரம் **பிராணமய கோசம்** எனப்படும்.

அதன்பின் தூலசரீரத்தைப் பொருந்தி, அச்சரீரத்தை வளர்ப்பதற்கான அன்னமயமாய் நிற்றலால் தூலசரீரம் **அன்னமயகோசம்** எனப்படும்.

இவ்வைங்கோசங்களும் அன்னமயம் முதல் ஒன்றுக் கொன்று சூக்குமமாய் நிற்கும். ஆன்மா இவ்வைங்கோசங்

---

1. சி. சித்தியார் 4-2-23

களிற் கட்டுப்பட்டு நிற்குங்கால் அதுவதுவாய்[1] வசிப் புண்டு ஏகதேசியாய் அவற்றிற் போக்குவரவு செய்யும்.

---

## சிவபெருமான் தநுகரணுதிகளால் மலங்களை நீக்கியருளுவர்.

சிவபெருமான், மாயாகாரியமாகிய தநு கரண புவன போகங்களை ஆன்மாக்களுக்குக் கொடுப்பது எதன் பொ ருட்டு எனில் அவ்வான் மாக்களைப் பந்தித்த[2] ஆணவமலம் கன்மமலம்என்னும் நோய்களைத் தீர்த்துப் பரஞானத்தை விளக்கிச் சிவானந்தப் பெரும் பேற்றைக் கொடுத்தற் பொருட்டாம். தநு கரணுதிகள் யாவும் மாயாமலகாரி யமாகவும், ஆணவ கன்மமலங்களை இம்மாயாமலத்தால் நீக்குவரென்று கூறியது என்னையோவெனில் ஆடையின் அழுக்கைச் சாணி உவர்மண் முதலிய பிறிதோர் அழுக் கைக் கொண்டு வண்ணுன் முழுவதும் நீக்குதல்போல, மாயாகாரியமாகிய உடல் முதலியவற்றை மருந்தாகக் கொண்டு ஏனை ஆணவ கன்மமலங்களாகிய நோயைப் போக்கி அவ்வான்மாவைச் சிவமாந் தன்மைப் பெருவாழ் வுடையதாகச் செய்வர்.[3]

---

1. ஆன்மா எதனை எதனைச் சார்ந்ததோ அதனதன் சுபாவமே தன் சுபாவமாய் அதுவதுவாய் வசிப்புண்டு நின்றறியும் இயல் புடையது. வசித்தல்–வசியஞ்செய்தல்.

2. ஆணவம் கன்மம் மாயையாகிய மும்மலங்களும் பந்தப்படுத் தும் முறைமையின் வேற்றுமைக்கேற்பவேறுபடும். எவ்வாறெ னில், ஆணவம் உயிரோடு கலந்துநின்று அறிவு இச்சை செயல் களைத் தடுத்தலாற் பிரதிபந்தம். கன்மமலம் உயிர்செல்லு மிடமெல்லாம் தொடர்ந்து சென்று சுகதுக்கங்களைக் கூட்டுதலால் அனுபந்தம். அனு—தொடர்ச்சி. மாயாமலம் உயிரோடுகூடித் தநு கரண முதலியனவாய் நிற்றலால் சம் பந்தம்.

3. சிவஞானசித்தியார் 2–3–51–52.

## சிவபெருமான் ஆன்மாக்களுக்கு உணர்த்தும்[1] முறைமை

ஆன்மாக்கள் முதல்வன் போலத் தாமே அறியுஞ் சுதந்திர அறிவின்மையால், சிவபெருமான் அறிவிக்க அறியுந்தன்மையுடையன. விளைநிலம் உழுதல் எருவிடல் முதலாக அவரவர் செய்கைக்குத்தக்க பலனைத் தருமாறு போலவும், சூரியன் பக்குவமான தாமரை முகைகளை அலர்த்துவித்தல் போலவும், சிவபெருமான் அவ்வவர் கன்மத்துக்கு ஏற்றவாறு ஏற்றத்தாழ்வான அறிவுகளையும், பக்குவான்மாக்களுக்கு வியாபக அறிவையுங் கொடுத் தருளுவர்.

ஐம்பொறி முதலிய கருவிகளாலும், சத்தாதி விடயங் களாலும், அறிவுமுதலியவற்றை விளக்குவனவாகிய கலை வித்தை முதலிய தத்துவங்களாலும், கன்மபலனை வரை யறைசெய்யும் காலம் நியதி முதலிய தத்துவங்களாலும், தூலவுடம்புகளாலும், பிரத்தியட்சப் பிரமாணங்க ளாலும், ஆகமங்களாலும் ஆன்மாக்கள் சகல நிலையில் ஒருவன் கூட்டிஉணர்த்த உணரும். கருவிகளொன்று மின்றி நிற்குங் கேவலநிலையில், அருவப்பொருளாய் ஒன் றையும் அறியாது நிற்கும். இவ்விருநிலைகளையும் அறிய வல்ல சிவபெருமானே ஆன்மாக்கள் மேற்கொண்ட கருணை யினால் மாயாகாரியங்களைக்கொண்டு ஆன்மாக்களுக்கு உயிர்க்குயிராய்நின்று அறிவிப்பர்[2]

சிவபெருமான் பிறர் அறிவிக்க வேண்டாது தாமே முதல்வராய் உயிர்களின் பொருட்டுக் கேவலாவத்தையில் அறிதல் வகையில் சூக்கும ஐந்தொழிலையும், சகலாவத்

---

1. உணர்த்துதல்—அறிவித்தல்.
2. சிவஞானசித்தியார் 5–2–4. அதிசூக்கும ஐந்தொழிலாவது:– ஆன்மாவிற்கு அறிவித்தல் சிருட்டி, அறிந்தவற்றுள் அழுந் துதல் திதி, முன்னறிந்தவற்றினின்றும் பிரித்தல் சங்காரம். ஒன்றனை யறியவேண்டுங்கால் பிறிதொன்றனை யறியவொட் டாது மறைத்தல் திரோபவம். அறிந்தவற்றை அநுபவிக்கச் செய்தல் அனுக்கிரகம்.

தையில் விடயத்தைத் தோற்றுவிக்குமுறையில் சிருட்டி முதலிய தூல ஐந்தொழிலையும், அச் சகலாவத்தையினுள்ளும் சாக்கிரத்தில் இன்ப துன்பப் பயனை ஊட்டுவிக்கு முறையில் அதிசூக்கும ஐந்தொழிலையுஞ்செய்து நிற்பர்.

[1] சிவபெருமான் உயிர்களுக்கு அறிவிக்குங்கால் எவ்வாறு நின்று அறிவிப்பரெனில்: இருநூற்றிருபத்துநான்கு புவனங்கள் திருமேனியாகவும், எண்பத்துநான்கு நூறுயிரயோனி பேதங்கள் அவயவங்களாகவும், இச்சாஞானக் கிரியைகள் உட்கரணமாகவுங் கொண்டு, எண்ணிறந்த உயிர்களிடத்து அறிவிற்கறிவாய் நின்று உணர்த்துவர் அவ்வாறுணர்த்துதலாகிய அதிசூக்கும ஐந்தொழிலும் மேற்கூறிய கருவிகளின் துணையைக்கொண்டறியச் சங்கற்ப மாத்திரையாகவே நாடகமாகச் செய்தருளுவர்.

## உணர்த்துதலால் வரும் பயன்

அதிசூக்கும ஐந்தொழிலாகிய அறிவித்தலால் வரும் பயன் யாதெனில், சிவபெருமான் ஆன்மாக்களுக்கு மாயாகாரியங்களைக் கொண்டு விடயங்களை அறிவித்து, ஏகதேச அறிவை நிகழச்செய்து உலகபோகங்களைக் கூட்டி அப்போகானுபவத்தினுல் பல பிறவிகளை எய்தும்படிக்கும், அதனுல் வெறுப்புத்தோன்றும்படிக்கும் செய்து, பருவம் முதிர்ந்தவிடத்து வியாபகஅறிவைவிளக்கி அவ்வறிவின் பயனுகப் பரபோகமாகிய பேரின்பத்தைக் கொடுத்தருளுவர்.

## பயன்தரும்முறை, [1]

ஆன்மாக்களுக்குப் போகங்கொடுத்து அறிவை விளக்கி மோட்சத்தைக் கொடுப்பதாகிய அக்கருணையும் சிவபெருமானுக்கு இயற்கைக் குணமெனப்படும் சத்தியாம் அவ்வருட்குணமாகிய சத்தியையின்றிச் சிவமில்லை. அச்

---

1. இவ்வுண்மையைப் புராணங்களில் இறைவன் விசுவரூபங் காட்டியதாகக் கூறப்படுவதோடு ஒட்டியறிக.
2. சிவஞானசித்தியார் 5-2-9,

சிவத்தை விட்டுச் சத்தி நீங்குதலில்லை.[1] உலகத்துப் புறவிருளைக் கிரணத்தாலோட்டிக் கண்களுக்குப் பிரகாசத்தைச் செய்கின்ற சூரியன்போல, சிவபெருமான் அருட்குணமாகிய சத்தியால் ஆன்மாக்களுக்கு மலசத்தியை நீக்கி அனுக்கிரகஞ்செய்வர். சூரியனுக்கு இருளை நீக்குவது இயற்கையாய், அதனால் ஆகக்கடவதோர் பயனுமின்றுதல்போல, சிவபெருமானுக்கு அருட்குணம் மேம்படுதல் இயற்கையாய் அதனால் அவருக்கு ஆகக்கடவதோர் பயனுமில்லை.

## எவ்வெத் தெய்வத்தை வழிபடினும் சிவபெருமானே பயன் கொடுப்பர்.

நல்வினையுள்ளுஞ் சிறந்தது தெய்வ வழிபாடு. எவ்வெவராயினும் ஒழுக்கம் முதலிய நன்மைகளையுடையவராய்த் தத்தம் மதத்திற்கேற்றவாறு எவ்வெவ்வடிவாய், எவ்வெவ்வண்ணமாய், எவ்வப்பெயர் கொண்டு எவ்வெத்தெய்வத்தை வழிபடினும் அவ்வவ்வடிவாய், அவ்வவ்வண்ணமாய், அவ்வவ்வடிவப் பெயர்கொண்டு, அவ்வத்தெய்வத்தைத் தமது சத்தியால் அதிட்டித்து நின்று, அவ்வவ் வழிபாடுகண்டு, அதனை ஏற்று அனுக்கிரகிப்பவர் முன்னைப்பழம்பொருட்கும் முன்னைப் பழம் பொருளாகிய சிவபெருமான் ஒருவரேயாம்.[2]

---

1. சிவபிரானுக்குத் தீயின் சூடு போலச் சத்தியார் வேறுபடாதுள்ளார். சத்தியின்றிச் சிவபிரான் இல்லை, சிவனை யின்றிச் சத்தியில்லை என்பது சுப்பிரபேதாகமம்.

2; கந்தபுராணம்

எவ்வெவர் தம்மை யேனும் யாவரே யெனினும் போற்றி
னவ்வவ ரிடமாக் கொண்டே யவர்க்கரு டருவாய் போற்றி
மெய்வரு தெளிவி லுன்னை வெளிப்பட வுணர்ந்து ளோர்க்குத்
தெய்வத போக முத்தி சிறப்பொடு தருவாய் போற்றி.

யாதொரு பொருளை யாவ ரிறைஞ்சினு மதுபோய் முக்க
ணுதியை யடையு மம்மா வங்கது போலத் தொல்லை
வேதம துரைக்க நின்ற வியன்புக ழனைத்து மேலா
நாதனை யணுகு மெல்லா நதிகளுங் கடல்சென் றென்ன.

அண்டசம் சுவேதசம் உற்பிச்சம் சராயுசம் என்னும் நால்வகை யோனிகளுள் ஒரு யோனிவாய்ப்பட்டுப் பிறப்பன வெல்லாம் பசுக்கள். அப்படிப் பிறத்தல் இல்லாதது பதி. பதிக்கும் பசுவுக்கும் தம்முள் வேற்றுமை இதுவே யாம். ஏனைத் தெய்வமெல்லாம் பிறந்திறத்தலேயன்றி மேல்வினையுஞ் செய்தல் கேட்கப்படுதலால் சுதந்திர அறிவில்லாதனவேயாம். அவையொன்று மில்லாத சுதந்திர அறிவுடையவர் சிவபெருமானேயாம். [1] எவ்விடத்து யாதொரு தெய்வத்தைப் பொருளாகக்கொள்ளினும், அவ்விடத்து அத் தெய்வத்தினிடமாக நின்று அவ்வழிபாட்டை அறிந்து உயிர்கட்குப் பலனைக்கூட்டுபவர். அச்சிவபிரான் ஒருவரே. ஏனைத்தெய்வங்கள் சுதந்திர அறிவின்மையால் தாமே பலன் கொடுக்கமாட்டா.

சிவஞானசித்தியார் 2-2-25,

யாதொரு தெய்வங் கொண்டீ ரத்தெய்வ மாகி யாங்கே
மாதொரு பாக னார்தாம் வருவர்மற் றத்தெய் வங்கள்
வேதனைப் படுமி றக்கும் பிறக்குமேல் வினையுஞ் செய்யு
மாதலா னிவையி லாதா னறிந்தருள் செய்வ னன்றே.

திருநாவுக்கரசுசுவாமிகள்

நூறு கோடி பிரமர்க ணொந்தினார்
ஆறு கோடி நாராயண ரங்ஙனே
ஏறு கங்கை மணலெண்ணி லிந்திரர்
ஈறி லாதவ னீச னொருவனே.

பசுக்கள் பிராமணர் பிதா மாதா முதலாயினோரை இம்மையிலே வழிபட்டோர்க்கு அவ்வழிபாட்டைக் கடவுளறிந்து சுவர்க்கம் முதலிய உலகங்களில் அதற் கேற்ற பலனைத் தருவரென்பது எல்லார்க்கும் சம்மதமான முடிபாம். அதுபோல, எத் தெய்வத்தை வழிபடினும் அவ்வழிபாட்டிற்குச் சிவபெருமானே பலன் தருவர்.

அவ்வாறாயின் பிறதெய்வத்தை வழிபட்டார்க்கு அவ்வத் தெய்வமே எதிர்தோன்றிநின்று பலன் கொடுத்ததே

---

1. இதனாலே வேதாகம முதலிய நூல்கள் பரமபதி சிவபெருமானே என்று கூறுவதை அறிக.

யென நூல்களிற் கூறப்படுகின்றதேயெனில், அன்று. அரசன் ஆணையே மந்திரி முதலாயினோர்மாட்டு நின்று பிறர்க்குப் பலன் கொடுக்குமாறு போல, சிவபெருமானே தமது ஆணையைத் தம்மேவல் வழிநிற்கும் அவ்வக் கடவுளர்மாட்டு வைத்து அத் தேவரிடத்து நாம் செய்யும் வழிபாட்டிற்கு அத்தேவரிடமாகநின்று பலன்கொடுப்பர். அங்ஙன மின்றித் தாமே வினைத்துடக்கிற் பட்டுப் பரதந்திரர்களாய் நிற்கும் அக்கடவுளர் பிறருக்குப் பலன் கொடுத்தல் ஒருபோதும் பொருந்தாது.

சமயகோடிகளுக்கெல்லாம் அவ்வச் சமயக் கடவுளரைத் தமது சத்தியால் அதிட்டித்துநின்று அருளுபவர் சிவபெருமானுயின் ஒருவன் எந்தச் சமயத்தில் இருந்தாலுமென்னை? அவனுக்குயாண்டும் அருளுண்டாமோ எனின்; அது ஒருபோதுங்கூடாது; எங்ஙனமெனில், பூமண்டலாதிபதியாகிய அரசனது ஆஞ்ஞையானது இராசபதம் முதல் சேவகபத மிறுதியாகவுள்ள எவ்வெக்கீழ்க்கீழ் அதிகாரிகள் மாட்டும் செல்லுமாயினும், அவ்வவ்வதிகாரிகள் தம்மை அடுத்தோர்க்குத் தத்தம் சத்திக்கேற்றபடி கொடுக்கும் பயனுனது அப்பூமண்டலாதிபதி தன்னை அடுத்தோர்க்குக் கொடுக்கும் பயனுக்குத் தினைத்துணையேனும் ஈடாகாது அழியுந்தன்மையது போலாம்,

இதனுல், பசுவர்க்க மாகிய பிறதெய்வங்களின் வழிபாட்டிற்குச் சிவபெருமானே பலன்தருவரென்பது பெறப்பட்டமையால் பசுபுண்ணியமும் சிவபுண்ணியமாகுமென்று கொள்ள வருமோ எனில், பசுக்களை நோக்கிச் செய்யப்படும் புண்ணியம் பசுபுண்ணியம்; பதியை நோக்கிச் செய்யும் புண்ணியம் பதிபுண்ணியம். சுவர்க்காதி உலக போகங்களை விரும்பிப் பதியைநோக்கிச் செய்யும்புண்ணியம் பசுபுண்ணியம். முத்தியின்பத்தைவேண்டிப் பதியை நோக்கிச்செய்யும் புண்ணியம் பதிபுண்ணியம். இனிப் பசுக்களிடத்துச் சிவபாவனையோடுசெய்யும் புண்ணியம் பதிபுண்ணியம். பதியினிடத்து நம்மிலொருவன் என்னும் பசுபாவனையோடுசெய்யும்புண்ணியம் பசு புண்ணியம். ஆதலாற் புண்ணியச்செயல் செய்பவன் கருத்து வகை

யால் வேறுபடுதலேயன்றிக் கொள்வோன் கருத்துவகை யால் வேறுபடுதல் இல்லை. ஆதலின் ஏனைத்தெய்வங்களை யேமுழுமுதற் கடவுளென எண்ணிச் செய்யும் பசு புண்ணியம் சிவபுண்ணியமாகாதவாறு காண்க.

---

## சிவ வழிபாடே சிறப்பான அறம்.

இவ்வாற்றால் ஏனைத் தேவர்களிடத்துச்செய்யும் வழி பாடுகளையும் சிவபெருமானே ஏற்றுக்கொண்டு பலன் தருவர் என்பது பெறப்பட்டது ஆதலால் சிவபெருமான் திருவடியைவழிபடுதலே நல்ல அறமாம். அவருடைய திருப்பாதங்களை மறந்து செய்கின்ற அறங்களெல்லாம் வீண்செயலாகும். அன்றியும். புண்ணியமாவது அச் சிவபெருமானால் வேதாகமங்களில் விதிக்கப்படும் விதி யாதலினாலே அவ்வாறு விதித்தற்குச் சிவபெருமான் ஒரு பொருளினும் விருப்பில்லாதவராய், உயிர்களிடத்து வைத்த கருணையே காரணமாம். ஆதலின் அந்நன்றி செய்த அச் சிவபெருமானது திருப்பாதபூசனையே உறுதி யாகச் செய்யக் கடவது. [1]

இவ்வண்ணமிருத்தலால், வீடடைய விரும்பினோர் புறத்தும் அகத்தும் சிவபெருமானை வழிபடல்வேண்டும். சிவபெருமான் புறத்தே திருக்கோயிலுள்ளிருந்தருளும் சிவலிங்கம் முதலிய மூர்த்திகளையும் மெய்யடியார்களது திருவேடங்களையும் குருவையும் ஆதாரமாகக் கொண்டு நின்றும், அகத்தே உயிரிடமாகக் கொண்டு நின்றும் ஆன்மாக்கள் செய்யும் வழிபாட்டைஏற்று அவ்வழிபாட் டிற்கேற்ற பலனைக்கொடுத்தருளுவர்.

முற்பிறவிகளிலே செய்த வினைகாரணமாகவே நால் வகைத் தோற்றம், எழுவகைப்பிறப்பு, எண்பத்துநான்கு லக்கம் யோனிபேதங்களிலும் சென்று பிறந்திறந்து உழ லும் ஆன்மாக்களை அவற்றினின்றும் எடுக்குநிமித்தமா கவே, சிவபெருமான் பரந்த உலகத்திலே தலம் தீர்த்

---

1: சிவஞானசித்தியார் சூ—2—அதி—2—செ.27—28

தம் மூர்த்தி என்னும் மூன்றுவடிவங்களைக் கொண்டருளினர். இந்தமூன்றனையும் சிவபெருமானுகவே பாவித்து, வழிபடுவோர் பரமசாரியரால் உண்மைஞானம்பெற்று முத்தி அடைவர். ஆதலால் இவ்வுண்மையை அறிந்து பரம்பொருளைத் தினந்தோறும் மேற்குறித்த இடங்களிற் பத்திசெய்து வழிபடவேண்டும்.

தணிகைப்புராணம்.

ஈண்டுநாற் பிறப்பி லெழுவகைத் தோற்றத்
தெண்பத்து நான்கெனு மிலக்க
மாண்டபல் பவத்திற் பன்முறை வினையான்
மறிதரு முயிர்களை யெடுப்ப
வாண்டரு ளமல னநாதியி னுலக
மாக்குழி யருந்தலந் தீர்த்தங்
காண்டகு மூர்த்தி யென்னமூன் றுருவாய்க்
கண்ணக னுலகெலாங் கதித்து.

தாயுமானசுவாமிகள்

மூர்த்தி தலந்தீர்த்தமுறையாற்றொடங்கினர்க்கோர்
வார்த்தைசொலச்சற்குருவும்வாய்க்கும்பராபரமே.

## அறமும் சிவபெருமானிடத்தில் அன்பில்லாது செய்யின் பாவமாம்;

[1] அறம் பாவங்கள் பலன்தருவது, அவ்வறம் பாவங்களைக் கொள்வோர் உயர்வுதாழ்வுபற்றியேயாம். அவ்வாறன்றி செய்வாரது உயர்வுதாழ்வுபற்றியாவது செய்யப்படும் வினைகளின் உயர்வுதாழ்வுபற்றியாவது பயன் தருதலன்று. ஆதலால், சிவபெருமான் திருவடிக்கு அன்புடையார் பாவஞ்செய்யினும் அப் பாவமானது புண்ணியமாய்முடியும். அவர்திருவடிக்கு அன்பிலார்செய்யும் புண்ணியமானது பாவமாய்முடியும். இவற்றிற்குத் தேவரில் வரங்கள் பெற்ற தக்கன்செய்த பெரிய யாகமானது புண்ணியமேயாயினும், இறைவனரிடத்து அன்

1 சிவஞானசித்தியார் சூ2—அதி 2 செ 29 "இதற்கு வாயவ்வியசங்கிதையிலும், கந்தபுராணம் சதருத் திரசங்கிதையினும் பிரமாண்டத்துமறிக" என்றார் மறைஞானதேசிகர்,

பில்லாமையால் பாதகமாய் முடிந்ததும். மானுடரிற் பாலப்பருவத்தையுடைய சண்டேசுரநாயனுர் தமது பிதாவுக்குச்செய்த கொலைப்பாதகமானது இறைவனு ரிடத்து அன்புடைமையால் புண்ணியமாய் முடிந்ததும் சான்ருகும். ஆதலால் சிவபெருமானையே அர்ச்சித்தல் வேண்டும்.

---

## வீடடைதற்குவழியும் உபாயமும்.

[2] நால்வகைத் தோற்றத்து எழுவகைப் பிறப்பில் எண்பத்துநான்கு நூருயிரயோனிபேதங்களுள்ளே ஒருயிர் மானுடப்பிறவியில் வந்துதித்தல் மிக அருமையாம். மானுடப்பிறவியெய்தினும், இவ்வுலகத்துள் வேதாகம வழக்கம் இல்லாத நாட்டிலே பிறவாது, அவ்வேதாகம வழக்கம் மிகுந்துள்ள உத்தமதேசத்திலே பிறத்தலரிது; அவ்வாறு பிறத்தல் மிகுந்த புண்ணியத்தாலுண்டாம். அவ்வுத்தம நாட்டினுள்ளும் உத்தமசாதியிற் பிறத்தல் அதனினும் அரிது. உத்தமசாதியிலே பிறந்தும் புறச் சமயத்திற் செல்லாது நிற்கும் பேற்றினைப்பெறுதல் அதனினும அரிது.

அதிகாரம் செல்வம் கல்வி முதலியவற்ருல் வரும் செருக்கும் வறுமையால் வருஞ் சிறுமையுநீங்கி அடிமைத் திறத்தோடும் சைவ சித்தாந்த நெறியை அடையும் பாக்கியம் பெறுதல் பெரிதும் அரிதாம். அந்நெறியிலே நின்று சிவனருளாலே சிவனை வணங்கும் பேறுண்டாயின் அதை மலங்களைப்போக்கி வீடடைதற்கு வாயிலும் உபாயமுமாம்.

பிறவிகளுட் சிறந்த மானுடப்பிறவியைச் சிவபெரு மான் நமக்குத் தந்தருளியது, மனம் வாக்குக் காயங் களினுலே தம்மை வழிபட்டு முத்தியின்பம்பெற்று உய்தற்பொருட்டேயாம்.

---

2 சித்தியார் 2,4 89, 90—96.

திருநாவுக்கரசுசுவாமிகள்

திருக்குறுந்தொகை.

வாழ்த்த வாயு நினைக்க மடநெஞ்சும்
தாழ்த்தச் சென்னியுந் தந்த தலைவனைச்
சூழ்த்த மாமலர் தூவித் துதியாதே
வீழ்த்த வாவினை யேநெடுங் காலமே.

திருக்குறுந்தொகை.

பூக்கைக் கொண்டரன் பொன்னடி போற்றிலார்
நாக்கைக் கொண்டர னாமம் நவில்கிலார்
ஆக்கைக் கேயிரை தேடி யலமந்து
காக்கைக் கேயிரை யாகிக் கழிவரே.

சுவர்க்கம் முதலிய மேலுலகங்கள் இப்பூமியிலே ஈட்டிய புண்ணியத்தின் பயனாகிய இன்பத்தை அனுபவித் தற்கு இடமாகுமன்றிச் சிவபெருமானை மனம் வாக்குக் காயங்களினாலே வழிபட்டு மலபந்தத்தை நீக்கிக் கொள்ளுவதற்கு இடங்களாகா. ஆதலால்மேலுலகத்துள்ள பிரமா விட்டுணு இந்திரன் முதலிய தேவர்களும் இப் பூமியிலே வந்து சிவபெருமானை அர்ச்சிப்பர் [1] ஆகையால் இந்த மனுஷ்யதேகங் கிடைத்தற்கரியது.

இச்சரீரம் எவ்வளவுகாலம் நிற்குமென்று அறிய முடியாமையினால், இது உள்ளபொழுதே சிவபெருமானை வழிபடுதல் நம் கடனாகும். அங்ஙனம் மெய்யன்போடு வழிபடுபவருக்குச் சிவபெருமான் பொருட்செல்வத்தையும் என்றுமழியாத அருட்செல்வத்தையும் கொடுத்தருளுவர்.

திருநாவுக்கரசுசுவாமிகள்

திருக்குறுந்தொகை.

ஐய னேயர னேயென் றரற்றினால்
உய்ய லாமுல கத்தவர் பேணுவார்
செய்ய பாத மிரண்டு நினையவே
வைய மாளவும் வைப்பர்மாற் பேறரே.

---

1, பிரமா சீகாழி முதலிய தலங்களிலும், விஷ்ணு திருமாற் பேறு முதலிய தலங்களிலும், இந்திரன் திருக்கண்ணார்கோ யில் முதலிய தலங்களிலும் இவ்வாறே மற்றுமுள்ள தேவர் கள் வெவ்வேறு தலங்களிலும் வந்து அருச்சித்தமை புரா ணங்களாலும் திருமுறைகளாலும் அறியப்படும்,

திருக்குறுந்தொகை.

மாட்டைத் தேடி மகிழ்ந்துநீர் நும்முளே
நாட்டுப் பொய்யெல்லாம் பேசிடு நாணிலீர்
கூட்டை விட்டுயிர் போவதன் முன்னமே
காட்டுப் பள்ளி யுளான்கழல் சேர்மினே.

திருஞானசம்பந்தசுவாமிகள்
பண்–குறிஞ்சி,

செல்வ நெடுமாடஞ் சென்றுசே ணோங்கிச்
செல்வ மதிதோயச் செல்வ முயர்கின்ற
செல்வர்வாழ் தில்லைச் சிற்றம் பலமேய
செல்வன் கழலேத்துஞ் செல்வஞ் செல்வமே.

---

## காரியப்பிரபஞ்சம்.

### அசித்து—அசத்து.

நிலையற்ற ஆன்மபோதத்தாற் சுட்டியறியப்படுவதாகிய காரியப் பிரபஞ்சங்கள், தனு கரண புவன போகங்களாய்ப் பலவகைப்படுதலாலும், சகல நிலையில் மாயாமலங்களாகி ஆன்மாவோடு கலந்து நிற்றலாலும், சுத்தநிலையில் ஆன்மாவைவிட்டு நீங்குதலாலும் அசித்தெனப்படும். அசித்து-சடப்பொருள்.

[1] நிலவுலகத்து அரச வைபவத்தோடு வாழும் வாழ்வும், விண்ணுலகத்து இந்திரன் பிரமா விட்டுணு முதலியோர் வாழ்வும், பூதபரிணமமாகிய எண்பத்துநான்கு நூறுயிரம் யோநிபேதங்கள் எவற்றினும் பொருந்திய வாழ்வும் தோன்றியழிவதாகிய இந்திரசாலமும் சொப்பனக்காட்சியும் கானற்றேரும்போல நெடுங்காலம் நிலைபெறுவன போற்றேன்றி விரையக்கெட்டு மறைந்துபோம் இயல்பு பற்றி உலகப்பொருள்கள் அனைத்தும் அசத்தெனவுங் கூறுவர். அசத்து - இல்பொருள்.

## உபகரித்தற் பதியிலக்கணம்

எங்கும் வியாபித்து உபகரிக்கும் சிவபிரானுர் சுட்டியறியப்படுதலும் ஒருவாற்ருனும் அறியப்படாமையும்

1, சித்தியார் 6–1–3
அத்துவிதம்-பொருள் இரண்டாயிருந்தும் வேறறக்கலந்து நிற்குந் தன்மை.

ஆகிய இரண்டு தன்மையும் இன்றிச் சித்துப் பொருளும் சத்துப்பொருளுமாகி அருளினால் அறியப்படுபவராய் நிலை பெறுவர் என்று ஆகமங்கள் கூறும்.
சத்து – உள்பொருள். சித்து – பேரறிவு.

சிவபெருமான் வாக்கு மனாதீதராய், பசுஞானத்தாலும் பாச ஞானத்தாலும் அறியப்படாதவராய், பதிஞானத்தினால் அறியப்படுபவராய், ஆன்ம அறிவுடன் கலந்து ஒன்றாயும், அறியப்படுதற்குப் பொருட்டன்மை பற்றி ஆன்மாவின் வேறாயும், அறிதற்றொழில் நிகழ்தற்கு ஆன்மாவின் அறிவைச் செலுத்தி அவ்வறிவோடு உடனாயும், நின்று அறிவிப்பர்.

இவ்வாறு உயிரோடு பிரிப்பின்றி [1] அத்துவிதமாய் நிற்கும் இறைவனாரைக் காணவேண்டின், கண்ணொளியோடு பிரிப்பின்றி நின்று கண்ணுக்கு வேறுவிடயங்களைக் காணும்படி உபகரிக்கும் சூரியனைக் காணவேண்டின் அதன் கிரணத்தாற் காண்டல்போல, அவருடைய திருவருளினாலே காணுதல் வேண்டும்.

## ஆன்மா சதசத்து.

சத்தாகிய சிவம் என்றுள்ளதோ, அன்றே சதசத்தாகிய ஆன்மாக்களும் உள்ளனவாய், அவ்வுயிர்களை அசத்தாகிய பாசம் பந்தித்து நிற்கும். சத்து அசத்து என்னும் இரண்டினையும் அறிவது ஆன்மாவாம். அது, சத்தாகிய சிவமும் அன்று; அசத்தாகிய பாசமும் அன்று. அது சத்து அசத்து என்னும் அவ் விரண்டிற்கும் வேறாய், அவ்விரண்டன்பாலும் தனித்தனி கூடி, மலரின்கண் மணமானது, மலர்போல் விளங்கித் தோன்றாமலும் சூனியமல்லாமலும் அம்மலரின்கண் அடங்கித் தோன்றுவதுபோல சத்திலும் அசத்திலும் சார்ந்ததன் வண்ணமாய்அடங்கித் தோற்றுதலின் சதசத்தாம், சூரியன்முன் இருள் முனைத்து நில்லாதவாறுபோல, சத்தின் முன் அசத்து முனைத்து நிற்கமாட்டாததாம்.

---

1. அத்துவிதம் – பொருள் இரண்டாயிருந்தும் வேறறக்கலந்து நிற்கும் தன்மை.

## சிவன் அதிசூக்குமசித்து சீவன் தூலசூக்குமசித்து.[1]

சிவபிரான் பிறபொருள்களின் துணைவேண்டாது தாமாகவே அறியுங் காரணத்தால், **அதிசூக்குமசித்து,** எனப்படுவர். ஆன்மாக்களுக்கு மலத்தை அருளால் நீக்கித் தம் உண்மையை அறிவித்து, உயிர்க்குத் துணைவராய் நிற்பவராகையால், **அதிசூக்குமசத்து**மாம்.

ஆன்மாக்கள் தம் அறிவு தொழிற்படவேண்டுமாயின், சகலத்தில் கருவி முதலிய துணையையும், சுத்தத்தில் திருவருட்டுணையையுமின்றி, முடியாமையால் **தூலசூக்கும சித்து** எனப்படும். அவ்வாறறிந்தபின் என்றும் அழி வின்றி நிற்றலால் தூல **சூக்குமசத்து**மாம்.

ஆன்மாக்கள் பாசத்தடையினின்று நீக்கிப்பதியை யறிந்து அதுவாய் நிற்கும் நிலை சூக்குமசித்து எனப்படும். ஆன்மா தூலசூக்கும சித்தென்பது கருவிகளின் துணை கொண்டறியுங் காரணத்தால் வந்தது. இது பிறவொளி யைக் கொண்டறியுங் கண்ணொளி போலாம். ஆன்மா சூக்கும சித்தென்பது திருவருட்டுணை கொண்டறியுங் காரணத்தான் வந்தது. இது உயிருணர்வைக் கொண் டறியுங் கண்ணொளி போலாம். சிவம் அதிசூக்கும சித் தென்பது பிறபொருளின் துணைவேண்டாது தானேயறி யுங் காரணத்தான் வந்தது. இது தானேயறியும் சூரிய னொளி போலாம். ஆகையால் ஆன்மாக்களுக்குஞ் சிவ னுக்கும் இவ்வாறு பேதமுண்டு.

அந்த அநாதிமுத்தராகிய சிவபெருமான், ஆன்மாக் களிடத்து வைத்த காருண்ணியத்தினலே, அவற்றைப் பந்தித்த ஆணவாதி பாசங்களை விடுவித்து மோக்ஷத்தைக் கொடுத்தருளுவர்.

---

1. சிவஞானசித்தியார், 7—9—2.

## சிவபெருமான் ஞானந்தந்து உணர்த்துமுறை.

அரசகுமாரனொருவன் சிறுபிள்ளைப் பருவத்தில் வேடர் வசப்பட்டு, இழிதொழில் செய்து வளருங்காலத்தில் பிதாவாகிய அரசனையுந்தன்னையுந் தெரியாது மயங்கினின்றான். நிற்குங்கால் தந்தையாகிய அரசன் வந்து மகனைப் பார்த்து நீ வேடகுமாரனல்லன் என்மகன் என்று அறிவுறுத்தி அவ்வேடரினின்றும் அவனை மீட்டுத்தானும் வண்ணஞ் செய்து போற்றுமாறுபோல, உயிர் தன்னிலையினின்றும் வேறுபட்டு ஐம்பொறியாகிய வேடர்வசப்பட்டு அறிவிழந்து தன்னையுந் தலைவனையுந் தெரியாது வருவதையறிந்து, அவ்வுயிர் செய்த சிவபுண்ணிய முதிர்ச்சிக்கிரங்கி, சுத்தசித்தெனப்படும் அவ்வீசனார் குருவடிவங் கொண்டெழுந்தருளிவந்து, தன்னையுந் தலைவனையும் அறியும்படி செய்து, ஐம்பொறியோடு கூடும்படி செய்த மலவலியைக்கெடுத்து, அதனின்றும் மீட்டுத் தம்வண்ணமாக்கித் திருவடியை அடையுமாறு செய்தருளுவர். [1]

### பசுவர்க்கம்.

பதியை அடைதற்கு உரிமையுடையனவாகிய ஆன்மாக்கள் எண்ணிறந்தன. அவை மலபந்த வேறுபாடு பற்றி விஞ்ஞானகலர், பிரளயாகலர், சகலர் என மூவகைப்படும்.

### விஞ்ஞானகலர்.

விஞ்ஞானத்தினாலே கலாசம்பந்தமற்றவர் **விஞ்ஞானகலர்.** [2]

அநாதிகேவலத்தில் ஆன்மாக்கள் ஆணவமலத்தினாலே மறைப்புண்டு கிடக்கும். மலத்தின் சத்திகள் பலவாதலால் மறைப்பும் பல வேறுவகைப்படும். அங்ஙனம் மறைப்

---

1. சிவஞானசித்தியார் சூ 8—1.
2. விஞ்ஞான + அகலர் = விஞ்ஞானகலர், **விஞ்ஞானகலர்** என்பது விஞ்ஞானகலர் என மரீஇ வழங்கும்.

புண்டு கிடக்கும் ஆன்மாக்களுக்கு மலநோயைத் தீர்க்கச் சிவபெருமான் திருவுள்ளங் கொண்டருளுவர். கொண்டருளும் போது கன்மமல மாயா மலங்களைக் கூட்டாமலே விஞ்ஞானத்தால் ஆணவமலத்தை நீக்குதற்குரிய ஆன்மாக்களுக்குச் [1] சுத்தமாயா காரியங்களாகிய கலாதிதத்துவங்களாலாக்கப்பட்ட சரீரங்களைக்கொடுத்து அசுத்த மாயைக்குமேல் இருக்கும்படி செய்வர். இவ்வாறு கலாதிதத்துவங்களைப் பெற்று விஞ்ஞானத்தால் அத் தத்துவங்களிற் கட்டுப்படா திருத்தலின் விஞ்ஞானகலர் எனப்பெயர் பெறுவர் இத்தகைய ஆன்மாக்களுக்கு ஆணவ மலபந்தமிருத்தலால், இவர் ஒருமலமுடையவர் எனப் படுவர். இவர்கள் பக்குவர் அபக்குவர் என இருதிறப் படுவர். பக்குவர் சிவாநுக்கிரகத்தால் பரமுத்தி அடைவர்.

அபக்குவர் உத்தமர், மத்திமர், அதமர் என முத் திறப்படுவர். உத்தமர் அணுசதாசிவர் முதலியோராய்ச் சதாசிவதத்துவத்தில் வசிப்பர். மத்திமர் அஷ்டவித்தியேசுரர் முதலியோராய் ஈசுவரதத்துவத்தில் வசிப்பர். அதமர் மூன்றரைக்கோடி தேவர்களாய் [2] சுத்தவித்தியா தத்துவத்தில் வசிப்பர். இவர் அதிகாரமலமுடையவராய் இருப்பர்.

விஞ்ஞானகலருக்கு எடுத்த பிறவியேயன்றி வேறு பிறவியில்லை. இவர்கள் தீவிரதர சத்திநிபாதத்தைப் பொருந்துதற்குரியராதலால், கருணைவடிவினராகிய இறைவனர் அவர் வடிவில் உள்ளீடாக்நின்று உணர்த்துவதா

---

1. "காலமுதல் நிலமீறாகிய தத்துவங்கள் எல்லாம் அசுத்த மாயையிற்போலச் சுத்தமாயையினும் உள்ளன. அவை இவைபோலன்றிச் சுத்தமாயுள்ளன" என்று பௌட்கராகமம் கூறும்.

2. இவ்விடத்துக் கூறிய தேவர்கள் வேறு; சகலவர்க்கத்துத் தேவர்கள் வேறு.

கிய [1] நிராதாரதீக்கைசெய்து ஆணவமலத்தை நீக்கியருளுவர். இவர்கள் பிரளயத்திலும் மத்தியிலும் முத்தியடைவர்.

## பிரளயாகலர். [2]

பிரளயத்திற் கலையற்றவர் பிரளயாகலர்.

கன்மத்தைக்கூட்டி ஆணவமலத்தை நீக்குதற்குரிய ஆன்மாக்களுக்குச் சிவபெருமான் அசுத்தமாயாகாரியமாகிய கலாதிதத்துவங்களாலாக்கப்பட்ட சரீரத்தைக் கொடுத்து அவ்வசுத்தமாயையில் இருக்குமாறு செய்தருளுவர். இவருக்குப் பிரளயத்தின் பின் பிறவியில்லாமையால் பிரளயாகலரெனப் பெயராயிற்று. இவருக்கு மாயை யுளதாயினும் அதனிற் பிணிப்புண்டு மயங்குதலின்றி ஏனைய இருமலத்தானும் பிணிப்புண்டமையின் இருமலமுடையவரெனப்படுவர்.

இவருக்குச் சத்திநிபாதம் தீவிரம் தீவிரதரம் என்னும் இரண்டுமாம். கன்மம் உளதாதலின் ஒருபிரளயத்திற் சில பிறவிகள் உள, சிவபெருமான் இவர்களுக்கு மான் மழு சதுர்ப்புயங் காளகண்டம் முதலியஇலட்சணங்களுடைய திருமேனியோடு தோன்றி உணர்த்துவதாகிய நிராதாரதீக்ஷை செய்து மலத்தை நீக்கியருளுவர்.

---

1. தீக்ஷை என்னும் சொற்குப் பொருள்: மலத்தைக் கெடுத்து ஞானத்தைக் கொடுப்பது என்பதாம். தீ—கொடுத்தல். க்ஷா—கெடுத்தல். அத்தீக்ஷை சாதாரம் நிராதாரம் என்று இருவகைப்படும். சாதார தீக்கை என்பது ஆதாரத்தோடு கூடி நின்று செய்யப்படும் தீக்கை எனப்படும். அதாவது பரமேசுரன் குருமூர்த்தியை ஆதாரமாகக்கொண்டு நின்று செய்யும் தீக்கையாம். நிராதாரதீக்கை என்பது ஆதாரமின்றி நின்று செய்யுந் தீக்கையாம்.

2. பிரளய + அகலர் = பிரளயாகலர்.

## சகலர்.

கலையுடையோர் சகலர்[2] எனவே கலாதிதத்துவங்களோடு கூடியவர் எனப்படுவர். சகலர் ஆணவம் கன்மம் மாயையென்னும் மும்மலங்களாலும் கட்டுண்டவர்கள். பிரம விட்டுணு முதலிய தேவர்கள் மனிதர்கள் முதலிய உயிர்கள் எல்லாம் சகலர். கன்ம மலம் மாயா மலங்களைக் கூட்டி ஆணவமலத்தை நீக்குதற்குரிய மறைப்பினையுடைய ஆன்மாக்களுக்கு அசுத்தமாயா காரியமாகிய கலாதிதத்துவங்களாலாக்கப்பட்ட சரீரங்களைக் கொடுத்துப் பிரகிருதி மாயையின்கீழ் இருக்குமாறு செய்வர்.

இவர் மும்மலமுடையவராதலின் மயக்கத்தினுல் பல பிறவிகளையெடுத்து, பிரளயத்தில் கலாதிகளுடன் ஒடுங்கிக்கிடந்து மறுபடி சிருட்டியாகுங்கால் மீண்டுந் தோன்றி இவ்வாறே பிறப்பிறப்பிற்பட்டு உழல்வராதலின் சகலரெனப்பட்டனர். பக்குவம் வந்த காலத்துச் சிவபெருமான் குருமூர்த்தியாய்த் தோன்றி நின்று அருள்செய்வர்.

சகலர் பிரகிருதி சம்பந்தமான தேகத்தோடு கூடியிருக்கின்ற காலத்தும் தீக்ஷைபெற்றுச் சரியை கிரியை யோகம் என்னும் சிவபுண்ணியங்களைச் செய்தலினுல் பிரளயாகலர் விஞ்ஞானகலராதலுமுண்டு. பிரகிருதி மாயா புவனப்பற்று ஞானத்தால் நீங்கப்பெற்றவர் சகலரில் பிரளயாகலராவர். இவர்களுக்குச் சிவபெருமான் உருவத் திருமேனியுடையவராய் முன்னின்று உணர்த்தியருளுவர். பிரகிருதிமாயா புவனப் பற்றும், அசுத்தமாயா புவனப் பற்றும் ஞானத்தால் நீங்கப்பெற்றவர் சகலரில் விஞ்ஞானகலராவர். இவர்களுக்குச் சிவபெருமான் அறிவினுள் அறிவாய் நின்று உண்மைஞானத்தை உணர்த்தியருளுவர். சகலருக்கு இருவினையொப்பும் மல பரிபாகமும் வந்தவிடத்துப் பரமசிவன் குருவடிவாய் வந்து உண்மைஞானத்தை யுணர்த்தியருளுவர். சகலரில் விஞ்ஞானகலத்துவம் வந்தால் மேற்பிறவியில்லை; பிரளயாகலத்துவம் வந்தால் சில பிறவியுண்டு. மூன்னர்க்

---

2. ஸ + கலர் = சகலர். ஸ – கூட, கலர்–கலையுடையோர்.

கூறிய விஞ்ஞானகலர் பிரளயாகலர் அநாதியாயுள்ளவர். சகலரில் விஞ்ஞானகலர் பிரளயாகலர் ஆதியாயுள்ளவர்.

அபக்குவர் சனன மரண சாகரத்திற்பட்டு இருவினைக் கீடாகப் பிறந்திறந்து உழலுபவர். இவர்களும் காலாந்தரத்தில் பக்குவானுகுணமாகப் பரமேசுவரனால் இரட்சிக்கப்படுவர். மேலும் திரோதாயி மாயேயம் என்னும் இருமலங்கள் மூவகையான்மாக்களுக்கு முண்டு.

சகலருக்கு இருவினையொப்பும் மலபரிபாகமும் வந்தவிடத்து மந்ததரம் மந்தம் தீவிரம் தீவிரதரம் என்னும் நான்குவித சத்திநிபாதமும் நிகழும். அப்பொழுது சிவபெருமான் சகலவர்க்கத்து ஒரு குருவை ஆதாரமாகக் கொண்டு நின்று தீக்ஷைசெய்து மலத்தை நீக்குவர். [1]

## இருவினை யொப்பு.

இருவினையொப்பாவது நல்வினை தீவினைகளிலும் அவற்றின் விளைவாகிய புண்ணிய பாவங்களிலும் இவற்றின் பயனாகிய இன்பதுன்பங்களிலும் விருப்பு வெறுப்பின்றி ஆன்ம அறிவின் கண்ணே ஒப்பத் தோன்றுதலேயாம். அதனால் நான் என்னும் ஆன்மபோதமாகிய மலச்சேட்டை தேயும். இருவினையொப்பு வருதற்குக் காரணம் சரியை கிரியை யோகம் என்னும் சிவபுண்ணியங்களாம்.

## மலபரிபாகம்.

மலபரிபாகமானது ஆணவமல சத்தி ஆன்ம அறிவை மயக்க இயலாது வலிகுன்றி நிற்பதாம். மலபரிபாகத்திற்குக் காரணம் இருவினையொப்பாம். மலபரிபாகம் மலசத்தி தேய்தல்.

---

1. இவற்றினியல்பெல்லாம் சித்தியார் 8-ம் சூத்திரத்து, 1-ம் அதிகரணத்து, 2-ம் திருவிருத்தத்தானும், அவற்றின் உரைப்பகுதிகளாலும், பௌஷ்கரமுதலியவற்றாலும் அறிக.

## சத்திநிபாதம்.

சத்திநிபாதம்[1] என்பது திருவருட்சத்தி பதிதல் எனப் பொருள்படும். அதாவது திருவருட்சத்தியின் விளக்கம் ஆன்ம அறிவின் கண்ணே உண்டாதலாம். ஆன்மாக்கள் மாட்டுப் பதிதலாகிய அச்சத்திநிபாதமும் மந்ததரம் மந்தம் தீவிரம் தீவிரதரம் என நால்வகைப்படும்.

அவற்றுள் மந்ததரசத்திநிபாதமாவது: ஒருகூறு திருவருட் சத்திதோன்ற ஒருகூறு ஆணவமலசத்தி வலிகுன்றுதல். மந்தசத்திநிபாதமாவது; இருகூறு திருவருட்சத்தி தோன்ற இருகூறு மலசத்தி நீங்குதல், தீவிர சத்திநிபாதமாவது; மூன்று கூறு திருவருட்சத்திதோன்ற மூன்று கூறு மலசத்தி நீங்குதல், [2] தீவிரதர சத்திநிபாதமாவது நான்கு கூறு திருவருட்சத்திதோன்ற மலவாசனை முற்றும் விடுபடுதலாம். இதனால் மலபரிபாகமும் நான்கு வகை யாமென்பது உணரப்படும்.

சத்திநிபாதத்துக்குக் காரணம் இருவினையொப்பும் மலபரிபாகமுமாம்.

சகலவர்க்கத்துயிர்கள் பிரகிருதி புவன வாசிகளாதலால் நால்வகைச் சத்திநிபாதங்களையும் பொருந்துதற்குரியர். பிரளயாகலர் பிரகிருதி மாயாசம்பந்த மில்லாமையால் தீவிரம் தீவிரதரம் என்னும் இருவகைச் சத்தி

---

1. சத்தி—திருவருட் சத்தி, நிபாதம்—பதிதல்.

2. தீவிரதரம் எனினும் அதி தீவிரமெனினும் ஒக்கும், மந்ததரம் வாழைத்தண்டினும். மந்தம் பச்சைவிறகினும், தீவிரம் உலர்ந்த விறகினும், தீவிரதரம் கரியினும் நெருப்புப் பற்றுதல் போல்வனவாம், இவ்வாறு கூறப்படுதல் ஆகமங்களுட் காண்க.

கந்தபுராணம்—அடிமுடிதேடுபடலம்—1-8.

மோக வல்வினை யாற்றியே பவத்திடை மூழ்கும்
பாக ரல்லவர்க் கெய்திடா தவனருள் பவமும்
போக மாற்றிடு தருமமு நிகர்வரு புனிதர்க்
காகு மற்றவ னருணிலை பாகரா மவரே.

நிபாதங்களைப் பொருந்துதற்குரியர். விஞ்ஞானகலர் தீவிர தர சத்திநிபாத மாத்திரம் உடையவர்கள்.

மந்ததர சத்திநிபாதமுடையவர்கள் பிரமாண்டத்துக்கு மேலுள்ள புவனங்களையும், மந்தசத்தி நிபாதமுடையவர்கள் புருடதத்துவத்துக்கு மேலுள்ள தத்துவங்களையும், தீவிரசத்திநிபாதமுள்ளவர்கள் சுத்தவித்தை முதலிய தத்துவங்களில் அபரமுத்தியையும், தீவிரதர சத்திநிபாதமுடையவர்கள் பரமுத்தியையும் அடைவார்களென்று சிவாகமங்கள் செப்புகின்றன.

## சத்திநிபாதமுடையார் இலக்கணம்

தேகத்தைச் சிறைச்சாலை என்று துணிந்து, அதை நீக்கும் வழி யாதென்று ஆராய்ந்து தேடுதல், சிவசரித்திரத்தைக்கேட்ட மாத்திரத்தில் சரீரம் புளகங்கொள்ளுதல், கண்கள் ஆனந்தஅருவி சொரிதல், வாக்குத்தழுதழுத்தல், சிவனடியாரைக்கண்டமாத்திரத்தே அன்புடையவர்களாய் அவர்களை வணங்குதல்முதலிய சத்திநிபாதமுடையாருக்குரிய இலக்கண மென்று சைவசமயநெறி கூறும்.

இனி, சாதாரம் நிராதாரம் என்னும் இரண்டு தீக்ஷையினுள் சகல வர்க்கத்துயிர்கட்கு அநுக்கிரகம் செய்யும் முறைமையாகிய சாதார தீக்ஷையிலுண்டாகும் பாகுபாடும் அப்பாகுபாடுகளின் இயல்பும் கூறப்படும்.

## தீக்ஷையிலக்கணம்.

தீக்ஷையாவது சிவபெருமான் குருவாயிலாக நின்று அத்துவாக்களைச் சுத்திசெய்து மலமகற்றிச் சிவஞான முதிப்பித்து வீடடைவிக்கும் முறையாம்.

[1] தீக்ஷைபெறும் மாணாக்கர் ஞான மார்க்கத்திற்குரியவரும், கிரியாமார்க்கத்திற்குரியவரும் என, இரு

1, சிவஞானசித்தி – 8. 1. 6.

வகைப்படுவர். இருதிறத்தவரும் உத்தமர் மத்திமர் அதமர் எனத் தனித்தனி முத்திறப்படுவர் அவருள் கற்றறிந்து சரியையாதி ஒழுக்க நெறியில் நிற்பவர் உத்தமர். கற்றறிந்தும் ஒழுக்க நெறியில் நில்லாதவர் மத்திமர். கற்றறியாமையும் ஒழுக்கநெறி நில்லாமையு முடையவர் அதமர். இத்தகையோருக்கு அவரவர் பக்குவத்திற்கேற்ப ஞானதீக்ஷை கிரியாதீக்ஷை என்னும் இரண்டனுள் ஒன்றைச் சிவபெருமான் குருவாயிலாக நின்று செய்தருளுவர்.

மாணுக்கனது சஞ்சிதவினை குருவின் திருநோக்காலும் அத்துவசுத்தியாலும் அழியும். பிராரத்தம் உடலோடழியும், ஆகாமியமும் ஆணவமும் ஞானத்தாலும் சிவோகம் பாவனையாலும் அழியும் ஆதலால் வினைநீக்கத்திற்குக் குருவும் தீக்ஷையும் இன்றியமையாது வேண்டப்படும். தீக்ஷை மாணுக்கனது பக்குவமும் ஆற்றலும் நோக்கிப் பலவகையாக அருளப்படுவதாம்.

சகலருக்குத் தீக்ஷை செய்து பாசத்தைக் கெடுக்கும் முறையாவது திருநோக்கம், பரிசம், வாக்கு, மானதம், நூலுபதேசம், யோகம், ஔத்திரி முதலாகப் பலவகைப்படும்.

### நயன தீக்ஷை.

மீன் தனது சினையைக் கண்ணுலே நோக்கி நின்று குஞ்சாக்குவதுபோலக் குரு தனது கிருபா நோக்கத்தால் மாணுக்கனது சஞ்சித வினையைக்கெடுத்தல் **நயனதீக்ஷை** எனப்படும். இது சட்சுதீக்ஷை எனவும் கூறப்படும்.

### பரிச தீக்ஷை.

கோழி முட்டையின்மேல் அடைகிடந்து பக்குவ நோக்கி முட்டையைப் பரிசித்துக் குஞ்சை வெளிப்படுத்துவதுபோல, ஆசிரியன் தனது கையைச் சீடனது தலையில் வைத்து மலத்தை நீக்குதல் **பரிசதீக்ஷை**எனப்படும்.

**வாசக தீக்ஷை**

மாணுக்கனுடைய வருணத்திற்கும் ஆச்சிரமத்திற்கும் ஏற்றவாறு பஞ்சாக்ஷரமந்திரத்தை உபதேசித்தல் **வாசக தீக்ஷை** எனப்படும்.

**மானத தீக்ஷை.**

ஆமை தன் முட்டையைத் தான் நினைப்பதனுல் சிசு உற்பத்தியாதல்போல, ஆசாரியன் சீடனைத் தனது அருளுருவாய்ப் பாவித்து மாயாமலத்தை நீக்குதல் **மானத தீக்ஷை** எனப்படும். இது பாவனை எனவும் படும்.

**சாத்திர தீக்ஷை.**

பதி பசு பாசங்களின் இலக்கணங்களையும் பசு பாசத்தினீங்கி முத்தியடையும் முறைமையையும் நூல்வழியாகப் போதிப்பது **சாத்திரதீக்ஷை** எனப்படும்.

**யோக தீக்ஷை.**

நிராதார சிவயோகத்தை அப்பியாசம் பண்ணும்படி உபதேசித்தல் **யோகதீக்ஷையாம்.** [1]

**ஔத்திரி தீக்ஷை**

[2] ஔத்திரி ஓமத்தோடுகூடச் செய்வது. ஔத்திரி தீக்ஷை தொகையால் ஒன்றும், கிரியாவதி ஞானவதி என வகையால் இரண்டும், கிரியாவதி சபீசதீக்ஷை கிரியாவதி நிர்ப்பீசதீக்ஷை ஞானவதி சபீசதீக்ஷை ஞானவதி நிர்ப்பீசதீக்ஷை என விரியால் நான்குமாம்.

கிரியாவதி ஞானவதி என்னும் இரண்டும் தனித்தனி சமயதீக்ஷை, விசேஷதீக்ஷை, நிர்வாணதீக்ஷை, என மூன்று வகைப்படும்.

**கிரியாவதி தீக்ஷை.**

இந்த ஔத்திரி தீக்ஷை கிரியாவதி ஞானவதி என இருதிறப்படும். கிரியாவதியாவது: குண்டம் மண்டலம்

---

1, நயன தீக்ஷை முதலிய இவ்வறுவகைத் தீக்ஷையும் ஔத்திரி தீக்ஷைக்கு அருகரல்லாதவருக்குப் பண்ணப்படுவன எனவும், ஔத்திரிக்கு அங்கம் எனவும் அறிக.

2. ஹோத்திரம் — ஓமம்.

அங்கி நெய்சுருக்கு சுருவம்முதலிய அனைத்தும் புறம்பே அமைத்துக்கொண்டு அக்கிரியையைப் புறம்பே செய்து சீடனது பாசத்தைக் கெடுக்குந்தீக்ஷையாம்.

### ஞானவதி தீக்ஷை.

ஞானவதியாவது குண்டம் மண்டலம் முதலியவைக ளெல்லாம் மனத்தாற் கற்பித்துக் கொண்டு, விதிப்படி அகத்தே ஆகுதி முதலிய கிரியை செய்து சீடனது பாசத் தைக் கெடுக்குந் தீக்ஷையாம்.

### நிர்ப்பீச தீக்ஷை.

நிர்ப்பீச தீக்ஷை பெறுதற்கு உரியவர் சமயாசாரங் களை அநுட்டிக்கும் ஆற்றலும் அறிவும் இல்லாதவர்க ளாகிய பாலரும், அறிவில்லாதவரும், வயதில் முதிர்ந் தவர்களும். பெண்களும், போகாநுபவம் மிகுதியுமுடை யவரும், நோயாளருமாகிய இவர்கள் முதலாயினோர் நிர்ப்பீசதீக்ஷை மந்திரத்துக்கு மூலமாகிய பீசாக்ஷர மின்றி மந்திரத்தை மாத்திரம் செபிக்கும்படி உபதேசித் தலாம். [1]

நிர்ப்பீச முறைப்படி சமயதீக்ஷை விசேடதீக்ஷை நிர் வாணதீக்ஷை பெற்ற சமயி புத்திரன் என்பவர்களுக்கு ஆசாரியனால் நித்திய கன்மத்தின் மாத்திரம் அதிகாரம் கொடுத்து, நைமித்திய கன்மத்தும் காமிய கன்மத்தும் அதிகாரம் கொடாதிருக்கப்படும். நைமித்திகத்தும் காமி யத்தும் அதிகாரம் இல்லாமையினாலே இத்தீக்ஷை நிரதி காரம் எனவும் சொல்லப்படும். இவர்களுக்குத் தமது ஆன்மார்த்தத்திலன்றிப் பரார்த்தத்தில் அதிகாரம் இல்லை.

**சமயதீக்ஷையாவது:** சமயத்திற் பிரவேசிக்கச் செய் யுந் தீக்ஷை. ஆதலின், இத்தீக்ஷை பெற்றோர் சமயி

---

1. நிர்ப்பீசதீக்ஷை பெற்றவர் தாம் சாதித்த சாதனையின் பயனால் இப்பிறவியிலேனும் மறுபிறவியிலேனும் சபீசதீக்ஷை பெற் றுச் சரியை கிரியை யோகங்களை அநுட்டித்து ஞானத்தால் முத்தி யடையும் பேற்றைப் பெறுவார்கள்.

எனப்படுவர். இவர் சந்தியாவந்தன மேனும், சந்தியா வந்தனம் சிவாலயப்பணி என்னும் இரண்டேனும் அநுட்டிப்பவர்.

**விசேஷதீக்ஷையாவது:** சமயப் பிரவேசஞ் செய்தவருக்குச் சிவாகம விதிப்படி சிவபூசை முதலிய ஆராதனைகள் செய்யும்படி அதிகாரங் கொடுத்தலாம். ஆராதித்தலின் இவர் புத்திரர் எனப்படுவர், [1]

**நிர்வாணதீக்ஷையாவது:** அத்துவசுத்திசெய்து பாசங்களை அறவேநீக்கிச் சிவபெருமான் திருவடியை அடையும்படி செய்யுந் தீக்ஷையாம். இந்த நிர்வாணதீக்ஷை [2] அசத்தியோ நிர்வாணம் எனவும் சத்தியோ நிர்வாணம் எனவும் இருவகைப்படும். அசத்தியோ நிர்வாணம் தேகாந்தத்தின் முத்தியைப் பயப்பதாம். சத்தியோ நிர்வாணம் தீக்ஷைசெய்த அப்பொழுதே வீடுபேற்றைப் பயப்பதாம்.

### [3] சபீச தீக்ஷை.

**சபீசதீக்ஷையாவது:** மலபரிபாகத்தோடுகூடக் கற்றறிந்து ஒழுக்கநெறியில் வழுவாது நிற்கும் ஆற்றல் மிக்குடைய உத்தமராயினருக்குச் செய்யப்படுவதாம். இத்தீக்ஷை மந்திரத்துக்கு மூலமாகிய பீசாக்ஷரத்தோடு மந்திரத்தைச் செபிக்கும்படி உபதேசிக்கப்படுவதாம்.

சபீச தீக்ஷை, சமயம் விசேடம் நிர்வாணம் ஆசாரியாபிஷேகம் என நான்குவகைப்படும். அவற்றுள் சமயதீக்ஷை விசேஷதீக்ஷை, நிர்வாணதீக்ஷை என்னும் மூன்று தீக்ஷையும் பெற்றவர் சாதகர் எனப்படுவர். அம்மூன்றனோடு அபிஷேகமும் பெற்றவர் ஆசாரியர் எனப்படுவர். இம்

---

1. புத்திரர் சாமானிய புத்திரர். விசேடபுத்திரர் என இருவகைப்படுவர் சமயதீக்ஷையும் விசேஷதீக்ஷையும் மாத்திரம் பெற்றவர் சாமானிய புத்திரர். அவ்விரண்டனோடு நிருவாண தீக்ஷையும் பெற்றுச் சாதகாபிஷேகம் இல்லாதிருப்பவர் விசேடபுத்திரர்.

2. நிர்வாணம் – முத்தி, சத்ய – உடனே.

3. சபீசம் — பீசத்தோடு கூடியது. பீசம் — மூலம்.

முறைப்படி தீக்ஷை பெற்றோருக்கு [1] நித்தியம், நைமித்திகம், காமியம் என்னும் மூன்றினும் அதிகாரங் கொடுக்கப்படும். இவ்வாறு செய்தலால் இது சாதிகாரதீக்ஷை எனவும் பெயர்பெறும். அபிஷேகம் பெற்ற குருவுக்கு ஆன்மார்த்தம் பரார்த்தம் இரண்டினும் தீக்ஷை பிரதிட்டை முதலிய சகல கிரியைகளிலும் பூரண அதிகாரமுண்டு.

## [2] அத்துவசுத்தி

பரமசிவனார் குருமூர்த்தியை அதிட்டித்து நின்று. சீடனது பக்குவத்திற்கேற்ப கிரியாவதி தீக்ஷையினாலாதல் ஞானவதிதீக்ஷையினாலாதல், அத்துவசுத்தி பண்ணி, மலங்களை யொழித்து எங்கும் வியாபகமான சிவம் பிரகாசித்தற்பொருட்டு ஞானத்தை உதிக்கச் செய்து பிறவியை ஒழித்தருளுவர். இது நிர்வாண தீக்ஷையெனப்படும்.

இவ்வாறு சுத்திசெய்யநின்ற அத்துவாக்கள் மந்திரங்களும், பதங்களும், வன்னங்களும், புவனங்களும், தத்துவங்களும், கலைகளும் என அறுவகைப்படும், அவற்றுள் மந்திரங்கள் பதினொன்றும், பதங்கள் எண்பத்தொன்றும், அக்ஷரங்கள் ஐம்பத் தொன்றும், புவனங்கள் இருநூற்

---

1. ஸ்நானம்பண்ணித் தர்ப்பணஞ்செய்து, சிவபூசைசெய்து அக்கினிகார்யஞ் செய்தல் நித்தியம்; பிரதிட்டை தீக்ஷை ஆகமங்களை விரித்துரைத்தல் முதலியன நைமித்திகம்: சித்திபேதங்களை விரும்பி விசேஷமாகச் சிவபூசை செய்தலும். மந்திரங்களைச் செபம் பண்ணுதலும் காமிய கர்மங்களாம்.

2. மந்திரம் முதலிய ஆறும் ஆன்மாக்களுக்குக் கன்மம் ஏறுதற்கும் கன்மம் நீங்கித் திருவடி அடைதற்கும் வழியாயிருத்தலின் அத்துவா எனப்படும். அத்துவா — வழி. அத்துவாக்கள் சொற்பிரபஞ்சம் பொருட்பிரபஞ்சம் என இருவகைப்படும். அவற்றுள் மந்திரம் பதம் வன்னம் என்னும் மூன்றும் சொற்பிரபஞ்சம். புவனம் தத்துவம் கலை என்னும் மூன்றும் பொருட்பிரபஞ்சம்.

றிருபத்துநான்கும், தத்துவங்கள் முப்பத்தாறும்; கலைகள் ஐந்துமாம். [1]

அத்துவசுத்தி செய்வது எவ்வாறெனில்; மந்திரங்கள், பதங்கள், வன்னங்கள், புவனங்கள், தத்துவங்கள், கலைகள் என்னும் ஆறத்துவாக்களுள் மந்திரம் பதத்திலும், பதம் வன்னத்திலும், வன்னம் புவனத்திலும், புவனம் தத்துவத்திலும், தத்துவம் கலையிலும் அடங்க ஒடுங்கிக் கலையைத் திரோதானசத்தியிலும், திரோதானசத்தியைச் சிவத்திலும் அடங்குமாறு ஒடுக்குவதாம்.

அத்துவசுத்தியாவது ஆறத்துவாக்களிலும் கட்டப்பட்டிருக்கின்ற போகங்களையெல்லாம் ஏககாலத்திலே புசிப்பித்துத் தொலைத்து மோக்ஷத்தைக் கொடுத்தலாம்.

## அத்துவசுத்தியின் சிறப்பு.

கன்மங்கள் யாவும் அத்துவாவின் வழியாக வருதலின் அத்துவசுத்தி சிறந்ததாம்.

ஆன்மாக்கள் மனம் வாக்குக் காயம் என்னும் முத்திறத்தாற் செய்யுங் கன்மங்களுக்குத் துணைக்காரணமாய்

---

1. தத்துவ மாறுறு தன்மனு வேழ்கோடி
மெய்த்தகு வன்னமைம் பானொன்று மேதினி
ஒத்திரு நூற்றிரு பானன்கெண் பானொன்று
வைத்த பதங்கலையோ ரைந்தும் வந்ததே

எனத் திருமந்திரம் கூறும். மனு (மந்திரம்) ஏழ்கோடியென்று பதினொரு மந்திரங்களின் அந்தங்களைக் கூறினர். அவை சுவாஹா நம; வஷட். வௌஷட், சுவதா, ஹூம், பட் என்பன. மந்திரம் முதலிய ஐந்து அத்துவாக்களும் மனம் வாக்குக் காயங்களாகவும் கலை இவற்றைச் செலுத்தும் சத்திவடிவமாகவும் நின்று கன்மம் ஈட்டப்படுதலின், அத்துவாக்கள் கன்மம் ஈட்டுதற்குவழியாதலும் மனம் வாக்குக் காயங்களினாற் கடவுளைத்தியானித்துத் துதித்து வணங்கி முத்தியடைதற்கு வழிகளாயிருத்தலின் அவை பரகதி அடைதற்கு வழியாதலும் காண்க.

நிற்பது அத்துவாக்கள் ஆறுமேயாம். இவ்வாறத்துவா வாகும் வழியாற்செய்த கன்மங்களைப் பக்குவமான முறையில் அநுபவிக்கும்படி செய்து தொலைத்து, அவ்வாறு கன்மத்தை அனுபவிக்கச் செய்தலால், ஆணவமலத்தைத் தேயும்படி செய்து, அதனுல் அவ்வுயிர்களுக்கு அரிய பக்குவமுண்டாகவே சிவபெருமான் ஆசாரியமூர்த்தியாய் எழுந்தருளிவந்து, அத்துவசோதனையினுலே சஞ்சித கன்மப்பயனை புசியாதபடி நாசமாக்கி, உடலுக்கமைக்கப் பட்ட பிராரத்தகன்மத்தைப் புசிப்பித்து இல்லையாக்கி, ஆகாமிய வினையையும் அதற்கேதுவான ஆணவமலத்தையும் ஞானத்தினுலே போக்கியருளுவர். இதனுல் அத்துவசுத்தியின் சிறப்பு உணரத்தக்கது.[1]

சைவசமயிகள் ஆசாரியரை அடைந்து, தத்தம் வருணத்துக்கும் பரிபக்குவத்துக்கும் ஏற்ற தீக்ஷை பெற்றுத் தத்தமக்கியன்ற செபம் தியானம் முதலியவைகளைக் கைக்கொண்டொழுகுதல் வேண்டும்.

சிவபிரானையொழித்து மற்ெருருவருக்கும் பாசத்தைப் போக்க வல்லமையின்மையால், ஆதாரமாத்திரமாகவிருக்கும் குருவை அதிட்டித்து அந்தப் பரமசிவனே பாசமோசனஞ் செய்கின்ருர். சிவபிரானையும் சிவசாஸ்திரத்தையும் குருவையும் பக்திபண்ணிப் பூசிக்க வேண்டும். அப்படிப் பூசிப்பதனுற் பலனுண்டாம். சகல தேவதா சொரூபமாயுள்ளவர் சிவபெருமான், சகல சாஸ்திர சொரூபமாயுள்ளவர் ஆசாரியர். ஆதலால் எல்லாவிதத்திலும் குருவின் ஆஞ்ஞையைச் சிரசில் வகிக்கவேண்டும்.

## ஞானத்தைப் பெறுதற்குரிய பருவம் அடையும் முறை

ஆன்மாக்கள் தங்கள் பக்குவத்திற்கேற்பப் படிமுறையினுலே பிறவிதோறும் தூலமாகியபுறச் சமயங்களினின்று

---

1. சிவஞானசித்தியார் 8. சூ திருவிருத்தம் 10. இவற்றின் விபரமெல்லாம் தத்துவப்பிரகாசம், சிவஞானசித்தியார், சித்தாந்தசாராவளி வியாக்கியானம் முதலிய நூல்களிற் காண்க.

ஒழுகியும், அவ்வொழுக்கத்தின் முதிர்ச்சியால் அப்புறச் சமயத்தினின்றும் நீங்கி, சூக்குமமாகிய அகச்சமயங்களிற் புகுந்து அந்நூல்களின்வழியே ஒழுகியும், அப்புண்ணிய விசேஷங்களினுலே சைவசமயத்தை அடைவார்கள். சைவசமயத்தை அடைந்து சரியை கிரியை யோகங்களை முறையாய் அநுட்டித்து முற்றியபின் ஞானத்தைப் பெற்று அந்தச் சிவஞானம் வாயிலாகச் சிவபெருமான் திருவடிகளைச் சேர்வர்.[1]

## சமயாதீதம்

## சைவசித்தாந்தம்.

### நால்வகைச்சமயம்

[2] சமயமானது ஆன்மாக்கள் தத்தம் பக்குவத்திற் கேற்ப அறிவுவிளக்கம் பெற்று உறுதியெய்தி இன்ப வாழ்வு அடைவதற்குச் சாதனமாயுள்ளது.

உலகத்திலே பல சமயங்கள் உள்ளன. அவை புறப் புறச் சமயமும், புறச்சமயமும், அகப்புறச் சமயமும், அகச்சமயமும்என நான்குவகைப்படும்,

### புறப்புறச்சமயம்

அவற்றுள், புறப்புறச்சமயம் உலோகாயதம், [3] நால் வகைப்பௌருத்தம் ஆருகதம் [4] என அறுவகைப்படும்.

### புறச்சமயம்

புறச்சமயம் தருக்கம், மீமாஞ்சை, ஏகான்மவாதம், சாங்கியம், யோகம், பாஞ்சராத்திரம் என அறுவகைப் படும்.

1 சிவஞானசித்தியார் 8–2–11. சிவநெறிப்பிரகாசம் செய்யுள் 160–154. சிவதருமோத்தரம் சிவஞானயோகவியல் 8–9.

2 சமயம், மார்க்கம், மதம் என்பன பரியாயம்.

3 நால்வகைப் பௌத்தம் மாத்தியமிகம், யோகசாரம், சௌராந்திகம், வைபாடிகம் என்பன.

4 ஆருகதம் – சமணம்

### அகப்புறச்சமயம்.

அகப்புறச்சமயம், பாசுபதம், மாவிரதம், காபாலம், வாமம், வைரவம், ஐக்கியவாதசைவம் என ஆறுவகைப் படும்.

### அகச்சமயம

அகச்சமயம் பாடாணவாதசைவம், பேதவாத சைவம், சிவசமவாதசைவம், சிவசங்கிராந்தவாதசைவம், ஈசுவரவவிகாரவாத சைவம், சிவாத்துவித சைவம் என அறுவகைப்படும். பாடாணவாதத்திற்கும் பேத வாதத்திற்கும் தம்முள் வேறுபாடு சிறிதாதலினுலே அவ் விரண்டனையும் ஒன்ருகவைத்தெண்ணிச் சுத்தசைவத் தையும் உடன்கூட்டி அகச்சமயம் ஆறெனக்கோடலு மொன்று.

ஈண்டுக்கூருத சமயங்களும் கூறியவற்றின் பகுதியவாய் இவற்றுள்ளே அடங்குவனவாம்,

[1] இந்நால்வகைச் சமயங்களையும் கடந்து தலையாய்நிற் பது சைவசித்தாந்த சமயமேயாம்.[2]

## வேதாகமங்களில்எல்லாச்சமய நூற்பொருளும் அடங்கிக்காணப்படும்

சகல சமய சாத்திரங்களும் வேதசிவாகமங்களிலே சுருக்கிக் கூறப்பட்டுள்ளன. வேதாகமங்களின் உண் மைப்பொருளை உணரமாட்டாத உருத்திரர்களும், தேவர்களும், முனிவர்களும். அவ்வேதாகமங்களுள் சில பொருள்களைத் தத்தம் அறிவுக்கெட்டியவாறு பாசுபதம், பாஞ்சராத்திரம், சாங்கியம், மீமாஞ்சை, பிடகம், உலோகாயதம் முதலிய நூல்களாகத் தனித்தனி விரித்து உட்சமய புறச்சமய சாத்திரங்களாகச் செய்தார்கள். இந்நூல்கள் அபக்குவரான ஆன்மாக்கள் தத்தம் கன்மத்

---

1 இவையெல்லாம் அகம் புறம் என இரண்டாயும் அடங்கும்.
2 சித்தாந்தம் — முடிந்தமுடிபு.

திற்கேற்ப ஒழுகிப் படிமுறையாக உண்மைப் பொருளை உணர்தற்குக் கருவியாயுள்ளன. ஆதலால் அவர்கள் அங்ஙனம் செய்ததும் முதல்வனது அருளேயாம். இந்நூல்கள் பூருவபக்க நூல்களாம்.

ஒன்றோடொன்றொவ்வாத பலசமயப் பொருள்களை வேதாகமங்களிலே முதல்வன் கூறியது என்னையெனில்; அதிகாரபேதம்பற்றியென்பதாம்.[1]

ஒருபாடசாலையிலே படிக்கும் மாணுக்கர் அறிவின் தீவிரமந்த விளக்க பேதத்தினுல், பலவேறுபாடு உடையவராய் இருப்பர். ஆசிரியர் அவரைப் பலவகுப்பினராகப் பிரித்து, அவரவர்க்குத் தக்கபடி வித்தையைப்போதிப்பர். அதுபோல ஆன்மாக்கள் பக்குவபேதங் காரணமாகத் தீவிரமாகவும். மந்தமாகவும் விளங்கும் அறிவின் தாரதம்மியமுடையவராய் இருப்பர். ஆதலினுல் அவ்வவர்களுக்கு ஏற்கும்படி நுண்பொருளுடையனவாகவும் பருப்பொருளுடையனவாகவும் பலசமயப் பொருள்களை வேதாகமங்களிலே கூறியருளினுர்.

முன்னர் அதிதாமதர்களாய், மந்தமதிகளாய், உலக இன்பமே பெரும்பயன் எனவும், தமக்குப் புறம்பாகிய புத்திராதிகளையே ஆன்மா எனவும் அபிமானிக்கும் அதிகாரிகளைக் குறித்துத் துக்கம் முதலியவற்றோடு விரவியிருத்தலால், உலக இன்பமே பேருறுதிப்பயன் அல்லஎனவும் புத்திராதிகள் ஆன்மா அல்ல எனவும் உணர்த்தி, அவர்களுக்குப் புத்தி நிச்சயமாதற்பொருட்டு நுண்பொருள் உணரும் வன்மையின்மையால், தூலதேகத்தையே ஆன்மா எனவும் அதனழிவையே பேருறுதிப்பயன் என்வும் உபதேசிக்கின்றனர். பின்னர் அதிற்கூறிய தருமானுட்டானத்திலே ஒழுகிச் சற்றே சித்தசுத்தியடைந்து, உடம்பே ஆன்மா அதனழிவே உறுதிப்பயன் என்பவற்

1 வேதாகாமங்களிலே அடங்காத பொருளொன்றனை எடுத்துச் சொல்லும் நூலொன்றுமில்லை ; உண்டென்று பிணங்கும் பேதையர்க்கு உத்தரம் சொல்லி அறிவுறுத்த இயலாது என அருணந்தி சிவாசாரியசுவாமிகளும் கூறுகின்றனர்.

றில் ஐயப்பாடு தோன்றிய அதிகாரிகளுக்கு, உடம்பு முதலியன ஆன்மா அல்லஎன மறுத்தற்பொருட்டுப் புத்த சாத்திரத்தை உபதேசிக்கின்றனர். இவ்வாறே மேலும் மேலும் சோபானக்கிரமமாக உபதேசித்தலால் மாறுபாடின்மை உணர்ந்து கொள்ளப்படும்.

முன்முன் உள்ள சமயங்களால், பின்பின் உள்ள சமயங்கள் வாதிக்கப்படும். வாதிக்கப்படுவது பூருவபக்ஷமும் வாதிப்பது சித்தாந்தமுமாம். சைவசித்தாந்தம் மற்ற எச்சமயங்களையும் பூருவபக்ஷம்பண்ணி நிற்றலாலும் அதனைப் பூருவபக்ஷம் பண்ணுதற்கு ஒரு சமயம் இன்மையாலும் அதுவே **சித்தாந்தம்** எனப்படும் 'சித்தாந்தமே சித்தாந்தம்; அவைக்கு வேறுனவை பூருவபக்ஷங்கள்'' என்று இரத்தினத்திரயத்திற் கூறப்பட்டது.

## முத்திநிலை

சித்தாந்த சைவமல்லாத ஏனைச்சமயநூலாருக்கும் முத்திகளுளவாம். அம்முத்திகள் படிமுறையால் நிலம் முதல் நாதமீருகிய முப்பத்தாறு தத்துவங்களில் ஒவ்வொன்றிலே நிலைபெறுவனவாம்.

லோகாயதம்முதல் ஐக்கியவாத சைவம் இறுதியாகிய மூவகைச் சமயத் தெய்வங்கள் எல்லாம் பிருதிவி முதல் அசுத்தமாயா தத்துவமிறுதியாயுள்ள ஒவ்வொரு தத்துவங்களிலே நிலைபெறுவர், அகச்சமயத் தெய்வமாய் நின்ற அதிகார போகலய சிவபேதங்கள் சுத்தவித்தியா தத்துவ முதலிய சிவதத்துவம் ஐந்தனுள் ஒவ்வொன்றிலே நிலைபெறுவர். அவ்வத்தெய்வங்கள் நிலைபெறும் தத்துவமே அவ்வச்சமயங்களுக்கு முத்திநிலையாகும்.

## உண்மை முத்தி

[1] வேதாகம நூலுண்மையின்படி சிவபெருமானரது திருவடியைச் சேரும் உண்மை முத்தியாவது யாதெனில்;

---

1 சிவஞானசித்தியார் 8—2—12.

ஆன்மாவுஞ் சிவமும் அநாதியே பிரிப்பின்றியுள்ளன. அப்பிரிப்பில்லாமை தோன்ருதபடி, அநாதியே ஆணவ மலம் ஆன்மாவின் அறிவைத் தடுத்து நிற்புதால், அந்த மலவுபாதியினுலே பொய்யாகிய போகங்களை மெய்யென மயங்கிநின்று சிவாஅநுக்கிரகத்தினுல் அம்மயக்கம் நீங்கக் கண்ணினது காசம் நீங்கியவிடத்து, அக்கண்காட்சியைப் பெற்றற்போல, அம்மயக்கம் நீங்கியவிடத்துச் சிவபெருமானுடைய பிரிப்பில்லாமையைச் சிவஞானத்தாற்கண்டு சிவானந்த பரவசத்தினுலே [1] முப்பத்தாறு தத்துவங்களையும் கடந்த சிவபெருமான் [2] திருவடியை அணைதலேயாம்.

## வேதாகமங்களே சாஸ்திரம்

## சித்தாந்தசைவமே சமயம்

கண்ணில்லாதவர் பலர் கூடிக்கொண்டு யானையைக் கையாற்றடவித் தத்தமக்கெய்திய உறுப்புக்களின் இலக்கணமே யானையின் இலக்கணமெனச் சொல்லி முரண் பட்டவிடத்து யானையின் இலக்கணம் முழுவதுங்கண்ட கண்ணுள்ளாறெருவன், இக்கண்ணில்லாதவர்கள் கூறும் இலக்கணங்கள் எல்லாம் தாங்கண்ட இலக்கணங்களில் அடங்கிய ஒவ்வோர் இலக்கணம் என்றும் அவ்விலக்க

---

1 அயன் அரிமுதலியோர் இருபத்தைந்து தத்துவ எல்லையுள் அடங்கினவர். சிவபெருமான் முப்பத்தாறு தத்துவ வரம் பைக் கடந்தவர். கந்தபுராணம்:-"அறுவகை யைந்து மாறு மாகிய வரைப்பின் மேலா-மிறைவனே போற்றி போற்றி"

2 திருவடி என்பது இறைவனுடைய சித்துத்தன்மை. அது, "அடியெனு மதுவும் அருளெனு மதுவும் அறைந்திடில் நிர்க் குண நிறைவு"; எனத் தாயுமானசுவாமிகள் கூறியவாற்றுல் உணரப்படும். அடைதல் என்பதனுல் வேருகப் பிரிந்திருந்து அடைந்ததென்பது பொருளன்று. தன்னுடைய பிள்ளையான வன் வியாதினுலே மிகவும் பீடிக்கப்பட்டுக் குணமான பொழுது இந்தப் பிள்ளையை இப்பொழுதே பெற்றேன் என்பதுபோல, யான் எனது என்னும் போதத்தினுல் சிவ னேடு பிரிப்பின்றி நிற்றல் விளங்காதிருந்து அப்போத அறுதியில் அச்சிவாநுபவம் விளங்கியதை அடைந்ததென்று சொல்லியவாறு.

ணங்களும் கொள்ளத்தக்கனவே என்றும் அறிவன். அது போல இந்தச் சமயம் பொருந்தும், அந்தச்சமயம்பொருந் தாது என்னும் பிணக்கின்றிப் படிமுறையால் இச்சமயம் அனைத்தும் அங்கமாகத் தன்னிடத்தே காணப்படுகின்ற சமயமே முதன்மையான சமயமாம். அச்சமய சாத்தி ரமே சாத்திரமாம். ஏனைச் சமயங்களோடு பிணக்கின் மையே அதன் இலக்கணமாம்.

அச்சாத்திரம் எதுவெனில், முற்றறிவுடைய சிவபெரு மான் ஆன்மாக்கள்பொருட்டு அருளிச்செய்த வேதாக மங்களே அச்சாத்திரங்களாம். அவ்வேதாகமங்களால் சிறந்தெடுத்துக் கூறப்படும் சமயமே உண்மையான சமய மாம். அவ்வுண்மைச் சமயம் பிறப்பிறப்பற்ற சிவபிரா னையே தெய்வமெனக் கொள்ளுதலானும், அச்சமயசாத் திரத்தைப் பூருவபக்ஷம் பண்ணுதற்கு வேறுசாத்திரம் இல்லாமையானும் அச்சமயம் சித்தாந்தசைவம் எனக் கூறப்படும். அவ்வேதாகமம் இரண்டும் சிவபிரானது திருவருளாற் செய்யப்பட்டமையின் அவரருளில் அடங் கும்.

**சிவஞானசித்தியார்**

ஓதுசம யங்கள்பொரு ளுணரு நூல்க
ளொன்றோடொன் றொவ்வாம லுளபலவு மிவற்றுள்
யாதுசம யம்பொருணூல் யாதிங் கென்னி
னிதுவாகு மதுவல்ல தெனும்பிணக்க தின்றி
நீதியினா லிவையெல்லா மோரிடத்தே காண
நின்றதியா தொருசமய மதுசமயம் பொருணூ
லாதலினா லிவையெல்லா மருமறையா கமத்தே
யடங்கியிடு மவையிரண்டு மரனடிக்கீ ழடங்கும்.

## வேத சிவாகமத்தோற்றம்

வேதாகமங்களிரண்டும் எல்லா நூல்களுக்கும் முதனூலாகி அநாதிமுத்தராகிய பரமசிவனால் [1]ஆன்மாக்

1. ''வேதமுத னூல்கள் பதிபசுபா சம்விளங்க
வோதியுணர்த் துஞ்சிற் றுயிர்க்கு.''—சைவசமயநெறி.
''அநாதியே யமலனாய வறிவனூ லாக மந்தான்''
—சித்தியார் அளவை.

கள்பொருட்டு அருளிச்செய்யப்பட்ட [1]நூல்களாம், ஏனைய நூல்களெல்லாம் இவ்வேதாகமங்களினின்றும் விரிந்த நூல்களாகலின், இவ்விருவகை நூலுமே நூலென்று சிறப்பித்துக் கூறப்படுவனவாம்.

### திருமந்திரம்

முதலாகும் வேத முழுதா கமமாகப்
பதியான வீசன் பகர்ந்த திரண்டு.

இருக்கு, யசுர், சாமம், அதர்வணம் என்னும் வேதங்கள் நான்கும் சிவபெருமானுடைய திருமுகங்கள் நான்கினின்றும் தோன்றியன. ஆகமங்கள் இருபத்தெட்டும் ஐந்தாவதாகிய மேல்முகத்திற்றோற்றியன, வேதம் என்பது மேலான பொருள்களை அறிதற்குக் கருவிஎனப் பொருள்படும்- ஆகமம் என்பது பரமாப்தரினின்றும் வந்தது எனப் பொருள்படும். ஆகமம் என்னும் மொழியில் ஆ என்பது ஞானமும், கவ்வென்பது மோக்ஷமும், மவ்வென்பது மலநாசமுமாம், ஆகவே ஆன்மாக்களது மலத்தை நாசம்பண்ணி, ஞானத்தையுதிப்பித்து மோட்சத்தைக் கொடுப்பது பற்றி ஆகமம் எனப்பெயராயிற்று என்று கூறுதலுமாம். ஆகமங்கள் இருபத்தெட்டாவன: காமிகம், யோகஜம், சிந்தியம், காரணம், அசிதம், தீப்தம், சூக்குமம், சகச்சிரம், அம்சுமான், சுப்பிரபேதம், விஜஜம், நிச்சுவாசம், சுவாயம்புவம், ஆக்கினேயம், வீரம், ரௌரவம், மகுடம், விமலம், சந்திரஞானம், முகவிம்பம், புரோற்கீதம், லளிதம், சித்தம், சந்தானம், சர்வோக்தம், பாரமேசுவரம், கிரணம், வாதுளம் என்பனவாம்.

---

1. "வேதசிவாகமங்களல்லாமல், தேவர்களாலும் இருடிகளாலும் சொல்லப்பட்ட சாஸ்திரங்களெல்லாம் இந்த வேதசிவாகமங்களிலே ஏகதேசத்தை யெடுத்துக் கொண்டு தங்களுடைய பாசஞானத்தினாலே சொல்லப்பட்ட சாஸ்திரங்களாம்:

## உபதேசக் கிரமம்

இவ்விருபத்தெட்டாகமங்களுள், காமிகம் முதலிய ஐந்தாகமங்களும் சத்தியோசாதமுகத்தினின்றும் கௌசிக இருடியின் பொருட்டும், தீப்த முதலைந்தும் வாமதேவமுகத்தினின்றும் காசிப இருடியின் பொருட்டும், விஜயாகம முதலைந்தும் அகோரமுகத்தினின்றும், பாரத்துவாச இருடியின் பொருட்டும், இரௌரவாகமம் முதலைந்தும் தற்புருடமுகத்தினின்றும் கௌதம இருடியின் பொருட்டும், புரோற்கீதம் முதல் எட்டாகமங்களும் ஈசானமுகத்தினின்றும் அகத்திய இருடியின் பொருட்டுந் தோன்றின. அவ்வாகமங்களின் படியே அவரவர்களுக்குத் தீக்ஷையும் செய்யப்பட்டது.

மேலே காமிகம் முதலிய ஆகமங்கள் இருபத்தெட்டும் சதாசிவ மூர்த்தியினது ஈசான முகத்தினின்றும் தோன்றியனவாகக் கூறி, இங்கே சத்தியோசாதமுதலிய முகங்களினின்றும் காமிகமுதலிய ஐந்தும் பிறவுந்தோன்றியனவாகக் கூறியமை மலைவாம் பிறவெனின், ஆகாது; ஈசானமுதலிய ஒவ்வோர்முகங்களுக்கும் ஐவைந்து முகபேதங்கள் உள்ளன என்று காமிகாகமம் கூறுகின்றமையால், ஈசானமுக சம்பந்தமாகிய ஐந்து முகங்களினின்று காமிகம் முதல் வாதுளமிறுதியாகிய இருபத்தெட்டு ஆகமங்களும் தோன்றின என்று பெறப்படுதலால் முரணாமை தெளியப்படும்.

[1] இவ்வாகமங்களுள், முதற்பத்தும் விஞ்ஞானகலருட் பரமசிவனனுக்கிரகத்தைப் பெற்ற பிரணவர் முதலிய அணுசதாசிவர் பதின்மருக்கும் அருளிச்செய்யப்பட்டமையால், சிவபேதம் எனவும், ஏனைய பதினெட்டாகமங்களும், அநாதிருத்திரர் முதலிய பதினெட்டு உருத்தி

---

1. அந்த ஈசுர வாக்கியமானது பிரமாணமாகும்; அந்தப் பரமேசுவரன் பஞ்சமந்திரதநுவையுடைய சதாசிவனுய்ச் சிவபேதமான பத்தும் உருத்திரபேதமான பதினெட்டும் ஆகிய இருபத்தெட்டு ஆகமங்களையும் அருளினர் என்று பௌஷ்கராமம் பகரும். இதற்கு உமாபதி சிவாசாரியசுவாமிகள் விருத்தியுரையுங் காண்க.

ரர்களுக்கும் அருளிச் செய்யப்பட்டமையால், உருத்திர பேதம் எனவும் சொல்லப்படும். சிவபேதம் பத்தையும் கேட்டவர்ஒருவரிடத்தொருவராக ஒவ்வோராகமத்துக்கும் மும்மூன்று பேராய் அணுசதாசிவருட் டலைவராகிய பிர ணவர்முதன் முப்பதின்மராவர். உருத்திரபேதம் பதினெட் டையுங் கேட்டவர் ஒருவரிடத் தொருவராக ஒவ்வோராக மத்துக்கு இவ்விரண்டு பேராய், அநாதி ருத்திரர்முதன் முப்பத்தறுவராவர். இவ்வாறு மூலாகமங்களைக் கேட்ட வர் பிரணவராதி அறுபத்தறுவராவர் என்று சித்தாந்த சாராவளி செப்புகின்றது. அது,

அஞ்சன மேனி யரிவையோர் பாகத்த
னஞ்சொ டிருபத்து மூன்றுள வாகம
மஞ்சலி கூப்பி யறுபத் தறுவரும்
அஞ்சா முகத்தி லரும்பொருள் கேட்டதே.

எனத் திருமந்திரம் கூறுதலாலும் உணரப்படும்.

மேலும், இவ்வாகமங்கள் சதாசிவமூர்த்தியால் அநந் ததேவருக்கும், அநந்ததேவரால் ஸ்ரீ கண்டருக்கும், ஸ்ரீ கண்டரால் தேவர்களுக்கும், தேவர்களால், முனிவர் களுக்கும். முனிவர்களால் மனுடருக்கும், மனுடரால் மனுடருக்கும், குருபரம்பரையாய் உபதேசிக்கப்பட்டு, உலகத்திற் பரவுவனவாம். [1]

---

1, சிவஞானசித்தியார் பரபக்கத்தில், "ஆரியமா யறம் பொரு ளோடின்பம்வீ டெல்லா மறைந்துயிர்கட்கறிவுசெய லளிப்பதுநூ லந்நூல் — சூரியரா யுள்ளவர்களோத வோதிக் கொண்டு வரலான் முன்னே குற்றமின்றிச் — சீரியபே ரறிவுடையோன் செப்பவேண் டும்'' எனச் சகலாகம பண்டிதர் கூறியருளினர். இதற்குத் தத்து வப் பிரகாச சுவாமிகள் செய்த உரை:— வடமொழியாய், அறம் பொருள் இன்பம் வீடு என்னும் நான்குகாரியமுஞ் சொல்லி, ஆன் மாவுக்கு அறிவையுஞ் செயலையுங் கொடுப்பது வேதாகமங்கள். அவ் வேதாகமங்கள் பிரமாதிகள் ஓதுவிக்க, இருடிகளாலே ஓதப் பட்டு, அவர்கள் வழியாகத் தொன்று தொட்டு வருதலால், தவ றின்றி மிக்க பெரிய அறிவுடையவராலே சொல்ல வேண்டும்'' என்பதாம்.

### சிவஞான சித்தியார்

ஆரண மாக மங்க ளருளினு லுருவு கொண்டு
காரண னருளா னுகிற் கதிப்பவ ரில்லை யாகு
நாரணன் முதலா யுள்ள சுரர்நரர் நாகர்க் கெல்லாஞ்
சீரணி குருசந் தானச் செய்தியுஞ் சென்றி டாவே.

---

## ஆகமங்கள்
## தனித்தனி நான்கு பாதங்களையுடையன.

இவ்விருபத்தெட்டாகமங்களும் தனித்தனி சரியா பாதம், கிரியாபாதம், யோகபாதம் ஞானபாதம் என நான்கு பாதங்களை யுடையன.

இவற்றுள், சரியாபாதம் சமயாசாரம் முதலியவற்றையும், கிரியாபாதம் [1] சந்தியாவந்தனம், பூசை, செபம் ஓமம். பிரதிட்டை உற்சவம், பிராயச்சித்தம் முதலியவற்றையும், யோகபாதம் பிராணுயாமம் முதலிய அங்கங்களோடு கூடிய சிவயோக முதலியவற்றையும், ஞான பாதம் பதிபசுபாச லட்சணங்களையும் உபதேசிப்பனவாம்.

---

1, இவைகள் யாவும் சைவாகம விதிப்படியே நடைபெறத் தக்கன.

1. ''பொங்கு மாமறைப் புற்றிடங் கொண்டவர்
எங்கு மாகி யிருந்தவர் பூசனைக்
கங்கண் வேண்டு நிபந்தமா ராய்ந்துளான்.''
— பெரியபுராணம் திருவாரூர்ச் சிறப்பு.

2. ''எண்ணிலாகம மியம்பிய விறைவர் தாம் விரும்பும்
உண்மை யாவது பூசனை''

3. ''நீமொழிந்த வாகமத்தி னியல்பினுலுனை யருச்சனை
புரியப் — பொங்குகின்றதென் னுசை''
—திருக்குறிப்புத்தொண்டர்புராணம்.

4. ''எய்தியசீ ராகமத்தி லியம்பியபூ சனைக்கேற்பக்
கொய்தமல ரும்புனலு முதலான கொண்டணைந்தார்.''
—கண்ணப்பநாயனுர் புராணம்.

## வேதம் பொது; ஆகமம் சிறப்பு.

முதல்வனார் வேதம் ஆகமம் என்னும் இருவேறு வகைப்பட்டநூல் செய்தற்குக் காரணம் என்னையெனில்; அவர் பெருங் கருணையாளராதலின், நீதி நெறியில் நிற்கும் உலகோரும், ஞான நெறியில் நிற்கும் உயர்ந்தோரும் ஆகிய இருவரும் உய்தற் பொருட்டு முறையே வேதத்தையும் ஆகமத்தையும் அருளிச்செய்தார். அன்றியும் வேதத்திற்கூறப்படும் கன்மகாண்டத்துள், சிவார்ச்சனை செய்க; பிரதிட்டை செய்க என்றிவ்வாறு கூறி அவைகளைச் செய்யும் விதம் அவ்விடத்துக் கூறாமையினால் அவற்றைக் கூறுதற்காகவும், வேதத்திலே சூரியன் முதல் சிவபெருமான் ஈறாகவுள்ள தேவர்களுக்கும் பரத்துவம் கூறுதலால், அப்பலகடவுளருள்ளும் சிவனொருவருக்கே பரத்துவங் கூறுதற்பொருட்டும் ஆகமத்தை அருளிச்செய்தார். இதனால் வேதம் சூத்திரமும், ஆகமம் பாடியமும் போலாம், வேதம் பல தேவர்களுக்கும் பரத்துவங் கூறுதலால் பொது. சிவாகமம் சிவபெருமான் ஒருவரையே ஆராதிக்கச் சொல்லுகையினாற் சிறப்பு. வேத சிவாகமப்பொருட்கு அந்நியமாய் வேதத்தின் பூருவ பக்கப்பொருளைச் சொல்லும் நூல்களெல்லாம் பூருவபக்க நூலெனப்படும்.

[1] வேதத்தின் முடிவான பொருளைச்சொல்லும் சிவாகமம் சித்தாந்தம் எனப்படும்.

---

1, ''சைவசித்தாந்தம் வேதசாரமாயிருத்தலின்,, எனச் சுப்பிர பேதாகமமும், ''இந்தச்சித்தாந்தம்வேதசாரம்'' என மகுடாகமமும், ''வேதாந்தத்தெளிவாம் சைவசித்தாந்தத்திறன்'' எனச் சிவப்பிரகாசமும் கூறும், வேதமானது சிவபெருமானையே தனது இருதயத்துள் வைத்துக்காட்டுகிறது என்பதும், சிவனை அர்ச்சிப்பதும் அவனடியாரைப்பணிவதும் வேதங்களின் உள்ளுறைப் பொருள் என்பதும், சிவபெருமானே முழுமுதற்கடவுளென அவ்வேதங்கள் துணிந்து வந்திக்குமென்பதும் அறிஞர்களால் நாட்டப்பட்ட உண்மை. அது,

வேத வுள்ளுறை யாவன விரிபுனல் வேணி
நாதர் தம்மையு மவரடி யாரையு நயந்து
பாத வர்ச்சனை புரிவதும் பணிவது மென்றே
காத லாலவை யிரண்டுமே செய்கருத் துடையார்.

— திருநீலநக்கநாயனார் புராணம்.

என அருண்மொழித்தேவர் அருள்வாக்கானும் பிறவாற்றானும் உணரப்படும்.

## திருமந்திரம்

வேதமொ டாகம மெய்யா மிறைவனூல்
ஓதும் பொதுவுஞ் சிறப்புமென் றுன்னுக
நாத னுரையிவை நாடிலி ரண்டந்தம்
பேதம தென்னிற் பெரியோர்க் கபேதமே.

சிவாகமங்களுக்கு வழிநூல் இருநூற்றேழு உபாகமங்கள். சிவாகமங்களுக்குச் சார்புநூல் அட்டப்பிரகரணம் முதலியவைகள்.

சிவாகமத்தின் ஞானகாண்டப்பொருளைச் சுருக்கி இனிது விளக்குந் தமிழ்ச்சாத்திரங்கள்: திருவுந்தியார், திருக்களிற்றுப்படியார், சிவஞானபோதம், சிவஞானசித்தியார், இருபாவிருபது, உண்மைவிளக்கம், சிவப்பிரகாசம், திருவருட்பயன், வினுவெண்பா, போற்றிப்பஃறொடை, கொடிக்கவி, நெஞ்சுவிடுதூது, உண்மைநெறிவிளக்கம், சங்கற்பநிராகரணம் என்னும் பதினான்குமாம்.

வேதத்தின் ஞானகாண்டப்பொருளைச் சிவாகமத்துக்கு மாறுபடாவண்ணம் உள்ளபடி அறிவிக்குந் தமிழ் வேதங்கள், தேவாரம் திருவாசகம் திருவிசைப்பா முதலியவைகளாம்.

---

## சித்தாந்த முத்தியே முத்தி

சித்தாந்தமே முத்திக்கு நேர் வழியாம், சித்தாந்த நெறியில் நிற்கும் பக்குவான்மாக்களுக்கு எடுத்த சென்மமொன்றிலே சிவபெருமான் ஆசாரிய மூர்த்தியாய் எழுந்தருளிவந்து திருக்கண் நோக்கம் முதலிய தீக்ஷை செய்து, மலத்தைப்போக்கிச் சிவஞான சமுத்திரத்தில் மூழ்குவித்துச் சிவாநந்தம் மேலிடச் செய்து சீவன் முத்தராக்கி அப்பொழுதே மேல்வரும் செநநத்தை யொழித்து முத்தி முடிவாயிருக்கிற தம்முடைய பாதமலர்க்கீழ் வைத்தருளுவர்.

இத்துணைப்பெருமை பொருந்திய சித்தாந்தநெறி வீடு பேற்றுக்கு நேர்வழியென உபமன்னியுமுனிவர் அகத்திய முனிவர் முதலிய உயர்ந்தோரெல்லாம் வாயுசங்கிதை சிவகீதை முதலியவற்றில் எடுத்தோதவும், உலகத்தார் அதனைத் தெளியமாட்டாது துரபிமானங்கொண்டு தத் தமக்கு வேண்டியவாறே பித்தமுடிவாகிய பெரும் பித் தாற் பிதற்றிப் பிதற்றிய அப்பாவத்தால் பெரிய கொடு நரகில் வீழ்வர். ஈதென்ன மயக்கம்!

சைவ சித்தாந்த நெறியிற் பிறந்தும், பிற புன்னெறி களில் மயங்கிச் சென்று உழல்வோர் பிராந்திக்கு யாது கூறுவது. அன்னோர் தமக்குள்ள பொருளைத் தெளிந் தறிந்து அனுபவியாது பிறர் பொருளைப் பெறவிரும்பிய கயவரென அஞ்சி விலக்கப்படுவர்.

**திருவாசகம்** [1]

புற்றில்வா ளரவு மஞ்சேன் பொய்யர்தம் மெய்யு மஞ்சேன்
கற்றைவார் சடையெம் மண்ணல் கண்ணுதல் பாத நண்ணி
மற்றுமோர் தெய்வந் தன்னை யுண்டென நினைந்தெம் பெம்மாற்
கற்றிலா தவரைக் கண்டா லம்மநா மஞ்சு மாறே.

**சிவஞானசித்தியார்** [2]

சித்தாந்தத் தேசிவன்றன் றிருக்கடைக்கண் சேர்த்திச்
செநநமொன்றி லேசீவன் முத்த ராக
வைத்தாண்டு மலங்கழுவி ஞான வாரி
மடுத்தானந் தம்பொழிந்து வரும்பிறப்பை யறுத்து
முத்தாந்தப் பாதமலர்க் கீழ்வைப்ப னென்று
மொழிந்திடவு முலகரெலா மூர்க்க ராகிப்
பித்தாந்தப் பெரும்பி தற்றுப் பிதற்றிப் பாவப்
பெருங்குழியில் வீழ்ந்திடுவ ரிதுவென்ன பிராந்தி

1' திருவாசகம் அச்சப்பத்து. 1.
2, சி. சித்தியார் 8-2-16.

முழுமுதற்கடவுள் எனப்படுபவர் எல்லா ஞானமும் எல்லா முதன்மையும் எல்லா அநுக்கிரகமும் என்னும் இலக்கணங்களை இயல்பாகவேயுடையராதல் வேண்டும். பரமசிவன் அருளிய வேதாகமங்களின் பெருமையால், அவர் முற்றறிவுடையவர் என்பதும், அவ்வேதாகமங்களின் வழி ஒழுகுவோர்க்கு இன்பத்தையும், ஒழுகாதோர்க்குத் துன்பத்தையுங் கொடுத்தலினால் முடிவிலாற்றல் உடையர் என்பதும், அவ்வின்பதுன்பங்களை நுகரச்செய்து வினையை யொழித்தலினால் பேரருளுடையர் என்பதும் பெறப்படும். ஆதலினால், அவரே முழுமுதற்கடவுளாய் முத்தியை அளிப்பவர் என்பது சித்தம்.[1]

---

## சைவ சாதனைகள்.

சிவபெருமான் திருவடியை அடைதற்குரிய சைவ நன்நெறிகள், தாதமார்க்கம், சற்புத்திரமார்க்கம், சகமார்க்கம், சன்மார்க்கமென நான்குவகைப்படும்.[2] அவை

---

1, அவனருள் பெறாது முத்தியடைந்தன ரில்லை யல்லா
லவனரு ளின்றி வாழு மமரரும் யாரு மில்லை
யவனரு ளெய்தி னெய்தா வரும்பொரு ளில்லை யானை
யவனல திறைவ னில்லை யவனை நீ யடைதி யென்றான்.

— கந்தபுராணம்.

2, சரியை முதலிய நான்கு பாதங்களுந் தனித்தனி உபாயம் உண்மையென வேறுபாடுபற்றி இருதிறப்படும். புகழ் முதலியவற்றை விரும்பி உலகப்பயனை நோக்கிச் செய்யும் உபாயச்சரியை முதல் நான்கும், மெய்யன்போடு முத்திநோக்கமாகச் செய்யும் உண்மைச் சரியை முதல் நான்குமாகச் சிவபுண்ணியம் எட்டாம். உபாயச்சரியை முதலியவற்றை அநுட்டிப்பவர் ஸ்ரீகண்டபுவனம் வரையுமுள்ள புவனங்களை அடைந்து அங்குள்ள போகங்களை அனுபவித்து மீட்டும் பூமியில் வந்து சித்தாந்த உணர்ச்சியுடையவர்களாய், உண்மைச் சரியை முதலியவற்றை அனுட்டித்து அவற்றின் பயனாகிய பதமுத்தி பரமுத்திகளைப் பெறுவர்.

முறையே சிவசரியை, சிவகிரியை, சிவயோகம், சிவஞானம் என வழங்கப்படும். அம்மார்க்கத்திற்குரிய முத்திகள் முறையே சிவசாலோகம், சிவசாமீபம், சிவசாரூபம், சிவசாயுச்சியம் என நான்குவகைப்படும். அவற்றுள் சிவசரியை முதலிய மூன்றினு லும் அடைதற்குரிய சிவசாலோகம் முதலிய மூன்றினையும் பதமுத்தியாகிய அபரமுத்தி எனவும், முடிவான ஞானநெறியால் அடையும் சிவசாயுச்சியத்தைப் பரமுத்தி எனவும் கூறுவர்.

**சாலோகமாவது:-**அகத்தொண்டர்க்குளதாகியஉரிமை போல, சிவபெருமான் திருமேனி கொண்டெழுந்தருளியிருக்கும் உலகத்துள் எவ்விடத்துந் தடையின்றிச் சஞ்சரித்து அவ்வுலகபோகங்களை அனுபவித்து வாழ்தல்.

**சாமீபமாவது:-**அல்வுலகபோகத்தை அனுபவித்தலோடு மைந்தர்க்குளதாகிய உரிமை போலச் சிவபெருமானுக்குச் சமீபமாயிருந்து அப்போகங்களை அனுபவித்து வாழ்தல்.

**சாரூபமாவது;–** தோழர்க்குரிய உரிமைபோலச் சிவபெருமான் கொண்டருளும் திருமேனிகளுள் ஒரு திருமேனியைப் பெற்று அத்திருமேனிக்குரிய ஆபரணமும் போகாநுபவமும் உடையராய் வாழ்தல்.

**சாயுச்சியமாவது:-** சிவபெருமான் திருவடியில் இரண்டறக்கலந்து நின்று நித்தியானந்தத்தை அனுபவித்து வாழ்தல்.

**கந்தபுராணம்**

ஆதியார் தாளிணை யருளொடே வழிபடு
நீதியா நீரினர் நிலைமையாய் நின்றிடும்
பாதநான் குவர்பெறும் பதமுநான் கதனுளே
யோதியார் பெறுவதோ ருயர்பெருங் கதியதே.

சரியை கிரியை யோகம் ஞானம் என்னும் நான்கனுள் சரியையின்றேல் கிரியையும், கிரியையின்றேல் யோகமும், யோகமின்றேல் சிவஞானமும், சிவஞானமின்றேல் சிவபெருமானுடைய திருவடிப்பேறுகிய முத்தியுங் கை

கூடாவாம். ஆகவே இவைநான்கும் ஒன்றற்கொன்று ஏற்றம்பெற்றுப் படிபோல் உள்ளன. அதனால், அம்முத்தியாகிய சுவையைப் பெறுதற்குச் சரியை முதலிய நான்கும் முறையே அரும்பு, மலர், காய், கனி போலாகும் என்றார் தாயுமானசுவாமிகள்.

> விரும்புஞ் சரியை முதன் மெய்ஞ்ஞான நான்கு
> மரும்புமலர் காய்கனிபோ லன்றோ பராபரமே.

கிரியைகள் எல்லாம் சிவஞானத்திற்கு அறிகுறிகளாகும். அக்கிரியைகளுள் இன்னது இன்னதற்கு அறிகுறி என்று ஆகமங்களில் தெளிவுறக் கூறப்பட்டுள்ளன. இங்ஙமாக, கிரியைகளிற் பயனில்லையென்று அவைகளையிகழ்ந்து ஞானமுத்தியடைய விரும்புவோர் ஆகாயத்தோலையுரித்து உடுக்க விரும்பினேரையும், படிவழியேறிச் செல்லாது கீழ் நின்று மலையினுச்சிக்குப் பாய விரும்புவோரையும் நிகர்ப்பார்கள் என்பது உண்மைநூற்றுணிபேயாம்.

---

## சரியையின் இலக்கணமும் பயனும்.

தாசநெறியாகிய **சரியையாவது** திருநந்தனவனம் வைத்தல், பத்திர புஷ்பமெடுத்தல், திருமாலை கட்டுதல், திருவலகிடுதல், திருமெழுக்குச் சாத்துதல், சுகந்த தூபமிடுதல், திருவிளக்கேற்றுதல், தோத்திரம் பாடல், பூசைத்திரவியங்கள் கொடுத்தல், சிவனடியார் திருவேடத்தைக் கண்டவிடத்து வணங்குதல், அவர்களது பணிவிடைகளைச் செய்தல் முதலியவைகளாம்.

### 1 திருநந்தனவனம் வைத்தல்.

கடவுட் பூசைக்காகிய மரம் செடி கொடி வகைகளைச் சுத்தமான பூமியிலே உண்டுபண்ணிப் பாதுகாத்தல் வேண்டும்.

---

1, திருநந்தனவனம் வைத்தல் முதலியவற்றின் இலக்கணம் சிவாகம மொழிபெயர்ப்பாகிய சைவசமயநெறியுரை (மாணுக்கரிலக்கணத்து எ-ம், அ-ம் செய்யுள்) யிலும் ஆகமங்களிலும் விஸ்தாரமாகக் காண்க.

## மரவகைகள்.

மரங்கள், வில்வம், பாதிரி, கோங்கு, புன்னி, கொன்றை, பொன்னுவிரை, மந்தாரை, சண்பகம், குரா, குருந்து, மகிழ், புன்னை, கடம்பு, வெட்சி, ஆத்தி, செருந்தி, பவளமல்லிகை, வன்னி, பலாசு, மாவிலிங்கை, விளா, முட்கிளுவை, நெல்லி முதலியவைகளாம். மரங்களில் உண்டாகும் பூக்கள் கோட்டுப்பூ எனப்படும்.

## செடிவகைகள்.

செடிகள் அலரி, நந்தியாவர்த்தம், வெள்ளெருக்கு, செவ்வரத்தை, கொக்கிறகு, துளசி, நொச்சி, செங்கீரை, நாயுருவி, கருவூமத்தை, பொன்னூமத்தை, கத்தரி, செவ்வந்தி, வெட்டிவேர், மருக்கொழுந்து, இலாமிச்சை, சிவகரந்தை, விட்டுணுக்கிராந்தி, மாசிப்பச்சை, திருநீற்றுப் பச்சை, எள்ளு, பூளை, அறுகு, முதலியவைகளாம். செடிகளில் உண்டாகும் பூ நிலப்பூ எனப்படும்.

## கொடி வகைகள்.

கொடிகள் மல்லிகை, முல்லை, இருவாட்சி, மிச்சி, வெண்காக்கொன்றை, கருங்காக்கொன்றை, தாளி முதலியவைகளாம். கொடிகளிலுண்டாகும் பூ கொடிப்பூ எனப்படும்.

## நீர்ப்பூக்கள்.

நீர்ப்பூக்கள் செந்தாமரை, வெண்டாமரை, செங்கழுநீர், நீலோற்பலம், செவ்வாம்பல், வெள்ளாம்பல் என்பவைகளாம்.

### திருநாவுக்கரசு சுவாமிகள்

திருக்குறுந்தொகை

விண்ட மாமலர் கொண்டு விரைந்துநீர்
அண்ட நாயகன் றன்னடி சூழ்மின்கள்
பண்டு நீர்செய்த பாவம் பறந்திடும்
வண்டு சேர்பொழில் வான்மியூ ரீசனே.

## பத்திர புஷ்பமெடுத்தல்.

## திருமாலை கட்டுதல்.

சிவாகம விதிப்படி பத்திர புஷ்பமெடுத்து அருச்சிக்கக் கொடுத்தலும், தொடை கண்ணி முதலாகிய பல வகைப்பட்ட திருமாலைகளைக் கட்டிச் சாத்தக் கொடுத்தலும் சிறந்தசிவ புண்ணியமாம்; முருகநாயனார் சரித்திரம் இதற்குச் சான்றாகும்:

## திருவலகிடுதல்

திருக்கோயிலினுள்ளும் புறம்பும் உள்ள குப்பைகளை மெல்லிய துடைப்பத்தினாலே மெய்யன்போடு நித்தமும் திருவலகிடுபவர்கள் காமம் வெகுளி பொய் என்னும் குப்பைகளை அகழ்ந்து போக்கிப் பரிசுத்தராய் விளங்குவார்கள்.

### திருக்கழுமல மும்மணிக்கோவை.

கருமுதற் றொடங்கிப் பெருநா ளெல்லாங்
காமம் வெகுளி கழிபெரும் பொய்யெனுந்
தூய்மையில் குப்பை தொலைவின்றிக் கிடந்ததை
அரிதி னகழ்ந்து போக்கி.

## திருமெழுக்கிடுதல்

திருக்கோயிற்றரையைச் சுத்தமான பசுவின் சாணி கொண்டு மெழுகுதல் வேண்டும். கற்படுத்த நிலத்தைச் சலத்தினால் அலம்பிவிடுதல் வேண்டும். பசுவின் சாணி கொண்டு மெழுகுதலால், பூதப்பிரேத பைசாச தோஷங்களும், அசுத்தவாயு துர்நாற்றம் முதலிய தோஷங்களும் நீங்குவதேயன்றித் தரையானது உலர்ந்து பரிசுத்தமாய் இருப்போருக்கு மனோகரமும், இலட்சுமீகரமும், சாத்துவிக குணமும் தருமென்பது துணிபு. இத்திருத்தொண்டின் சிறப்புத் திலகவதியார் நியதியாகச் செய்து முத்தியடைந்த சரித்திரத்தாலினிது விளங்கும்.

## தூபமிடுதல்

திருக்கோயில்களிலே சிவசந்நிதானத்திலே நியதியாகத் தூபமிடுபவர்கள் ஆன்மாவை மறைத்திருக்கும்

ஆணவமல சத்திகுன்றி முத்தியடைவார்களென்பது உண்மைநூற்றுணிபு. சுகந்த தூபமிடுதலின் பெருமை குங்குலியக்கலய நாயனுர் சரித்திரத்தாலுணர்தற்பால தாம்.

## திருவிளக்கிடுதல்

திருச்சந்நிதானத்திலே தீபமேற்றுபவர்களும். தீபத்துக்கு நெய்கொடுப்பவர்களும் பாவம்நீங்கி உண்மைஞான விளக்கம்பெற்றுச் சிவபெருமானுடைய திருவடியை அடைவார்கள். திருவிளக்கிடுதலாகிய சிவபுண்ணியத்தின் மகிமையை நமிநந்தியடிகள் சரித்திரத்தால் உணர்ந்து அனுஷ்டித்துக் கடைத்தேறக் கடவர்.

## திருநாவுக்கரசு சுவாமிகள்

### திருநேரிசை

பெரும்புலர் காலைமூழ்கிப் பித்தற்குப் பத்தராகி
அரும்பொடு மலர்கள்கொண்டாங் கார்வத்தை யுள்ளேவைத்து
விரும்பிநல் விளக்குத் தூபம் விதியினு லிடவல்லார்க்குக்
கரும்பினிற் கட்டிபோல்வார் கடவூர்வீ ரட்டனுரே.

### திருத்தாண்டகம்

நிலைபெறுமா றெண்ணுதியே நெஞ்சே நீவா
நித்தலுமெம் பிரானுடைய கோயில் புக்குப்
புலர்வதன்முன் னலகிட்டு மெழுக்கு மிட்டுப்
பூமாலை புனைந்தேத்திப் புகழ்ந்து பாடித்
தலையாரக் கும்பிட்டுக் கூத்துமாடிச்
சங்கரா சயபோற்றி போற்றி யென்றும்
அலைபுனல்சேர் செஞ்சடையெம் மாதீ யென்று
மாரூரா என்றென்றே அலறு நில்லே.''

## திருவருட்பா ஓதல்

தேவாரம் முதலிய திருவருட்பாக்களைப் பண்ணமையப் பத்திரசத்துடனே காலத்துக்கும் இடத்துக்கும் ஏற்ற அமைவுகளோடு ஆனந்தமேலிட்டுக் கண்ணில் நீர்ததும்ப, நெஞ்சு நெக்கு நெக்குருக, மயிர்சிலிர்ப்ப, தனக்கும்கேட்போர்க்கும் மெய்யன்பு கூடுமாறு பாடுதல் வேண்டும்.

## திருநாவுக்கரசு சுவாமிகள்

### தனித்திருநேரிசை

விளக்கினூர் பெற்றவின்ப மெழுக்கினூற் பதிற்றியாகும்
துளக்கினன் மலர்தொடுத்தாற் றூயவிண் ணேறலாகும்
விளக்கிட்டார் பேறுசொல்லின் மெய்ந்நெறி ஞானமாகும்
அளப்பில கீதஞ் சொன்னூர்க் கடிகடா மருளுமாறே.

## சிவனடியார்

விபூதி ருத்திராக்ஷம் முதலிய திருவேடமுடையாரும், பஞ்சப்பிரம ஷடங்க நியாசம் முதலிய நியாசங்கள் வாயிலாகச் சிவோகம்பாவனை செய்வோரும், அகப்பூசை புறப்பூசை செய்வோரும் தம்மின் இரண்டற இயைந்த சிவத்தோடு கலந்து நிற்போரும் சிவமேயாவர். வேடம் பாவனை செயல் தன்மை என்னும் இந்நான்கனுள் ஒன்று அமையப்பெற்றவராயிருப்பினும் அவரைச் சிவமாகப் பாவித்து வழிபடல்வேண்டும்.

சிவனடியாரோடும் மெய்யன்பிற் கலந்து அவர்பணி வழுவாதொழுகி, அவர்முன் வாய்பொத்திப் பணிவுடன் நின்று அவர் கூற்றுக்கு எதிர்மொழி கூறுது பக்திபண்ணுதல் வேண்டும்.

## தாயுமானசுவாமிகள்

அன்பர்பணி செய்யவெனை யாளாக்கிவிட்டால்
இன்பநிலை தானேவந் தெய்தும் பராபரமே.

இச்சரியை இந்திரியத்தொழிலாகிய புறத்தொழில் மாத்திரையானே சிவபெருமானது உருவத் திருமேனியை நோக்கிச் செய்யும் வழிபாடாம். இதனை அனுட்டித்தோர் சிவலோகத்தில் இருத்தலாகிய பதமுத்தியைப் பெறுவர்,

சரியையாளர் திருக்கோயில்களில் சுயம்புவாகஅமைந்துள்ள இலிங்கத்தையும் தேவர்கள், இருடிகள், குரவர்கள் முதலியோராற் சிவாகம முறைப்படி பிரதிட்டை செய்யப்பட்ட சிவலிங்க முதலிய திருமேனியையுமேசிவமெனக்கண்டு வழிபடுவார்கள்; சிவபெருமான் அவர்க

ளுக்கு அத்திருவுருவங்களில் வெளிப்படாது நின்று திருவருள் செய்வர்.[1]

## கிரியையின் இலக்கணமும் பயனும்

கிரியையாவது புஷ்பம், [2] திருமஞ்சனம், தூபம். தீபம், சந்தனம், திருஅமுது முதலிய பூசைக்கு வேண்டிய உபகரணங்களை அமைத்துக்கொண்டு, பஞ்சசுத்திபண்ணி, அகப்பூசை செய்து, புறத்திலுள்ள சிவலிங்கத்தில் சிவபெருமானைப் பாவனைசெய்து வெளிப்படுத்திப் பூசித்துத் துதித்து நமஸ்காரம் முதலிய வழிபாடியற்றி, நித்தியாக்கினி காரியமுஞ் செய்து முடிப்பதாம்;

பஞ்சசுத்திகள், பூதசுத்தி, தானசுத்தி, திரவியசுத்தி, மந்திரசுத்தி, இலிங்கசுத்தி என்பன. இவை ஆணவம் முதலிய ஐவகைப் பாசநீக்கத்தின் பொருட்டும் சிவஞானப் பேற்றின் பொருட்டும் செய்யப்படுவன.

**சைவசமயநெறி**

பஞ்சவித சுத்தியினைப் பண்ணிடுக பாங்காக
பஞ்சவித பாசமறுப் பார்;

**தாயுமான சுவாமிகள்**

பஞ்சசுத்தி செய்துன்னைப் பாவித்துப் பூசைசெய்தால்
விஞ்சிய ஞானம் விளங்கும் பராபரமே.

அகப்பூசை - அந்தர்யாகம்; உட்பூசை. இது, பூசை ஓமம் தியானம் மூன்றற்கும் இதயம் உந்தி புருவநடு என்னும் மூவிடம் வகுத்துக்கொண்டு அகத்தே செய்யப்படுவது.

---

1 சிவஞானசித்தியார் சாதனவியல் (8–2–19.) திருவாதவூரடிகள் புராணம் திருப்பெருந்துறைச் சருக்கம் செ. 49

2 திருமஞ்சனம்—அபிஷேகம். அது ஈண்டுச் சம்பிரதாயத்தான் அபிஷேகதீர்த்தத்தின்மேற்று.

## அபிஷேகம்

[1] தைலம். பஞ்சகவ்வியம், பஞ்சாமிர்தம், பால், தயிர், நெய், தேன், இளநீர் முதலியவைகளி ஞல் விதிப்படி அபிஷேகம் பண்ணுதல் புண்ணியமென்று சைவாகமங்கள் சாற்றுகின்றன. பந்தமாகிய மல அசுத் தத்தை அன்புநீர் கொண்டு சுத்திசெய்வதே அபிஷேக மாகும்.

## சந்தனம்

குங்குமப்பூ முதலிய பொருள்கள் கலந்த சந்தனத் தைச் சாத்துவது திருவருட்சத்தி பதிதல் என்னும் பாவனை யாகும்.

### திருநாவுக்கரசு நாயனுர்

''சந்தனமுங் குங்குமமுஞ் சாந்துந் தோய்ந்ததோ ளானே''

## நைவேத்தியம்

இறைவனுக்கு நைவேத்தியம் செய்வதற்காக, அரிசி, பருப்பு, பால், நெய், தயிர், தேங்காய், பழவகைகள் முதலிய பொருள்களைக் கொடுத்தல் சிவபுண்ணியம்.

### திருவிளையாடற்புராணம்.

பாட்டிற் கின்புறு குருபரன் பாதமேற் கண்ணீ
ராட்டிச் சொன்மல ரணிந்துதற் போதவின் னமுதை
யூட்டித் தற்பர ஞானமா மோமவெங் கனலை
மூட்டிச் சம்புவின் பூசைமேன் முயற்சிய ராஞர்.

---

**1 தேவாரம்.**

1. ''செய்ய மேனியன் தேனெடு பால்தயிர்
நெய்ய தாடிய நீலக் குடியரன்.''
2. ''ஆவி லைஞ்சுகந் தாடு மவன்கழல்.''

**திருமந்திரம்.**

3. ''புண்ணியஞ் செய்வார்க்குப் பூவுண்டு நீருண்டு
வண்ண லதுகண் டருள்புரி யாநிற்கு
மெண்ணிலி பாவிக ளெம்மிறை யீசனை
நண்ணறி யாம லுழுவகின் றாரே.''

இதன் உண்மையைக் கூறுமிடத்துப் பசுஞானத்தை ஒப்பித்துச் சிவஞானத்தைப் பெறுதலேயாம்.[1]

இக்கிரியை இந்திரியங்களும் மனமுங்கூடித்தொழிற் படுவதாகிய புறத்தொழில் அகத்தொழில் என்னும் இரண்டினுலும் சிவபெருமானுடைய அருவுருவத் திருமேனியை வழிபடுவதாம். கிரியையாளர் அருவப்பொருளாகிய சிவபெருமான் ஈசாளுதி மந்திரங்களினுல், சிவலிங்க முதலிய திருவுருக் கொண்டார் எனக் கருதி மந்திர நியாசத்தினுலே வழிபடுவர். விறகைக் கடைந்தவிடத்துத் தோன்றும் அக்கினிபோல, அவர்களுக்கு அவ்வத் திருமேனிகளில் அவ்வப்போது தோன்றி நின்று அருள் செய்வர். இக்கிரியையை அனுட்டித்தோர் சிவசாமீபமாகிய பதமுத்தியைப் பெறுவர்.[2]

### சிவபூசாபலன்

சிவபூசையினுல் சகல தருமங்களும் இடையூறின்றி முற்றுப்பெறும் என்பதும், சிவபெருமான் தம்மை அன்பினேடு பூசிப்பவர்களுக்குக் குழைந்து நிற்பார் என்பதும் உமாதேவியார் காஞ்சீபுரத்திற் செய்த சிவபூசையாற் பெறப்படும். அகங்காரத்துக்குப் பரிகாரமாய் முடிவதும், பிரமகத்தி நோய்க்கு மருந்தாயுள்ளதும், அதிபாதகங்கட்குப் பரிகாரமாயுள்ளதும், காலத்தைக் கடக்கச்செய்வதும் சிவபூசையாமென்பதும் பிரம விட்டுணுக்கள் அகத்தியமுனிவர், தக்கன், மார்க்கண்டேயர் முதலாயினேர் செய்த சிவபூசையினுலே பெறப்படும்.

### புகழ்த்துணை நாயனுர்

புகழ்த்துணைநாயனுர் சிவாகமவிதிப்படி பரமசிவனை அர்ச்சித்து வருங்காலத்திலே பஞ்சமுண்டானமையால்,

---

1 மற்றுமுள்ள கிரியைகளின் உண்மைகளைச் சிவாகமங்களிலும் சிவார்ச்சனு சந்திரிகை சிவபூசைவிளக்கம் முதலிய நூல்களிலும் காண்க.

2. சிவஞானசித்தியார்: .(8-2-20) திருவாதவூரடிகள் புராணம்; திருப்பெருந்துறைச் சருக்கம்70.

பசிமிகப்பெற்றும் அரன்பூசையை விடுவேனல்லேன் என்று அல்லும் பகலும் அருச்சித்து வந்தார். ஒருநாள் திருமஞ்சனமாட்டும்பொழுது மிகுந்த பசிநோயினுற் கைசோர்ந்து, அபிஷேக கலசந் திருமுடிமேல்விழத் தாம் திருவடியிலே விழுந்து அயர்ந்து திருவருளினுலே நித்திரை செய்தார். அப்பொழுது பரமசிவன் அவருக்குச் சொப்பனத்திலேதோன்றி, "பஞ்சம் நீங்கும்வரைக்கும் உனக்குத் தினந்தோறும் இங்கே ஒவ்வொரு காசு வைப்போம்" என்று அருளிச்செய்தார். புகழ்த்துணை நாயனுர் விழித்து எழுந்து பீடத்தின்கீழே ஒரு காசு இருக்கக் கண்டு, அதனைக் கைக்கொண்டு வாழ்ந்தார். அந்நாளிலே போல் எந்நாளிலும் அப்படியே ஒரு காசுபெற்றுப் பஞ்சம் நீங்கிப் பின்னும் நெடுங்காலம் மெய்யடிமைத் தொழில் செய்து சிவனுரது திருவடிநீழலையடைந்தார்.

### சுந்தரமூர்த்திநாயனுர்.

பண் — இந்தளம்.

அகத்தடிமை செய்யுமந் தணன்ரு
நரிசிற்புனல் கொண்டுவந் தாட்டுகின்ருன்
மிகத்தளர் வெய்திக் குடத்தையும்
முடிமேல் விழுத்திட்டு நடுங்குதலும்
வகுத்தவனுக்கு நித்தம் படியும்
வருமென்றெரு காசினை நின்றநன்றிப்
புகழ்த்துணை கைப்புகச் செய் துகந்தீர்
பொழிலார் திருப்புத்தூர்ப் புனிதனீரே.

உயர்திணைப் பொருள்களேயன்றி அஃறிணைப் பொருள்களும் சிவபூசையினுல் வேண்டியவைகளைப்பெற்றன என்பது யானை சர்ப்பம் சிலந்தி முதலாயின செய்த சிவபூசையினுலே பெறப்படும்.

### சுந்தரமூர்த்திநாயனுர்.

பண் — தக்கேசி.

இயக்கர் கின்னரர் யமனெடு வருண
ரியங்கு தீவளி ஞாயிறு திங்கள்
மயக்க மில்புலி வானர நாகம்
வசுக்கள் வானவர் தானவ ரெல்லாம்

அயர்ப்பொன் றின்றிநின் றிருவடி யதனை
யர்ச்சித் தார்பெறு மாரருள் கண்டு
திகைப்பொன் றின்றிநின் றிருவடி யடைந்தேன்
செழும்பொழிற் றிருப்புன் கூரு ளானே.

## யோகசாதனையின் இலக்கணமும் பயனும்

[1] சகமார்க்கமாகிய **யோகநெறிப்** பயிற்சியாவது யாதெனில்—வாயுவானது எப்பொழுதும் வெளியே வருதலும் உள்ளே போதலுமாக இயங்கிக்கொண்டிருக்கும்; வெளியே வருதல் இரேசகம்; உள்ளே போதல்பூரகம்; வெளியே வருதலை மேனோக்கிச் செல்லும்வாயு என்றும், உள்ளே செல்லுதலைக் கீழ்நோக்கிச் செல்லும் வாயு என்றும் கூறுவர். இவ்வாயுவை இவ்வாறு செல்லவொட்டாது தடுத்துக் கும்பகஞ் செய்து, சுழுமுனை மார்க்கத்தில் பிராண வாயுவைச் செல்லும்படி நிறுத்தி, மனசை விஷயங்களின் வழி செல்லவொட்டாது ஒருவழிப்படுத்தி, அந்த மனோவியாபாரமுமன்றி லட்சியத்திலே நிறுத்தி, உடம்பினுள் மூலாதாரம், சுவாதிட்டானம், மணிபூரகம், அநாகதம், விசுத்தி, ஆஞ்ஞை என்னும் ஆறுதாரங்களின் அதிதேவதைகளாகிய விநாயகர், பிரமா, விட்டுணு, உருத்திரன், மகேசுரன், சதாசிவன் என்பவர்களை முறையே தியானித்து, அவ்வாறுதாரங்களுக்கு மேற்சென்று, பிரமரந்திரத்தின் கண்ணதாகிய தாமரைமுகையைமலரும்படி செய்து, அத்தாமரைமலரிற் பொருந்திய சந்திரமண்டலத்தை மூலாக்கினியினாலே இளகப்பண்ணி, அதன் வழியாக ஒழுகும் அமிர்தத்தைத் தேகம் முழுதும் நிரப்பிப் பூரணப் பிரகாசத்தைத் தியானித்துச் சமாதி கூடுதல்[2]. பிரதானுங்கமாக வினைகள் கெடுதற்கு வழியாகிய இவ்

---

1. இது தோழமார்க்கமெனவும் கூறப்படும்.

2. இதற்குப் பூர்வாங்கம் இயமம் நியமம் ஆசனம் என்னும் மூன்றுமாம்.

வட்டாங்க யோகத்தை முற்றும் அனுட்டித்தலாம்.[1]

**அட்டாங்க யோகம்:-** இயமம், நியமம், ஆசனம், பிராணுயாமம், பிரத்தியாகாரம், தாரணை, தியானம், சமாதி என்பன.

அவற்றுள் **இயமமாவது:-** கொல்லாமை, வாய்மை, கள்ளாமை, பிறர்மனைவியரையும் பொதுமகளிரையும் விரும்பாமை, இரக்கம், வஞ்சனையில்லாமை, பொறையுடைமை, மனங்கலங்காமை, அற்பாகாரம், சுசியுடைமை என்னும் பத்துவிதமாம்.

**நியமமாவது:–** தவம், சந்தோஷம், கடவுள் உண்டென்னும் விசுவாசம், தானம்' ஈசுவரபூசை, ஞானசாத்திரங்கேட்டல், செபம், விரதம் முதலியனவாம்.

[2] **ஆசனமாவது:-** இருக்கும் முறைமையிற் பல வேறுவகைப்படும். அவற்றுள் சுகாசனமுமொன்று.

**பிராணுயாமமாவது:-** பிராணவாயுவை அடக்குதல். அது மந்திரசெபத்துடன் அடக்குவதும், மந்திரசெபமின்றி அடக்குவதுமென இருவகைப்படும்.

**பிரத்தியாகாரமாவது:–** மனத்தைப் புறத்திற் செல்லவொட்டாது அடக்குதல்.

**தாரணையாவது:-** மனத்தை அகத்து ஒரு தானத்தில் நிறுத்துதல்.

---

1. சிவஞானசித்தியார் சாதனவியல் (8–2–21.)
திருவாதவூரடிகள் புராணம் — திருப்பெருந்துறைச் சருக்கம்.
''முக்குணம் புலனைந்துடனடக்கி.........''

காஞ்சிப்புராணம் — தழுவக்குழைந்தபடலம் 57.

2. இவை முதலியவற்றின் இலக்ஷணங்கள் தத்துவப்பிரகாச வுரை (செ. 107) முதலியவற்றுலும், சித்தியாருரையிற் சிவாக்கிரயோகிகள் காட்டிய ஆகமவசனங்களாலும் அறிக.

**தியானமாவது:-** மூர்த்தியின் சொரூபத்தை மனத்தால் பாவித்துச் சிந்தித்தல்.

**சமாதியாவது:-** மூர்த்தியாகிய தோற்றமும், சிந்தித்தலாகிய தொழிலும் சிந்திக்கின்றதானும் ஆகிய பேதங்கள் இன்றி, மூர்த்தியுந் தானும் இரண்டறக் கலந்து நிற்றல்.

யோகிகள், யோகியருள்ளமெங்கும் இல்லமாய் வாழும் சிவபெருமான் இத்திருமேனியிலுமிருந்து பூசைகொண்டருளுவரெனக் கருதிச் சாத்தியமந்திரங்களினுல் வழிபடுபவர் அவர்களுக்குக் கறந்தபொழுது தோன்றும் பால்போல, அவ்வம் மந்திரங்களால் அவரவர் விரும்பிய வடிவாய், அத்திருமேனிகளில் அப்போதப்போது தோன்றி நின்று அருள் செய்வர்.

இவ்வழிபாடு அகத்தொழின் மாத்திரையானே சிவபெருமானுடைய அருவத்திருமேனியிடத்து நிகழ்வதாதலின், இதனை அநுட்டித்தோர் சிவசாரூபமாகியபதமுத்தியைப் பெறுவர்.

**சுந்தரமூர்த்திநாயனுர்.**

**பண் - பஞ்சமம்**

வானுடை யான்பெரி யான்மனத் தாலு நினைப்பரியான்
ஆனிடை யைந்தமர்ந் தானணு வாகியொர் தீயுருக்கொண்
டூனுடை யிவ்வுடல மொடுங்கிப் புகுந்தான் பரந்தான்
நானுடை மாடெம் பிரானண்ணு மூர்நனி **பள்ளியதே**

# ஞானத்தின் இலக்கணமும் பயனும்.

**ஞானபாதமாகிய** [1] சன்மார்க்கமாவது, எல்லாக் கலைஞானங்களும் புராணங்களும் வேதங்களும் சாத்திரங்களும் சமயநூல்களுமாகிய பலவற்றையும் ஆராய்ந்தறிந்து, பலவகைப்பட்ட சமயங்களிலும் கூறப்படும் பொருள்களின் இயல்புகள் யாவும் பூருவபக்ஷமாகக் கண்டு,

---

1. சன்மார்க்கம் — சத்தியநெறியெனவும் கூறப்படும்.

பதி பசு பாச லக்கணங்கள் கூறும் சிவாகம நெறியே சித்தாந்தமெனத் தெளிந்து, [1] காட்சி, காட்சிப்பொருள், காண்பான் எனப் பிரித்தறியும் சவிகற்பஞானத்தையுங் கடந்து, அம்மூன்றுமின்றி, அத்துவிதமாய் இயைந்த அகண்டாகார சச்சிதானந்தப் பிழம்பாகிய சிவபெருமான் மாட்டு நிருவிகற்பஞானத்தாற் செய்யும் வழிபாடாகும்.

இவ்வழிபாடு புறத்தொழில் அகத்தொழில் என்னும் இரண்டுமின்றி அறிவுத்தொழில் மாத்திரையானே சிவபெருமானுடைய உருவம், அருவம், அருவுருவம் என்னும் மூன்று திருமேனிகட்கு மேலாகிய சொரூபத்திருமேனியிடத்து நிகழ்வதாம்.

இந்த ஞானநெறியைச் சாதித்து அனுபவமடைந்த பெரியோர் சிவசாயுச்சியமாகிய பரமுத்தியைப் பெறுவர். [2]

**மாணிக்கவாசகசுவாமிகள்**

பொய்யெல்லா மெய்யென்று புணர்முலையார் போகத்தே
மையலுறக் கடவேனை மாளாமே காத்தருளித்
தையலிடங் கொண்டபிரான் தன்கழலே சேரும்வண்ணம்
ஐயனெனக் கருளியவா றார்பெறுவா ரச்சோவே.

ஞானிகள் நீங்காத அன்பினுல் திருக்கோயிலில் சிவலிங்க முதலிய திருமேனிகளைச் சிவமேயெனக்கண்டு வழிபடுவர். இவர்க்குக் கறவைப் பசுவின் உடம்பெங்கும் பால் செறிந்திருந்தும் கன்றைக் கண்டவிடத்து முலைவழிப் பெருகுவது போல, கருணைமிகுதியால் சிவபெருமான் அவ்வன்பே தாமாய் எப்போதும் அத்திருமேனிகளில் வெளிப்பட்டுநின்று அருள் செய்வர். ஆதலால் அவ்வுண்மையை அறிந்து அன்பின்வழியே வழிபடுதல் வேண்டும். [3]

---

1. காட்சி – ஞானம்; திருவருள். காட்சிப்பொருள் – சிவன். காண்பான் – ஆன்மா. இவை முறையே ஞானம், ஞேயம், ஞாதிரு என்றும் கூறப்படும். ஞானநிட்டை அடைந்தோருக்குச் சங்கற்ப விகற்பமில்லை.
2. சித்தியார் 8–2–22 திருவாதவூரடிகள் புராணம்''
பரந்த வான்கலை முழுவது.........?
3. சி. சித்தியார் 12–3–4

சரியையாளர் முதலிய நால்வரும் சிவபெருமானிடத்து அன்புடையரேனும் முறையே அவர்கட்கு மந்ததரம் மந்தம் தீவிரம் தீவிரதரம் என நால்வகை வேறுபாட்டுடன் அவ்வன்பு நிகழ்தலின், இடைவிடாது அன்புநிகழ்தற்குரியார் தீவிரதர அன்புடையோராகிய ஞானிகளாம். அவர்களே அன்பரெனச் சிறப்பித்துக் கூறப்படுவர்.

**திருநாவுக்கரசு நாயனர்.**

**திருத்தாண்டகம்.**

2 அருந்துணையை யடியார்த மல்ல றீர்க்கு
மருமருந்தை யகன்ஞாலத் தகத்துட் டோன்றி
வருந்துணையுஞ் சுற்றமும் பற்றும் விட்டு
வான்புலன்க ளகத்தடக்கி மடவா ரோடும்
பொருந்தணைமேல் வரும்பயனைப் போகமாற்றிப்
பொதுநீக்கித் தனை நினைய வல்லோர்க் கென்றும்
பெருந்துணையைப் பெரும்பற்றப் புலி யூரானைப்
பேசாத நாளெல்லாம் பிறவா நாளே.

சிவாலயத்தை வழிபடுதல் அவரவர் கருத்துக்கேற்றவாறு உரித்தாயிருக்க, சரியையாளரைப்போன் ஞானிகளும் சிவாலயத்தை வழிபடுவதேனெனில், சரியை முதல் நான்கும் சிவபெருமானது உண்மைப் பணியாததால் ஞானிகள் நாலினுக்கும் உரியர். எது போலுமெனில் அகத்தொழில் செய்வார் புறத்தொழிற்கும் உரியராதல் போலாம். புறத்தொழில் செய்வோர்க்கு அகத்தொழில் அதிகாரம் இன்மைபோல யோகிகள் யோகம், கிரியை சரியையாகிய மூன்றிற்கும், கிரியையாளர் கிரியை சரியையாகிய இரண்டிற்கும், சரியையாளர் சரியை ஒன்றிற்கும் உரியவராவர். ஆகையால் ஞானிகளும் சிவாலயத்தை வணங்குதற்குரியர்.

---

2. இத்தேவாரச் சுருதியின் விளக்கம் அன்பர் பொ. முத்தையபிள்ளை அவர்கள் சித்தியாருக்கு எழுதிய பொழிப்புரையிற் காண்க.

# சிவபெருமானை வழிபடு முறைகள்.

சிவபெருமானை வழிபடும் முறைகள் சிவதருமோத்தரத்திற் கூறியவாறு கன்மயாகம், தவயாகம், செபயாகம், தியானயாகம், ஞானயாகம் என ஐவகைப்படும்.

அவற்றுள், **கன்ம யாகமாவது:-** விடிய ஐந்துநாழிகைக்கு முன் எழுந்திருந்து சிவசிந்தனை முதல் சிவபூஜை, அக்கினிகாரியமீறுகச் செய்யுஞ் செயல்களாம்.

**தவயாகமாவது:-** சாந்திராயண முதலிய விரதங்களினுல் தேகத்தை மெலிவித்தலாம்.

**செபயாகமாவது:-** மந்திரங்களை [1] வாசகம் இரகசியம், மானதம், என்னும் முறையில் தத்தம் தகுதிக்கேற்றவாறு செபித்தலாம்.

**தியானயாகமாவது:-** இருதயாதி ஸ்தானங்களிலே சதாசிவாதி மூர்த்திகளைத் தியானிப்பதாம்.

இந்த நால்வகை வழிபாடுகளாலும் எய்தும் பயன், பிரபஞ்சப்பற்று நீக்கமும், ஞானமுண்டாதற்குக் காரணமாதலும் சிவலோகத்திலே போகங்களை அனுபவித்தலுமாம்.

**ஞானயாகமாவது:-** சிவாகமங்களை ஓதல், ஓதுவித்தல், கேட்பித்தல், கேட்டல், சிந்தித்தல் என்னும் ஐந்துமாம். இவை ஐந்தும் பரமேசுவரனுடைய திருவடியைச் சேர்விக்கும் மேலான ஞானபூசையாம். இதன் பயன் வீடுபேறும்.

## சிவஞானத்திறம்

மேற்கூறிய ஞானயாகம் ஐந்தனுள் ஓதல், ஓதுவித்தல், கேட்பித்தலாகிய முன்னைய மூன்றும் ஆசிரியனை

---

1. வாசகமாவது பிறர்க்குக் கேட்கும்படி செபித்தல். இரகசியமாவது தன்செவிக்கு கேட்கும்படி செபித்தல், மானதமாவது மனத்தாற் செபித்தல். முன்னைய முன்னைய இரு செபங்களிலும் எண்ணிக்கை கூடும். மானதத்தில் எண்ணிக்கை கூடாது.

யின்றியும் நிகழ்வனவாதலின், ஆசிரியனுல் அறிவுறுத்தும் கேட்டல் சிந்தித்தல் தெளிதல் நிட்டை என்னும் நான்குமே **உண்மைஞானம்** எனப்படும்,

**கேட்டலாவது:** பதி பசு பாசங்களின் சிறப்பிலக்கணங்களை ஆசாரியர் வாயிலாகக் கேட்டறிதல். அறிதலென்பது தநு கரண புவன போகங்கள் சடப்பொருள்கள்; ஆன்மாவுக்கு அந்நியமானவை; ஆன்மா தூலசித்து; மலமறைப்பினுலே தனது இயல்பை அறியாது பிரபஞ்சத்தில் வசப்பட்டுத் துன்புறுகின்றது: பதி அதிசூக்குமசித்து; எங்கும் வியாபகமுள்ளது; உயிர்க்குயிராய் இருக்கும் இயல்புடையது எல்லாவற்றையும் ஒருங்கே ஓரியல்பாய் அறியும் பேரறிவுடையது என்று அறிதலாம்.

**சிந்தித்தலாவது:-** ஆசாரியரிடத்துக் கேட்டபொருளை மனனஞ் செய்து ஆராய்தலாம்.

**தெளிதலாவது:-** அங்ஙனம் ஆராய்ந்தபின் பாசநீக்கம் பெற்றுப் பதியை அடையவேண்டுமென்று துணிதலாம்.

**நிட்டைகூடலாவது:-** சிவபெருமானுடன் பிரிப்பின்றி உறுதியாக நிற்றலாம். நிட்டை கைவரப்பெற்றவர் பரமுத்தியையடைவர்.

இந்நான்கினுள் வாராது தீக்ஷையில் அத்துவசுத்தி பண்ணப்பட்டு, ஓதல் ஓதுவித்தல் கேட்பித்தலில் நின்று யாக்கை நீங்கப் பெற்றவர், சிவலோகாதி பதமுத்திகளைப் பெற்று ஆண்டுள்ள இன்பத்தினை நன்கு அனுபவித்து, சிவபெருமானது ஆணையால் அங்கு நின்று நீங்கி, இவ்வுலகத்தில் நற்குலத்தில் வந்தவதரித்து, குருவால் நிட்டையினைப்பெற்று வீட்டினை அடைவர். இவ்வுலகத்துக்கு வராமல் சிவலோகத்தில் சிவபெருமானே குருவாய் உபதேசிக்கக் கேட்டல் முதலிய ஞானத்தைப் பெற்று நிட்டையினுல் வீட்டை அடையினும் அடைவர்.

சரியை கிரியை யோகங்களாகிய சிவபுண்ணியங்களை விதி வழி நின்று அநுட்டித்தோர் பதமுத்திகளைப் பெற்

றுச் சர்வசங்கார காலத்தில் பக்குவமடைந்தவர் ஆண்டு நின்று முத்தியடைவர். சிவபெருமானது அநுக்கிரகத்தைப் பெறுதோர், மீட்டும் பூமியில் வந்து பிறந்து குருவருளால் ஞானம் பெற்றுச் சிவனடி சேர்வர்.

## ஞான நிட்டையாளர் இயல்பு

சூரியகாந்தக் கல்லினிடத்து ஆதித்தனுடைய ஒளி பிரகாசிக்க அக்கினி விளங்கித் தோன்றுமாறுபோல, ஞானுசாரியனது சந்நிதி மாத்திரையால் பக்குவான் மாக்களுக்குச் சிவஞானம் விளங்கித் தோன்றும். அதனுல், பதி பசு பாசங்களின் இலக்கணமும் பதி சடசித்துப் பொருள்களோடு கலந்து நிற்கும் முறைமையும் ஆன்ம அறிவிலே விளங்கித் தோன்றும். தீவிர தரசத்தி நிபாதமானது பொருந்த, ஞானம் முதிர்ந்து குருவருளால் [1] நிட்டை கூடினேர்கள் சீவன் முத்தராய் விருப்பும் வெறுப்பும் இன்றி ஓட்டிலும் பொன்னிலும் சமபுத்தி பண்ணி, சங்கரனுரோடு பிரிப்பின்றி நின்று, சிவனது தோற்றம் ஒன்றுமே கண்டிருப்பர். தேகம் நீங்கிய விடத்துப் பரமசிவனேடு அத்து விதமான பரமுத்தியடைவர். [2]

### ஞானநிட்டையாளருக்கு விதிவிலக்கும் வினையும் இல்லை

ஞானநிட்டையுடையோருக்கு இப்பூமியில் நன்மை தீமைகளாகிய வினைகளும், வினைப்பயன்களும் இல்லை; அவர் வினைகளைச் செய்யினும் அவரால் விரும்பும் பயன்

---

1. சிவப்பிரகாசம்

முந்திய ஒருமை யாலே மொழிந்தவை கேட்டல் கேட்டல்
சிந்தனை செய்தல் உண்மை தெளிந்திடல் அதுதா னுக
வந்தவா றெய்தல் நிட்டை மருவுதல் என்று நான்காம்
இந்தவா றடைந்தோர் முத்தி யெய்திய வியல்பி னேரே.

2. திருநாவுக்கரசு நாயனுர் சூசனம். ''சீவன் முத்திநிலை'' காண்க.

ஒன்றும் இல்லை; அவரால் ஒழுகவேண்டியதென நியதியான சமய ஒழுக்கமும் இல்லை; அவராற் செய்யவேண்டியதென்ற தவமுமில்லை; அவரால் அநுட்டிக்கவேண்டிய விரதங்களும் ஆச்சிரம தருமங்களும் இல்லை; மனத்தால் உன்னவேண்டிய தியான பாவனைகளும் இல்லை; சிந்திக்கவேண்டிய பந்தனைகளும் இல்லை; காயத்தாற் சுட்டிக் காட்டவேண்டிய வேடங்களுமில்லை; புலன்களால் உணரப்படும் பேத உணர்வுமில்லை; நீக்கவேண்டிய அந்தக்கரணவிடயப்பற்றுமில்லை; அடக்க வேண்டுவதாகிய குணங்களுமில்லை; நிலையாய் நிற்கவேண்டுமென்ற குறியுமில்லை; கொண்டொழுக வேண்டிய குலாசாரமுமில்லை; பாலர் பித்துக் கொண்டோர் பேய்பிடியுண்டோர்களது தன்மையுடையோர்களாய், ஆனந்தமேலீட்டால் பாடல் ஆடல் முதலியவகைகளைப் பயிலினும் பயில்வர்; இவர்கள் இருவகைப்பட்ட வினைகள் யாவற்றிலும் ஒத்த அனுபவமுடையவராய், எவ்வினை செய்யினும் சிவபெருமானுடைய திருவடியை அகன்றிரார்.

[1] சிவஞானிகள் சரியை கிரியை முதலியவற்றைத் தாங்களாக வேண்டா என்று விடுவதும் இல்லை; செய்துவரல் வேண்டும் என்று சங்கற்பித்துச் செய்வதும் இல்லை; நித்திரைசெய்வோர் கையிற் பொருள் அவரறியாது தானே போதல்போல, அவர்களுக்குச் சரியை முதலியனவெல்லாந் தாமே நீங்கும். மூடஞானிகள் மட்டும் அவைகளைத் தாமாக நீக்கிக்கொள்ளுவார்கள்.

## மலரடிக்கீழ் அணைந்துநிற்போர் வகையும் நிலையும்

தடாகத்திலுள்ள பாசியானது கல்லினை மேலும் மேலும் எறியும்பொழுது நீங்கி கல்லெறியாது விடும்

1. சிவப்பிரகாசம்: பதினொராம் சூத்திரம் 2. திருவருட்பயன்: இன்புறு நிலை 8. சங்கற்பநிராகரணம்: ''ஞால நீதியு நான்மறை நீதியும்........''

பொழுது வந்து நீரை மூடிக்கொள்வது போல, பாசமும் சிவபெருமானுடைய திருவடியைத் தியானிக்கும் பொழுது நீங்கி, விடுத்தவிடத்து ஆன்மாவைப் பொருந்தும். இடையறாத அன்போடும் சிவத்தைப் பொருந்தி மலரடிக்கீழ் நீங்காத நிட்டையாளருக்கு ஒருபோதும் அதுவந்து அடையாது. அவ்வாறன்றிச் சிவத்தின் மாட்டும் கருவிகளின் மாட்டும் விருப்புற்றுச் சுழல்வோர் மலவாதனையைப் போக்கும் நெறியைச் சிவாகமங்களிற் கூறியபடி கூறுவாம்.

## பதிஞானம்

## பதிஞானத்தில் நிலைபெறவொட்டாது செய்யும் வாசனையைக் கெடுக்கும் உபாயங்கள்

பரமபதியானவர் பாசஞான பசுஞானங்களினாலே அறியப் படுபவர் அல்லர், திருவடிஞானத்தினாலே அன்போடும் தன்னறிவின்கண் ஆராய்ந்திருக்க. அத்திருவடி நீழலின் கீழ் பிரிப்பறநின்று தூங்குவதாகும் ஞான நிட்டை கைவருவதாகும். பதிஞானம் சித்தித்தபின்னரும் பிரபஞ்சப்பற்று வருதல் பிராரத்த அனுபவநோக்கி என்பர்.

கன்மவசத்தால் பிரபஞ்சப்பற்று உதித்து நிஷ்டை கைவராதாயின், பற்றுக்கிடமாய பிரபஞ்சம் நிலையற்றதெனக் கண்டு, நிஷ்டை நிலைத்தற்கு ஆற்றலைத்தருவதாகிய ஸ்ரீபஞ்சாக்ஷரத்தை விதிப்படி உச்சரிக்க, அறிவின்கண் அறிவாய் விளங்கி நின்று பற்றுக்கு வித்தாய் நின்ற பாசங்கள் செயலற்று விலகும்படி தமதருளைத் தந்து நிற்பர்.

## பாசஞானம் பசுஞானம்

சொற்பிரபஞ்சமும் பொருட்பிரபஞ்சமுமாகிய இருவகைப் பிரபஞ்சங்களின் வாயிலாக ஆன்மாவின்கண் நிகழும் அறிவு பாசஞானமாம்; நான் என்னும் முனைப்பால் ஆன்மாவின் கண் நிகழும் அறிவு பசுஞானமாம். இவையிரண்டினாலும் முதல்வனை அறியமுடியாது. ஏகதேச அறிவுடைய ஆன்மா சிவஞானத்தால் சிவனை அறிதல் வேண்டும்.

## பதிஞானத்தின் பெருமை

விடயங்களைக் காண்கின்ற கண்தன்னையும் தனக்கு முதலாகிய அந்தக் கரணங்களையும் அறியமாட்டாதிருத்தல் போலவும், அந்தக் கரணங்கள் தம்மையும் தமக்குமுதலாகிய உயிரையும் அறிய மாட்டாதிருத்தல் போலவும், உயிரும் தன்னையும் தனக்குமுதலாகிய சிவனையும் அறியாதிருக்கும். இவைகளையொருங்கே யறிந்து நிற்கும் சிவபெருமான் தமது இயல்பையும் ஆன்ம இயல்பையும் அவ்வான்மாவிற்கு விளக்கித்தாம் கரணங்களால் அறியப்படாது நிற்பர். ஆதலால் திருவருளைத் துணையாகக் கொண்டு சிவபெருமானை ஆன்மஅறிவிற் கண்டு, அவ்வருளோடு நிற்கப்பெறின் பாசம் விட்டு நீங்கும். நீங்கியது ஒருக்கால் வந்து பொருந்துமாயினும், சிவபாவனையை விடாது செய்து அதனாலேதிருவடிநீழற் கீழ் நீங்காது நிற்றலுமாகும்.

## திருவடியன்பு தலைப்படுமுறைமை.

சிவத்தின் விருப்பும் பிரபஞ்சத்தில் வெறுப்பும் உண்டாயவிடத்துச் சிவபெருமானர் ஆன்மாவிடத்திற் பிரகாசித்துநின்று அன்பைப் பெருக்க அவ்வன்பின் வழியாக ஆன்ம அறிவின்கண்புகுந்து நின்று பேரின்பத்தைக் கொடுத்தருளுவர்.

## சிவோகம்பாவனையின் இயல்பும் பயனும்

ஆன்மபோதத்தினுற் சுட்டி அறியப்பட்ட இத்தேகாதிப்பிரபஞ்சமாகியபாசம் நான் அன்று என்று நியதி பண்ணி, அப்போதத்தினுற்சுட்டி அறியப்படாது மேம்பட்டு நின்ற சிவனும் நான் அன்று என அறிந்து, ஆன்மாவின்கண் அச்சிவபிரானர் கலந்துநின்ற முறைமையால், அன்போடு கூடிய அடிமைத்திறத்தினுல் சிவோகம் பாவனை செய்யின், அவ்வான்மாவுக்கு வேருதலின்றி அத்து விதமாய்த் தோன்றுவர். கருடபாவனையால் விடம் நீங்குவது போல மலங்கள் விட்டுநீங்கும்· அதனுல்,

ஆன்மா நின்மலத்துவத்தைப் பொருந்தும். [1] சிவோகம் பாவனை நிலைத்தற்குப் பஞ்சாக்ஷரத்தை விதிப்படி உச்சரிக்கவேண்டும்.

## திருவைந்தெழுத்து

பஞ்சாக்ஷர உபதேசம். மாணுக்கனது பக்குவ தாரதம்மியத்தின்படி சோபானக்கிரமத்தில் முறையே தூலம் சூக்குமம் காரணம் எனமூன்று வகைப்படும். திருவைந்தெழுத்து ஆசாரியரிடம் உபதேசக் கிரமமாகப் பெற்றுச் செபிக்கத்தக்கது.

[2] பஞ்சாக்ஷரமே வேதங்கள்; பஞ்சாக்ஷரமே ஆகமங்கள், பஞ்சாக்ஷரமே புராணங்கள்; பஞ்சாக்ஷரமே அருவுருவம் உருவம் என்னும் திருமேனிகள்; பஞ்சாக்ஷரமே ஆனந்த நடனம்; பஞ்சாக்ஷரமே மௌன முத்தியாம் ஆதலின், வேதாகமபுராணுதிகளுள் ஒன்றேனும் அறியாதவராயினும், நோயாளி மருந்துண்ணற்கு அவ பத்தியங்களை நீக்குமாறுபோல, பொய் கொலை களவு காமம் கள்ளுண்டல் முதலிய பாவங்களை நீக்கி, கண்களினின்றும் ஆனந்த நீர் பொழியச் சிவபெருமானுடைய திருவடிகளை மனத்தில் தியானித்துக்கொண்டு, சிவபெருமான்

---

1. கருடதியானத்தால் விஷம் நீங்குமாறுபோலச் சிவோகம் பாவனை செய்தலால் மலங்கள் நீங்கும். ஆதிபௌதிக கருடன் ஆதிதைவிக கருடன் ஆத்தியான்மிக கருடன் எனக் கருடன் மூவகைப்படும். அவற்றுள் உலகத்திற் காணப்படும் கருடன் ஆதிபௌதிக கருடன் என்றும், கருடமந்திரம் ஆதிதைவிக கருடன் என்றும், கருடமந்திரமிடமாக நின்று பலன் கொடுக்கும் சிவசத்தி ஆத்தியான்மிக கருடன் என்றுஞ் சொல்லப்படும். ஆதிதைவிக கருடமந்திரத்தை நாடொறும் பயின்றுவந்த பயிற்சி விசேடத்தால் அம்மந்திரமே தானுக அநந்நியபாவனை செய்து தன் அறிவு அதன் வசமாகும்படி உறைத்து நின்று அம்மந்திரக் கண்கொண்டு பார்க்குங்கால், விஷவேகம் நீங்குமாறுபோல, சிவோகம் பாவனை செய்துவருங்கால் எய்தும் சிவத்துவவிளக்கம் வாயிலாகப் பாசமாகிய விஷம் நீங்கும்.

2. அருணூலு மாரணமு மல்லாது மைந்தின்
பொருணூ றெரியப் புகின். — திருவருட்பயன்.

ஆண்டவன், தான் அடிமையென்னும் சிந்தையோடு, ஸ்ரீபஞ்சாக்ஷரத்தை விதிப்படி மெய்யன்போடு செபித்து வரின், அவருள்ளத்திலே சிவபெருமான் பிரகாசித்து, மும் மலங்களும் நீங்கும்படி ஞானனந்தத்தைப் பிரகாசித்த ருளுவர்.

திருநாவுக்கரசுநாயனர்
திருக்குறுந்தொகை

ஏது மொன்று மறிந்தில ராயினு
மோதி யஞ்செழுத் துணர்வார் கட்குப்
பேத மின்றி யவரவ ருள்ளத்தே
மாதுந் தாமு மகிழ்வர்மாற் பேறரே.

## அன்புடைமை

அன்பானது மந்ததரம், மந்தம், தீவிரம், தீவிரதரம் என நால்வகைப்படும். மந்ததரபக்தி அரக்கானது வெய்யிலின் முன் இருந்து வெதும்புந் தன்மை போல்வது. மந்தபக்தி மெழுகானது வெய்யிலின் முன் உருகுதல் போல்வது. தீவிர பக்தி நெய்யானது சூட்டுக்கு இளகுதல் போல்வது. தீவிர தரபக்தி தைலதாரையானது சிறிதும் இடையருது ஒழு குதல் போல்வது.

அன்பாவது ஒருவருக்குத் தம்மோடு தொடர்புடைய வராய்த் தமக்கு இனியவராய் உள்ளவரிடத்தே நிகழும் மனநெகிழ்ச்சியாம். பக்தி அன்பு என்பன ஒரு பொருட் சொற்கள்.

[1] நம்மோடு தொடர்புடையவராய், நமக்கு இனிய வராய் உள்ளவர் யாவரென உள்ளபடி ஆராயின்; அனு தியே மலத்தினுலே மறைக்கப்பட்டுள்ள அறிவுந் தொழி

1. ''என்னில் யாரு மெனக்கினி யாரிலை
யென்னி லும்மினி யாஞெரு வன்னுள
னென்னு ளேயுயிர்ப் பாய்ப்புறம் போந்துபுக்
கென்னு ளேநிற்கு மின்னம்ப ரீசனே.''
என்னும் வாகீசர் திருக்குறுந் தொகையாலுமுணரப்படும்.

லும் உடையவர்களாய்த் தம் வயத்தரல்லாதவர்களாய் உள்ள பசுக்களாகியநம்மோடுஅஞுதியே இரண்டறக்கலந்து நின்று, நமக்கெல்லாம் நித்தியானந்தப் பெருஞ்செல்வத் தைக் தந்தருளவிரும்பி, தந்தொழில்களெல்லாம் தம்பயன் சிறிதுங் குறியாது நம்பயன்குறித்த தொழில்களாகவே கொண்டு, பெத்தநிலையில் தாம் நம்முள்ளே மறைந்து நமக் குப்பின்னுகியும், முத்திநிலையிலே நம்மைத் தம்முள்ளே அடக்கித் தாம் நமக்கு முன்னுகியும், இப்படியே என் றும் உபகரிக்கும் இயல்புடைய பெருங்கருணைக்கடலாகிய [1] பசுபதி சிவபெருமான் ஒருவரே ஆதலினுல் அவரொரு வரே நம்மோடு என்றுந் தொடர்புடையவராய் நமக்கு நம்மினும் இனியவராய் உள்ளவர்; அவருக்கே நாமெல் லாம் உடைமைப் பொருள்; அவருக்கே நாமேல்லாம் மீளாவடிமை ஆதலினுல், பரமேசுரனுரிடத்திற்றுனே நாமெல்லாம் மேலான பக்தி செய்தல்வேண்டும்.

சிவபெருமானிடத்தில் வைக்கப்பட்ட மெய்யன்பே நித்தியமும் உண்மையுமாமென்பது உண்மைநூற்றுணிபு. இந்த உறுதியான அன்பு இலக்கண இலக்கியங்களைக் கற்றறிந்த வித்துவ சாமர்த்தியத்துக்கும், வேதசிவாகமங் களிலே கூறிப்போந்த பதிபசுபாச இலக்கணங்களை வாசித்து அறிந்துகொண்டோம் என்னும் அகங்காரத்துக் துக்கும், மதிநுட்பத்துக்கும், அணுவளவேனும் எட்டா தது.

அளவிறந்த கோடிக்கணக்காகிய முன்செனனங்களிலே செய்த தவத்தினுலும் அதனுற் சம்பாதித்துக் கொண்ட திருவருளினுலும் கிட்டப்படுவதாம் [2]

---

1. ''கதிமலிகளிறதுபிளிறிடவுரிசெய்தவதிகுணனுயர்பசு பதியன்மிசைவருபசுபதி......'
என்பது பிள்ளையார் தேவாரம்.

2. சிவதத்துவவிவேகம் சிவஞானசுவாமிகள் மொழிபெயர்ப்பு, 6, 7, ஆம் செய்யுட்களாலறிக.
முன்பு செய்த தவத்தி னீட்ட முடிவிலா வின்ப மான
வன்பினை யெடுத்துக் காட்ட வளவிலா வார்வம்பொங்கி
மன்பெருங் காதல் கூர வள்ளலார் மலையை நோக்கி
யென்புநெக் குருகி யுள்ளத் தெழுபெரு வேட்கை யோடும்.
என்னும் அருண்மொழித்தேவர் அருள்வாக்காலும் உணரப்படும்t கண்ணப்பநாயனுர் புராணம் விருத்தம் 102.

**சிவதத்துவவிவேகம்**

உன்றிரு வடிக்கீ ழுறுதியா மன்பு
முன்றிரு வருளினூற் கிடைப்ப
தன்றினூல் பலவு மாய்ந்ததா லுரைசெ
யளப்பருந் திறமையான் மதியான்
மன்றவே கிடைப்ப தன்றுமற் றதனை
மாதவஞ் செய்திலாக் கயமை
துன்றிய புலையோர் யாங்ஙனம் பெறுவார்
சோதியே கருணைவா ரிதியே.

நாமெல்லாம் சிவபெருமானுடைய திருவடியை நின்றாலும், இருந்தாலும், கிடந்தாலும், நடந்தாலும், உண்டாலும், துயின்றாலும். விழித்தாலும், ஒருபோதும் மறவாது எக்காலமும் இடையறாது அன்புசெய்தல் வேண்டும். சிவபெருமானிடத்தில் வைக்கப்படுகிற அன்பானது அவருடைய திருவடியில் இரண்டறக் கலத்தலாகிய அத்துவித நிலையைக் கொடுக்கும். [1] ஆதலால் அன்புஞ் சிவமும் இரண்டற அபேதமாய் நிற்கும். [2]

---

**பத்தாந்திருமுறை**

அன்புஞ் சிவமு மிரண்டென்ப ரறிவிலா
ரன்பே சிவமாய தாரு மறிகிலா
ரன்பே சிவமாவ தாருமறிந்தபின்
னன்பே சிவமா யமர்ந்திருந் தாரே.

1. அத்துவித நிலையாவது ஆன்மபோதமும் கண்ணொளியும் போலச் சிவமும் ஆன்மாவும் தம்முள் இரண்டற ஒற்றுமைப்பட்டு நிற்றல்.

2. திருவருட்பயன்

இன்பி னினிதென்ற வின்புண்டே லீன்றுண்டா
மன்பு நிலையே யது.

சிவபெருமானிடத்தே அன்புடைமைக்கு அடையாளங்கள்: கண்டம் விம்முதல், நாக்குத் துடித்தல், உதடு துடித்தல், சரீரம், நடுங்குதல், உரோமஞ் சிலிர்த்தல், குறுவேர்வை கொள்ளல், நாக்குத் தழுதழுத்தல், ஆனந்தக்கண்ணீர் சொரிதல், வாய்விட்டழுதல், பரவசமாய்த் தன்னை அயர்த்தல் என்னும் பத்துமாம்.

## சுத்தாத்துவித பரமுத்தி நிலை

காந்தமானது இரும்பைத் தன்வசமாக்கி ஒருகாலும் விடாத தன்மைபோல, ஆன்மாவை விடாது தன்வசமாக்கி, உப்பானது நீரோடு கூடியவிடத்துத் தன்னிடத்துள்ள சுவை முழுவதையும் அந்நீருக்காக்கி, அதனோடு மறைந்துநிற்குமாறுபோல, சிவபெருமான் தமது எண்குணங்களை ஆன்மாவிடத்து விளங்கச் செய்து கலந்து நிற்பர். அணையினுள்ளாகக் கட்டுப்பட்டுத் தேங்கி நின்ற ஆற்றுநீர் அவ்வணையை முரித்து ஒரு தடையுமின்றி விரைந்து சென்று கடல் நீருடன் கலந்து அடங்கி மீண்டு வராத தன்மைபோல, பாசஞானத்தில் அடங்கித் தடைப்பட்ட ஆன்மா அத்தடையினின்றும் நீங்கிச் சிவபெருமானுடைய திருவடியிற் கலந்து அருள்நிறைவாயடங்கிப் பின்பு மீளுதலின்றிக் கருப்பஞ்சாறு, தேன், பால், கனி, அமுதம், கற்கண்டு, சருக்கரை என்னும் சுவைப் பொருள்களை ஒன்றாகக் கலந்தவிடத்து உண்டாகிய சுவை இத்தன்மைத்தெனப் பிரித்தறிய வராததுபோலப் பரமுத்தியில் இத்தன்மைத்தெனப் பிரித்தறியமுடியாத ஆனந்த சொரூபமாய் நிற்கும்.

திருவாசகம்

தானந்த மில்லான் றனையடைந்த நாயேனை
ஆனந்த வெள்ளத் தழுத்துவித்தான் காணேடீ
ஆனந்த வெள்ளத் தழுத்துவித்த திருவடிகள்
வானுந்து தேவர்கட்கோர் வான்பொருள்காண் சாழலோ.

## சிவசின்னங்கள்

### விபூதி

சிவனடியார்களால் தரித்துக் கொள்ளப்படும் அடையாளங்கள் **விபூதி உருத்திராக்ஷம்** என்னும் இரண்டுமாம். அவை சிவசின்னங்கள் எனப்படும்.

திருநீறு, பஸ்மம், பசிதம், க்ஷாரம், இரக்ஷை என்பன விபூதியின் பெயர்களாம். தன்னைத் தரித்தவர்

களுக்கு அழிவில்லாத ஐசுவரியத்தைக் கொடுப்பதால் விபூதி எனப்படும். பாவங்களை நீக்குவதால் திருநீறு எனவும் பஸ்மம் எனவும் பெயர்பெறும். அறியாமை அழியும்படி சிவஞானத்தை விளக்கலால் பசிதம் எனப்படும். உயிர்களது மலத்தைக் கழுவுதலால் க்ஷாரம் எனப்படும். [1] ஆன்மாக்களைப் பிறவித்துன்பத்தினின்று நீக்குவதால் இரக்ஷை எனப்படும்.

சிவப்பிரியராய், சிவத்தைப் பற்றினவராய், சிவபாதார்ச்சனையில் விருப்புடையராய், திரிபுண்டர தாரிகளாய் எவர்கள் உளரோ, அவர்கள் உத்தம சிவனடியாராவர். உத்தூளனம் திரிபுண்டரம் என்பவற்றை மாயா பாச நிவிர்த்தியின் பொருட்டு முனிசிரேஷ்டர்கள் அநுஷ்டிக்கின்றார்கள் எனப் புராணங்கள் பகருகின்றன.

நல்வழி கூறவந்த தெய்வப்புலமை ஒளவைப்பிராட்டியார் ''நீறில்லா நெற்றிபாழ்'' என்றார். சமயாசாரிய மூர்த்திகளும் ''திருவெண்ணீறணியாத திருவிலூரும்...... அவையெல்லா மூரல்ல வடவிகாடே'' எனத் திருவாய் மலர்ந்தருளினர். இதனாலும் பிறவாற்றாலும் சைவசமயிகளுக்கு நல்வழியாயுள்ளது திருநீறே என்பது தெளியப்படும். [2]

ஆன்மா எனப்படும் பசுவைப் பந்தித்த பாசமாகிய மலத்தைச் சிவஞானமாகிய அக்கினியினாலே தகித்த போது சிவத்துவமாகிய சுத்தநிலை விளங்கும் என்பதற்கு அறிகுறியாகவே, தரும வடிவாயுள்ள பசுவினது சாணத்தைச் சிவமந்திரங்கொண்டு பஞ்சகவ்வியம் விட்டுப் பிசைந்து சிவாக்கினியினாலே தகித்தலால் உண்டாகிய திருநீற்றைத் தரிப்பதாம்.

---

1. ''பூதப் பிரேத பிசாச......பவபீதிகளினின்று காத்தலால், இரட்க்ஷை''–பிருகத்ஜாபாலோபநிடதம்.

2. அருமருந்தாகிய திருநீற்றின்வகையும் பிறவும் சைவ சமய நெறி (பொது - 163–206) யிலும் ஆகமங்களிலும் காண்க.

**பெரியபுராணம்: திருக்கூட்டச் சிறப்பு.**

மாசி லாத 1 மணிதிகழ் மேனிமேற்
பூசு நீறுபோ லுள்ளும் புனிதர்கள்
தேசி னுலெத் திசையும் விளக்கினர்
பேச வொண்ணுப் பெருமை பிறங்கினர்.

**திருமந்திரம்.**

கங்காளன் பூசுங் கவசத் திருநீற்றை
மங்காமற் பூசி மகிழ்வீரே யாமாயிற்
றங்கா வினைகளுஞ் சாருஞ் சிவகதி
சிங்கார மான திருவடி சேர்வரே.

## உருத்திராக்ஷம்.

மகா ருத்திரராகிய பரமசிவனுருடைய திருக்கண்களில் தோன்றினமையால் உருத்திராக்ஷம் [2] எனப் பெயர் பெற்றது. தேவர்கள் திரிபுரத்தசுரராலே தங்களுக்கு நிகழ்ந்த துன்பத்தை விண்ணப்பஞ் செய்துகொண்டபொழுது, திருக்கைலாசபதி கருணை மிகுதியால் மூன்று திருக்கண்களையும் மலர்த்திக்கொண்டிருப்ப, அவற்றினின்று நீர்த்துளிகள் பூமியில் விழுந்தன. எவர்களுக்கும் அநுக்கிரகிக்குமாறு அவைகள் உருத்திராக்ஷங்களாயின. அரனுரது ஆஞ்ஞைப்படி வித்தியேசுரர் முதலியோரும் அரி அயன் முதலிய அமரர்களும் முனிவராதியரும் அவைகளைத் தரித்து அருள் பெற்றனர்.

சிவபெருமானுடைய திருநாமங்களை உச்சரிக்கின்றவர்களும் உருத்திராக்ஷ அலங்காரத்தை உடையவர்களும் சிவபக்தர்களுட் சிறந்தவர்களென்பது உண்மைநூற்றுணிபு [3]

உருத்திராக்ஷதாரணம் சிவபெருமானது திருக்கண்ணிற் றேன்றும் திருவருட்பேற்றிற்கு அறிகுறியாம்.

---

1 மணி—உருத்திராக்ஷமணி.

2 உருத்திர – அக்ஷம் — உருத்திராக்ஷம்.

3 சைவசமயநெறி:- பரமசிவனமலன் பத்தர்க்குச் சின்ன
முருவுடலிற் கண்டியுநீறும். (பொது-162

**நெஞ்சுவிடு தூது.**

..........................ஆதியின்மே
லுற்ற திருநீறுஞ் சிவாலயமு முள்ளத்துச்
செற்ற புலையர்பாற் செல்லாதே - நற்றவஞ்சேர்
வேடமுடன் பூசையருண் மெய்ஞ்ஞான மில்லாத
மூடருடன் கூடி முயங்காதே.

**திருநாவுக்கரசுநாயனர் புராணம் 140**

தூயவெண் ணீறு துதைந்தபொன் மேனியுந் தாழ்வடமு
நாயகன் சேவடி தைவரு சிந்தையு நைந்துருகிப்
பாய்வது போலன்பு நீர்பொழி கண்ணும் பதிகச் செஞ்சொன்
மேயசெவ் வாயு முடையார் புகுந்தனர் வீதியுள்ளே.

---

## குருலிங்கசங்கமம்.

மலநீங்கிய மெய்ஞ்ஞானிகளும் சிவானந்தம் மேன் மேலும் வளர்தற்பொருட்டும், மலவாசனை தாக்காமைப் பொருட்டும் அன்பரது திருவேடங்களையும் சிவாலயங் களையும் சிவனெனவே தெளிந்து வழிபடுவர். ஆகையி னாலே நாமெல்லாம் குருவும் இலிங்கமும் சங்கமமும் ஆகிய மூன்றிடத்தும் அன்புவைத்து வழிபாடு செய்தல் வேண்டும்.

திருச்சிற்றம்பலம்.

மழைவ ழங்குக மன்னவ னோங்குக
பிழையில் பல்வள மெங்கும் பெருகுக
தழைக வஞ்செழுத் தோசை தரையெலாம்
பழைய வைதிக சைவம் பரக்கவே.

திருச்சிற்றம்பலம்.

முற்றுப்பெற்றது.

**ஸ்ரீ மெய்கண்டதேவநாயனுர் திருவடி வாழ்க.**

---

# சிவஸ்ரீ ச. குமாரசுவாமிக் குருக்கள்

## அவர்களின் வெளியீடு

| | ரூ ச |
|---|---|
| **சம்ஸ்கிருதம்** | |
| சிவாகமசேகரம் பிரதிஷ்டா விதி (முதற் பாகம்) | 5-00 |
| சிவலிங்கப் பிரதிஷ்டாவிதி (இரண்டாம் பாகம்) | 12-00 |
| விக்னேஸ்வர பிரதிஷ்டா விதி (அச்சில்) | |
| சுப்பிரமணிய பிரதிஷ்டாவிதி | 3-50 |
| வைரவப் பிரதிஷ்டாவிதி | 4-00 |
| சுப்ரமணிய நித்திய பூஜாவிதி | 1-00 |
| அக்கினி கார்யம் (தமிழுரை) | 2-00 |
| வைதிக சந்தியாவந்தனம் | 1-00 |
| சைவ சிரார்த்த விதி | 2-00 |
| பிரணயகலஹவர்ணனம் | -25 |
| பிராசாத சட்சுலோகி (தமிழுரை) (சங்கரபண்டிதர்) | -25 |
| **தமிழ்** | |
| சிவபூசை விளக்கம் | 4-00 |
| மஹோற்சவ விளக்கம் | 1-50 |
| முப்பொருள் விளக்கம் | 3-00 |
| விநாயக பரத்துவம் | 1-00 |
| வேதாகம நிருபணம் (பகுதி 1) | 1-00 |
| ,, ,, (பகுதி 2) | 1-00 |
| அனுட்டான அகவலுரை | -25 |
| சிவபூசாவிதி | -50 |
| சிரார்த்ததீபிகை | -60 |
| புவனேஸ்வரி மகத்துவம் | -25 |
| பிராசாததீபம் (அச்சில்) | |
| சைவகாலப் பகுப்பு | -75 |
| சங்கரபண்டிதர் சரித்திரம் (பண்டிதர் ஞர்பகார்த்த சபை வெளியீடு) | -50 |
| சைவ சாத்திரபரிபாலனம் (முதற்பகுதி) | 1-00 |
| சைவப்பிரகாசிகை 1ம் புத்தகம் | -30 |
| ,, 2ம் ,, | -40 |
| ,, 3ம் ,, | -50 |
| ,, 4ம் ,, | -60 |
| ,, 5ம் ,, | 1-00 |
| மூர்த்தியலங்காரவிதி | -35 |